यत्तूक्तं सामान्यान्विताभिधायित्वं विशेषान्विताभिधायित्वं च पदानामनुपपन्नं इति, तदसत्। सामान्यान्विताभिधानेऽपि तावत् आकाङ्क्षादिमतामेव अर्थानां अन्विताभिधायकत्वं इति[1] नियमात् विशिष्टवाक्यार्थप्रतीत्युपपत्तेः। विशेषान्विताभिधान-पक्षेऽपि आकाङ्क्षादित्रयस्य सम्बन्धग्रहणं प्रति उपाधित्वाभ्युपगमात् एकत्र गृहीत-सम्बन्धस्य प्रयोगान्तरे पदार्थान्तरान्वयेऽपि तदुपाधिवशेनैव पुनः सम्बन्धग्रहणमनपेक्ष्या-न्वितप्रतिपत्त्युपपत्तेः। तस्मात् अभिहितान्वयपक्षे अनेकशक्तिकल्पनाप्रसङ्गात्, सङ्गतिग्रहणस्य च पदानां[3] अन्वितार्थविषयत्वात्, वाक्यार्थस्य[4] च अशाब्दत्वप्रस-ङ्गात्, पदार्थनामधेयापूर्वप्रमाणपरिकल्पनाप्रसङ्गात्, वाक्यार्थप्रतिपत्तेः पदानां अन्वि-ताभिधायकत्वेऽपि विरोधाभावात्, अपगतनिखिलदोषव्रातं अन्विताभिधानमेव न्याय्यं न्यायविदो मन्यन्ते।

इति तत्त्वशुद्धौ अन्विताभिधानप्रकरणम्।

*(To be continued)*

१. E omits इति
२. B: प्रतिपत्त्युपपत्तेः
३. A E: पदार्थविषयत्वात्
४. E: धात्वर्थ

740. மாலமர் நெடுங்கடல் மதலை பற்றிலாக்
காலமைந் தொழுகுமேற் கரையுங் காணுமே
நூலமர் நுழைவொடு நுழைந்து செல்லுமேல்
வேலவ ரொழுக்கமும் வேலை காணுமே.

(சூளா. இரதநூ. 117)

741. நீதி யாலறுத் தந்நிதி யீட்டுதல்
ஆதி யாய வரும்பகை நாட்டுதல்
மோதி முள்ளொடு முட்பகை கண்டிடல்
பேது செய்து பிளந்திடல் பெட்டதே.

(சிந்தா. 1920)

742. ஆயிரங் கதிருடை யருக்கன் பாம்பினால்
ஆயிரங் கதிரொடு மழுங்கக் கண்டுகொல்
ஆயிரங் கண்ணுடை யமரர் கோனுமோ
ராயிர மமைச்சர்சொல் வழியி னுயதே.

(சாந்தி.)

743. உற்றது கொண்டு மேல்வந் துறுபொரு ளுணர்வா ருற்றால்
மற்றது வினையின் வந்த தாயினு மாற்ற லாற்றும்
பெற்றியர் பிறப்பின் மேன்மைப் பெரியவ ரரிய நூலுங்
கற்றவர் மான நோக்கிற் கவரிமா வனைய நீரார்.

(இராமாவ. மந்திர. 7)

744. நல்லவுந் தீயவு நாடி நாயகற்
கெல்லையின் மருத்துவ ரியல்பி னெண்ணுவார்
ஒல்லைவந் துறுவன வுற்ற பெற்றியிற்
றொல்லைநல் வினையென வுதவுஞ் சூழ்ச்சியார்.

( ,, 10)

745. தம்முயிர்க் குறுதி யெண்ணார் தலைமகன் வெகுண்ட போதும்
வெம்மையைத் தாங்கி நீதி விடாதுநின் றுரைக்கு மெய்யர்
செம்மையிற் றிறம்பல் செல்லாத் தேற்றத்தார் தெரியுங் கால
மும்மையு முணர வல்லா ரொருமையே மொழியு நீரார்.

( ,, 9)

## அதி. 72. சொல்வன்மை

746. கேட்பாரை நாடிக் கிளக்கப் படும்பொருட்கண்
வேட்கை யறிந்துரைப்பர் வித்தகர்—வேட்கையால்
வண்டு வழிபடரும் வாட்கண்ணாய் தோற்பன
கொண்டு புகாஅ ரவை.

(பழமொழி, 4.)

---

**740.** 4 யாசிலாக்; 12 செல்வரேல், வெல்லுமேல்; 16 நண்ணுமே. **741.** 2 யான்மறுத்; 3 தன்னிதி, திந்நிதி, தன்னெதி; 11 முட்புடை; 12 கொண்டிடல்; 14 பெய்து. **742.** 7 (ம்) விழுங்கக்; 15 வழிய; 16 னுனதே. **743.** 6 னுற்றால்; 12 வாற்றும். **744.** 4 நாயகர்க். **745.** 3 யெண்ணாத்; 8 தாங்க; 12 மெய்யார்; 14 றப்பல்; 16 தேற்றத்தால்; 18 காலே; 20-21 முடைய ரல்லா; 22 ரொருமையை. **746.** 3 கிளத்தப்; 6 யறிந்துரைப்ப; 12 தோற்பது.

747. நல்லவுந் தீயவு நாடிப் பிறருரைக்கும்
நல்ல பிறவு முணர்வாரைக் கட்டுரையின்
வல்லிதி னொடி வலிப்பதே புல்லத்தைப்
புல்லம் புறம்புல்லு மாறு.

(பழமொழி, 104)

748. முன்னி யிருவர் தொடங்கிய மாற்றத்திற்
பின்னை யுரைக்கப் படற்பாலான்—முன்னி
மொழிந்தால் மொழியறியான் கூறல் முழுந்தாள்
கிழிந்தானை மூக்குப் பொதிவு.

( ,, 347)

749. ஒருவ னுரைப்ப வுரைத்தா லதுகொண்
டிருவரா வாரும் எதிர்மொழியற் பாலா
பெருவரை நாட சிறிதேனு மின்னா
திருவ ருடனாடல் நாய்.

( ,, 352)

750. மாற்றத்தை மாற்ற முடைத்தலான் மாற்றவர்க்
காற்றும் வகையா னவர்க்களைய வேண்டுமே
வேற்றுமை யார்க்குமுண் டாதலா னாற்றுவான்
நூற்றுவரைக் கொண்டு விடும்.

( ,, 369)

751. விரைந்துரையார் மேன்மே லுரையார்பொய் யாய
பரந்துரையார் பாரித் துரையார்—ஒருங்கெனைத்துஞ்
சில்லெழுத்தி னானே பொருளடங்கக் காலத்தாற்
சொல்லுக செவ்வி யறிந்து.

(ஆசார. 76)

752. மயிர்வனப்புங் கண்கவ்வு மார்பின் வனப்பும்
உகிர்வனப்புங் காதின் வனப்புஞ்—செயிர்தீர்ந்த
பல்லின் வனப்பும் வனப்பல்ல நூற்கியைந்த
சொல்லின் வனப்பே வனப்பு.

(சிறுபஞ்ச. 36)

753. சாவ தெளிதரிது சான்றாண்மை நல்லது
மேவ லெளிதரிது மெய்போர்த்தல்—ஆவதன்கண்
சேற லெளிது நிலையரிது தெள்ளியரா
வேற லெளிதரிது சொல்.

(ஏலாதி, 39)

---

**747.** 7 முணரவாரைக்; 8 கண்டுரையின்; 11 வலப்பதே. **748.** 10 மொழியான; 11 கூடல்; 13 கழிந்தானை. **749.** 2 ருவைப்ப; 5-6 டிருவர வானும்; **6-8** வானும் எதிர்மொழியற் பாலான்; 7-8 எதிர்மொழியற் பாலர்; 9 பொருவரை; 11 சிறிதெனினு; 12 மன்னு; 14 ருடன்விட்ட. **750.** 4 மற்றவர்க்; 6 பகையா; 7 னவாகளைய; 9 வேற்றுடை; 12 னூற்றவர்; **14** கொன்று. **751.** 1 விரிந்துரையார்; 8 நெருங்கினைத்துஞ், ஒருங்கனைத்துஞ். **752.** 2 கண்கவரு, கண்வனப்பு; 6 காலின்; 12 நூற்கிசைந்த, நூற்கியைந்தோர். **753.** 7 மெய்யோர்தல், மெய்போர்த்தல்; 10 லரிது; 11 நிலைதிரியா; 12 தெள்ளியர்; 12 - 13 தெள்ளியார்த் தேற.

754. நுண்மொழி நோக்கிப் பொருள்கொளலும் நூற்கேலா
வெண்மொழி வேண்டினுஞ் சொல்லாமை—நன்மொழியைச்
சிற்றின மல்லார்கட் சொல்லலு மிம்மூன்றும்
கற்றறிந்தார் பூண்ட கடன்.

(திரிகடு. 32)

755. பொழிப்பகலம் நுட்பநூ லெச்சமிந் நான்கிற்
கொழித்தகலங் காட்டாதார் சொற்கள்—பழிப்பில்
நிரையாமா சேக்கு நெடுங்குன்ற நாட
உரையாமோ நூலிற்கு நன்கு.

(நாலடி, 319)

756. சொல்லுங்காற் சொல்லின் பயன்காணுந் தான்பிறர்
சொல்லிய சொல்லை வெலச்சொல்லும் பல்லார்
பழித்தசொற் றீண்டாமற் சொல்லும் விழுத்தக்க
கேட்டார்க் கினியவாச் சொல்லானேற் பூக்குழலாய்
நல்வய லூர னறுஞ்சாந் தணியகலம்
புல்லலி னூட லினிது.

(தகடூர்.)

## அதி. 73. வினைசெயல்வகை

757. மறையா தினிதுரைத்தல் மாண்பொரு ளீதல்
அறையா னகப்படுத்துக் கோடல்—முறையால்
நடுவணுச் சென்றவரை நன்கெறித லல்லால்
ஒடியெறியத் தீரா பகை.

(பழமொழி, 387)

758. தெள்ளி யுணரும் திறனுடையார் தம்பகைக்
குள்வாழ் பகைவர்ப் பெறுத லுறுதியே
கள்ளினாற் கள்ளறுத்தல் காண்டும் அதுவன்றே
முள்ளினான் முட்களையு மாறு.

( ,, 54)

759. யானுமற் றிவ்விருந்த வெம்முன்னு மாயக்கால்
ஈனஞ் செயக்கிடந்த தில்லென்று—கூறாற்
படைமாறு கொள்ளப் படைநின்ற லஃதே
இடைநாய்க் கெலும்பிடு மாறு.

( ,, 73)

760. தன்னலி கிற்பான் தலைவரிற் றானவற்குப்
பின்னலி வானைப் பெறல்வேண்டும்—என்னதூஉம்
வாய்முன்ன தாக வலிப்பினும் போகாதே
நாய்பின்ன தாகத் தகர்.

( ,, 156)

---

**754.** 1 வண்மொழி; 11 சொல்லுதலு, செல்லலு; 13 கற்றறிந்தான். **755.** 3-4 லெச்சமென் றாற்ற; 9 நிரையமா, நரையாமா; 13 உரையாமே. **756.** தகடூர்மாலை. 14 கினியவை; 23 லரிது. **757.** 4 ளாதல்; 7 கொண்டான், கொண்டன்; 9 நடுவணுச்; 11-12 நன்கெறியினல்லால்; 14 தீராப். **758.** 6 பகைவாய்; 7 பொறுத்த. **759.** 4 மாயத்தால்; 8 கூர்நற்; 13 நடைநாய்க்; 13-14 இடைநாயிற் கென்பிடு. **760.** 4 றானவர்க்குப்.

761. ஆணை முடைய வறிவினர் தந்நல
மானு மறிவி னவரைத் தலைப்படுத்தல்
மானமர் கண்ணாய் மறங்கெழு மாமன்னர்
யானையால் யானையாத் தற்று.

(பழமொழி, 223)

762. தெருளா தொழுகுந் திறனிலா தாரைப்
பொருளா னறுத்தல் பொருளே—பொருள்கொடுப்பப்
பாணித்து நிற்கிற்பார் யாருளரோ வேற்குத்திற்
காணியின் குத்தே வலிது.

( ,, 32)

763. மெய்ந்நீர ராகி விரியப் புகுவார்க்கும்
பொய்ந்நீர ராகிப் பொருளை முடிப்பார்க்கும்
எந்நீர ராயினு மாக அவரவர்
தந்நீர ராதல் தலை.

( ,, 395)

764. சிறையில் கரும்பினைக் காத்தோம்ப லின்னா
உறைசேர் பழங்கூரை சேர்ந்தொழுக லின்னா
முறையின்றி யாளு மரசின்னா வின்னா
மறையின்றிச் செய்யும் வினை.

(இன்னா. 6)

765. சூதினா லாகத்தன் றோள்வலியாற் றானாக
யாதினா லாயினும்வந் தெய்துமேல்—தீதெண்ணிச்
சூழ்வாரைத் தாமுன்னஞ் சூழ்வதே மன்னராய்
வாழ்வாருக் குள்ள வழக்கு.

(பாரதம்)

766. நலிவில் குன்றொடு காடுறை நன்பொருட்
புலிய ளார்மகட் கோடலும் பூமிமேல்
வலியின் மிக்கவர் தம்மகட் கோடலும்
நிலைகொள் மன்னர் வழக்கென நேர்பவே.

(சிந்தா. 1919)

## அதி. 74. தூது

767. மாண்டமைந்தா ராய்ந்த மதிவனப்பே வன்கண்மை
யாண்டமைந்த கல்வியே சொல்லாற்றல்—பூண்டமைந்த
கால மறிதல் கருதுங்காற் றூதுவர்க்கு
ஞால மறிந்த புகழ்.

(ஏலாதி, 26)

768. ஒல்லெனீர் ஞாலத் துணர்வோ விழுமிதே
நல்லிசை முச்செந்தீ நான்மறையோன்—செல்லலும்

---

**761.** 3-4 வறிவினர்க் கந்நல, வறிவினற் கன்னல; 5 மானு; 8 தலைப் படுதல்; 14 யானையார்த். **762.** 2 தொழிந்தூங்; 11 யாருளரே. **763.** 5-6 பொய்ந்நீர்மை யாகிப்; 8 முடியார்க்கும்; 9-11 மைந்நீர ராயினு மாகா. **764.** 5 துறைசேர்; 7 சோர்ந்தொழுக; 10 (ச்) செய்யு. **765.** 2 னாகதன்; 3-4 றோள்வலி யின்னாக, றோள்வலி யானாக. **766.** 11 தம்மக்கட். **767.** 2 ராய; 5 மாண்டமைந்த. **768.** 1 ஒல்லலீர்; 6 முற்சேர்ந்த; 12-13 வெம் பகையி னன்றன்றி; 13 யின்றன்றி; யின்னன்றி.

வென்றன்றி மீளா விறல்வேந்தர் வெம்பகை
யென்றன்றி மீண்ட திலர்.

(வெண்பா. 172)

769. செருக்குடை மன்ன ரிடைப்புக் கவருள்
ஒருத்தற் குதவாத சொல்லிற் றனக்குத்
திருத்தலு மாகாது தீதா மதுவே
எருத்திடை வைக்கோல் தினல்.

(பழமொழி, 187)

770. ஒருவ ரகத்தொருவ ருண்டுடுத்துத் தம்மின்
மருவி மனமகிழ்வ ராயிற்—செருமுனையின்
மன்னைப்போர் செய்யு மழைமதமால் யானையாய்
பின்னைப்போர் தக்கதோ பேசு.

(பாரதம், 165)

771. செல்லுங்காற் றேயத் தியநெறிந்து சென்றக்கால்
புல்லிய சுற்றம் புணர்வறிந்து—புல்லார்
மனத்தாற் பிரித்து வலியா னுதவும்
இனத்தாற் றெரிவது தூது.

( ,, )

772. தடுமாற்ற மின்றித் தகைசான்ற சொல்லான்
வடுமாற்றம் வாய்சோரா னாகி—விடுமாற்றம்
அஞ்சாது கூறி யிகல்வேந்தன் சீறுங்கால்
அஞ்சா தமைவது தூது.

( ,, )

773. படையளவு கூறுர் பெரியார்முன் மாற்றார்
படையளவிற் றென்று வியவார்—கொடைவேந்தன்
ஈத்ததுகண் டின்புறு ரேந்திழையார் தோள்சேரார்
பாத்திபர்தூ தாயடைந்தார் பண்பு.

( ,, )

774. தானறிந்து கூறுந் தலைமற் றிடையது
கோனறைந்த தீதென்று கூறுமால்—தானறியா
தோலையே காட்டுங் கடையென் றொருமூன்று
மேலையோர் தூதுரைத்த வாறு.

( ,, )

775. அன்புடைமை யாய்ந்த வறிவுடைமை யிற்பிறப்பு
நன்குடைமை நல்ல நயனுடைமை—நன்கமைந்த
சுற்ற முடைமை வடிவுடைமை சொல்வன்மை
கற்றடங்கல் தூதின் கடன்.

( ,, )

---

769. 1 நெருக்குடை; 6 குருதாது; 14-15 வைக்கொன் றிலன். 770. 5 மருவின். 771. 5-6 புல்லிப் பசுமை; 8 புல்லி; 10 பிரிந்து; 12 வுதவும். 772. 4 சொல்லன். 773. 3 வெறியார்முன்; 4 தான்மாற்றூர்; 5 படையள வின். 774. 3 தலைமாற்; 5 கோன்றந்த, கோனறிந்த, கோனறிந்து.

776. கால வெகுளிப் பொறையகேள் நம்பியைச்
சாலுந் துணையுங் கழறிச் சிறியதோர்
கோல்கொண்டு மேற்சேறல் வேண்டா வதுகண்டாய்
நூல்கண்டார் கண்ட நெறி.

(தகடூர்.)

777. ஆதிநா லமைச்சர்க் கோது மாண்பெலா மமைந்து நின்றான்
தூதனைச் செல்லிற் செல்லாச் சூழ்பொரு ளில்லை போலாம்
ஏதிலார்க் காவ துண்டே யின்னன புகுந்த போதிற்
கோதிலாக்குணங்கள்தேற்றிக்கொழித்துரைகொடுத்தலென்றான்.

(சூளா. தூது. 136)

778. மந்திரக் கிழவர் கண்ணு மக்கடன் றுள்க ளாகச்
சுந்தர வயிரத் திண்டோள் தோழராச் செவிக ளொற்று
அந்தர வுணர்வு நூலா வரசெனு முருவு கொண்ட
யந்திர மிதற்கு வாயாத் தூதுவ ரியற்றப் பட்டார்.

( ,, 135)

779. கற்றவர் கற்றன கருதுங் கட்டுரைக்
குற்றன வுற்றன வுரைக்கு மாற்றலான்
மற்றவன் மரிசியே யவனை நாள்விடச்
சுற்றமுங் கருமமுஞ் சொல்ல வல்லனே.

(மந்திர. 189)

780. இவ்வே, பீலி யணிந்து மாலை சூட்டிக்
கண்டிர ணோன்காழ் திருத்தி நெய்யணிந்து
கடியுடை வியனக ரவ்வே யவ்வே
பகைவர்க் குத்திக் கோடுநுதி சிதைந்து
கொற்றுறைக் குற்றில மாதோ வென்றும்
உண்டாயிற் பதங்கொடுத்
தில்லாயி னுடனுண்ணும்
இல்லோ ரொக்கற் றலைவன்
அண்ணலெங் கோமான் வைந்நுதி வேலே.

(புறம், 95)

781. இரும்பனை வெண்டோடு மலைந்தோ னல்லன்
கருஞ்சினை வேம்பின் றெரியலோ னல்லன்
நின்ன கண்ணியு மார்மிடைந் தன்றே, நின்னொடு
பொருவோன் கண்ணியு மார்மிடைந் தன்றே
ஒருவிர் தோற்பினுந் தோற்பநுங் குடியே
இருவிர் வேற லியற்கையு மன்றே, அதனால்
குடிப்பொரு ளன்றுநுஞ் செய்தி கொடித்தேர்

---

**776-808.** இச்செய்யுட்கள் மதுரைச்சங்கத்துப் பிரதியொன்றில்இல்லை. **777.** 9 சொல்லாச்; 15 துண்டோ; 22 கொழிந்துரை. **778.** 5 றாளா; 6 ளாச்; 13-14 அந்தண ருணர்வு. **780.** 2, 1-2 கண்டீர் நோன்காழ்; 2,2 சென்னகாழ்; 4, 3 கோடுநுனி, கோடுநுழை, கோடுநனி; 5, 4 வொன்றும்; 9, 1-2 அண்ண லெங்கோன். **781.** 1,2 வெண்டார்; 1, 3 மிலைந்தோ; 2, 1 கடுஞ்சினை; 5, 1 ஒருவீர்; 6, 1 இருவீர், இருவர்; 7, 3 செயல்.

நும்மோ ரன்ன வேந்தர்க்கு
மெய்ம்மலி யுவகை செய்யுமிவ் விகலே.

(புறம், 45)

782. வயலைக் கொடியின் வாடிய மருங்கின்
உயவை லூர்திப் பயலைப் பார்ப்பான்
எல்லி வந்து நில்லாது புக்குச்
சொல்லிய சொல்லோ சிலவே யதற்கே
ஏணியுஞ் சீப்பு மாற்றி
மாண்வினை யானையு மணிகளைந் தனவே.

( ,, 305)

783. இரும்பிடித் தொழுதியொடு பெருங்கயம் படியா
நெல்லுடைக் கவளமொடு நெய்ம்மிதி பெறாஅ
திருந்தரை நோன்வெளில் வருந்த வொற்றி
நிலமிசைப் புரளுங் கைய வெய்துயிர்த்
தலமரல் யானை யுருமென முழங்கவும்
பாலில் குழவி யலறவு மகளிர்
பூவில் வறுந்தலை முடிப்பவு நீரில்
வினைபுனை நல்லி லினைகூஉக் கேட்பவும்
இன்னா தம்ம வீண்டினி திருத்தல்
துன்னருந் துப்பின் வயமான் றோன்றல்
அறவை யாயி னினதெனத் திறத்தல்
மறவை யாயிற் போரொடு திறத்தல்
அறவையு மறவையு மல்லை யாகத்
திறவா தடைத்த திண்ணிலைக் கதவின்
நீண்மதி லொருசிறை யொடுங்குதல்
நாணுத் தகவுடைத் திது காணுங் காலே.

( ,, 44)

784. அடுநை யாயினும் விடுநை யாயினும்
நீயளந் தறிதிநின் புரைமை வார்கோற்
செறியரிச் சிலம்பிற் குறுந்தொடி மகளிர்
பொலஞ்செய் கழங்கிற் றெற்றி யாடுந்
தண்ணான் பொருநை வெண்மணற் சிதையக்
கருங்கைக் கொல்ல னரஞ்செ யவ்வாய்
நெடுங்கை நவியம் பாய்தலி னிலையழிந்து
வீகமழ் நெடுஞ்சினை புலம்பக் காவுதொறுங்
கடிமரந் தடியு மோசை தன்னூர்
நெடுமதில் வரைப்பிற் கடிமனை யியம்ப
ஆங்கினி திருந்த வேந்தனொ டீங்குநின்
சிலைத்தார் முரசங் கறங்க
மலைத்தனை யென்பது நாணுத்தக வுடைத்தே.

( ,, 36)

---

**783.** 5, 1 தலமரல்; 10,2 (ங) கதுப்பின்; 13, 4 யாகித், யாகில்.
**784.** 5, 4 சிதைஇக்; 7, 4 னவியழிந்து; 12, 1 றிலைத்தார்.

785. ஒளிவிடு பசும்பொ னோடை சூட்டிய
வெளிறில் வெண்கோட்ட களிறுகெழு வேந்தே
வினவுதி யாயிற் கேண்மதி சினவா
தொருகுடர்ப் படுதா வோரிரை துற்றும்
இருதலைப் புள்ளி னோருயிர் போல
அழிதரு வெகுளி தாங்காய் வழிகெடக்
கண்ணுறு பொழுதிற் கைபோ லெய்தி
நம்மூர்க்கு, நீதுணை யாகலு முளையே நோதக
முன்னவை வரூஉங் காலை நம்மு
னுமக்குத்துணை யாகலு முரிய னதனாற்
றொடங்க வரிய வினைபெரி தாயினும்
அடங்கல் வேண்டுமதி யத்தை யடங்கான்
துணையிலன் றமியன் மன்னும் புணையிலன்
பேர்யா றெதிர்நீந்து மொருவ னதனைத்
தாழ்த லன்றோ வரிது தலைப்படுதல்
வேண்டிற் பொருந்திய
வினையி னடங்கல் வேண்டும்
அனைய மாகீண் டறிந்திசி னோர்க்கே.

(தகடூர்.)

786. மொய்வேற் கையர் முரசெறிந் தொய்யென
வையக மறிய வலிதலைக் கொண்ட
திவ்வழி யென்றி யியறுர் மார்ப
எவ்வழி யாயினு மவ்வழித் தோன்றித்
திண்கூ ரெஃகின் வயவர்க் காணிற்
புண்கூர் மெய்யி னுராஅய்ப் பகைவர்
பைந்தலை யெறிந்த மைந்துமலி தடக்கை
யாண்டகை மறவர் மலிந்துபிறர்
நீண்டற் காகாது வேந்துடை யரணே.

( ,, )

## அதி. 75. மன்னரைச் சேர்ந்தொழுகல்

787. விடலைமை செய்ய வெருண்டகன்று நில்லா
தடலரு மன்ன ருவப்ப வொழுகின்
மடலணி பெண்ணை மலிதிரைச் சேர்ப்ப
கடல்படா வெல்லாம் படும்.

(பழமொழி, 225)

---

**785.** இதுவும் அடுத்த செய்யுளும் ஒரு பிரதியிற் காணப்பெறவில்லை; வேறொரு பிரதியில் இவை அடுத்த அதிகாரத்தின் முதலிரண்டு செய்யுட்களாக வுள்ளன. 1, 4 சூடிய; 4, 2 படுத்த; 4, 3 வேளிரை; 8, 1 நம்மூர்க்கு; 8, 3 யாதலு; 8,5 நோக்கு; 9, 1 முன்னென; 9, 4 நம்பி, நும்மி; 14, 2-4 றெதிர்ந்து நீந்துமொரு வனதனகத்; 15, 2 லொன்றோ; 15,4 கரைப்படுதல்; 16, 1 வேண்டியிற். **786.** தகடூர்மாலை. 1, 1 மெய்வேற்; 2, 3 மலைத்தலைக்; 3,1 தெவ்வழி; 3,3 யியன்றூர்; 5, 3 வயவற்; 6, 3-4 னராஅ யப்பகை; 7, 2 யெறிந்ததம்; 8, 3 மலிந்துபின்; 9,4 யோனே. **787.** 3 வெருண்டகன்று; 9 மடன்மணி.

788. ஆண்டகை மன்னரைச் சேர்ந்தா ரலவுறினும்
ஆண்டொன்றும் வேண்டுது மென்ப துரையற்க
பூண்டகு மார்ப பொருடக்கார் வேண்டாமை
வேண்டிய தெல்லாந் தரும்.

(பழமொழி, 178)

789. வெற்றிவேல் வேந்தன் வியங்கொண்டால் யாமொன்றும்
பெற்றிலே மென்பது பேதைமையே—மற்றதனை
ஐய மிலராகிச் செய்க வதுவன்றே
செய்கென்றா னுண்கென்னு மாறு.

( ,, 181)

790. பன்னாள் தொழில்செய் துடைய கவர்ந்துண்டார்
இன்னாத செய்யாமை வேண்டி யிறைவர்க்குப்
பொன்யாத்துக் கொண்டு புகுதல் குவளையைத்
தன்னாரால் யாத்து விடல்.

( ,, 365)

791. வேந்தன் மதித்துணரப் பட்டாரைக் கொண்டேனை
மாந்தரு மாங்கே மதித்துணர்ப—ஆய்ந்த
நலமென் கதுப்பினாய் நாடினெய் பெய்த
கலமேநெய் பெய்து விடும்.

( ,, 397)

792. செருக்கெழு மன்னர்த் திறலுடையார் சேர்ந்தால்
ஒருத்தரை யஞ்சி யுலைதலு முண்டோ
உருத்த சுணங்கி னொளியிழையாய் கூரி
தெருத்து வலியதன் கொம்பு.

( ,, 76)

793. காவலனை யாக வழிபட்டான் மற்றவன்
ஏவல் வழிசெய் திருந்தார்க் குதவுதல்
ஆவணைய நின்றதன் கன்று முலையிருப்பத்
தாயணல் தான்சுவைத் தற்று.

( ,, 20)

794. எமரிது செய்க வெமக்கென்று வேந்தன்
தமரைத் தலைவைத்த காலைத்—தமரவற்கு
வேலின்வா யாயினும் வீழ்வார் மறுத்துரைப்பின்
ஆலென்னிற் பூலென்னு மாறு.

( ,, 31)

795. சிறிதாய கூழ்பெற்றுச் செல்வரைச் சேர்ந்தாற்
பெரிதாய கூழும் பெறுவர்—அரிதாம்
இடத்து ளொருவ னிருப்புழிப் பெற்றாற்
கிடப்புழியும் பெற்று விடும்.

( ,, 235)

---

**788.** 4 லலவுறினும், லறிவுறினும்; 11 பொருட்காகா. **789.** 2 மன்னன்; 7 பேதைமை. **790.** 3 துடையார்; 8 யிறைவற்குப்; 14 யார்த்து. **791.** 11 நாடிநெய்; 12 பெய்தால். **792.** 1 செருக்குடை; 3 திறனுடையார்; 5 ஒருத்தனை; 14 வலியெதன். **794.** 11 வீழ்வர்; 12 மறத்துரைப்பின்; 14 பூலென்று. **795.** 8 சிறிதாம்; 9-10 இடத்தி னொருவ; 11 னிருப்புழியும்.

796. ஆற்ற வினைசெய்தார் நிற்பப் பலவுரைத்
தாற்றுதார் வேந்தனை நோவது—சேற்றுள்
வழாஅமைக் காத்தோம்பி வாங்கு மெருத்தும்
எழாஅமைச் சாகா டெழல்.
(பழமொழி, 155)

797. சிறப்புடை மன்னரைச் செவ்வியா னோக்கித்
திறத்தி னுரைப்பார்க்கொன் றுகாத தில்லை
விறற்புகழ் மன்னர்க் குயிரன்ன ரேனும்
புறத்தமைச்சி னன்றகத்துக் கூன்.
( ,, 295)

798. மன்னர் திருவு மகளி ரெழினலமுந்
துன்னியார் துய்ப்பர் தகல்வேண்டா—துன்னிக்
குழைகொண்டு தாழ்ந்த குளிர்மர மெல்லாம்
உழைதங்கட் சென்றார்க் கொருங்கு.
(நாலடி, 167)

799. கடைவிலக்கிற் காயார் கழிகிழமை செய்யார்
கொடையளிக்கட் பொச்சாவார் கோலநேர் செய்யார்
இடையறுத்துப் போகிப் பிறனொருவற் சேரார்
கடைபெருகி வாழ்துமென் பார்.
(ஆசார. 66)

800. முனியார் துனியார் முகத்தெதிர் நில்லார்
தனிமை யிடத்துக்கண் தங்கருமஞ் சொல்லார்
இனியவை யாமறிது மென்னார் கரிதன்று
காக்கைவெள் ளென்னு மெனின்.
( ,, 69)

801. உமிவு முயர்ந்துழி யேறலும் பாகும்
வகையி னுரையும் வளர்ச்சியு மைந்தும்
புணரார் பெரியா ரகத்து.
( ,, 70)

802. இறைவர்முற் செல்வமுங் கல்வியுந் தேசும்
குலனுங் குணனுடையார் கூறார் பகைவர்போற்
பாரித்துப் பல்காற் பயின்று.
( ,, 71)

803. நின்றக்கால் நிற்க வடக்கத்தா லென்றும்
இருந்தக்கா லேவாமை யேறார்—பெருந்தக்கார்
சொல்லிற் செவிகொடுத்துக் கேட்டீக மீட்டும்
வினவற்க சொல்லொழிந்தக் கால்.
( ,, 74)

804. தம்மேனி நோக்கார் தலையுளரார் கைந்நொடியார்
எம்மேனி யாயினு நோக்கார் தலைமகன்
தன்மேனி யல்லாற் பிற.
( ,, 77)

---

**796.** 11 வாழு; 12 மெருதும். **797.** 1 சிறப்புடைய; 2 மன்னவரைச்; 10 மன்னரற்;11 குயிரல்ல; 14 னன்றகத்திற். **798.** 13 உழைதன்கட். **799.** 4 பேசார்; 5 கொடையளிக்கப்; 7 கோனேவ; 9 இடையிறுத்துப்; 10 போகிற்; 13 கடைபோக. **800.** 2 துணியார்; 14 ளென்று; 15 மெனல். **801.** 1 உமியு, உமிழ்வு. **803.** 12 மீட்டு. **804.** 10 யல்ல.

805. பிறரொடு மந்திரங் கொள்ளா ரிறைவனைச்
சாரார் செவியோரார் சாரிற் பிறிதொன்று
தேர்வார்போல் நிற்க திரிந்து.
(ஆசார. 78)

806. நிரைபடச் செல்லார் நிழல்மிதித்து நில்லார்
உரையிடைப் பாய்ந்துரையா ரூர்முனிவ செய்யார்
அரசர் படையளவுஞ் சொல்லாரே யென்றும்
புரைதீர்ந்த காட்சி யவர்.
( ,, 83)

807. அறத்தொடு கல்யாண மாள்வினை கூரை
இறப்பப் பெருகியக் கண்ணுந்—திறப்பட்டார்
மன்னரின் மேம்படச் செய்யற்க செய்பவேல்
மன்னிய செல்வங் கெடும்.
( ,, 85)

808. அளையுறை பாம்பு மரசு நெருப்பு
முழையுறை சீயமு மென்றிவை நான்கும்
இளைய வெளிய பயின்றனவென் றெண்ணி
இகழி னிழுக்கந் தரும். ( ,, 84)

## அதி. 76. குறிப்பறிதல்

809. வெள்ளம் வருங்காலை யீர்ப்படுக்கு மஃதேபோற்
கள்ள முடையாரைக் கண்டே யறியலாம்
ஒள்ளமர்க் கண்ணா யொளிப்பினு முள்ளம்
பரந்ததே கூறு முகம்.
(பழமொழி, 41)

810. நோக்கி யறிகல்லாத் தம்முறுப்புக் கண்ணாடி
நோக்கி யறிப வதுவேபோல்—நோக்கி
முகனறிவார் முன்ன மறிப வதுவே
மகனறிவு தந்தை யறிவு.
( ,, 301)

811. பேருலையுட் பெய்த வரிசியை வெந்தமை
யோரவிழி னாலே யுணர்ந்தாங்கு—யார்கண்ணுங்
கண்டதனாற் காண்டலே வேண்டுமாம் யாதற்குங்
கண்டது காரணமா மாறு.
( ,, 348)

812. நினைத்த திதுவென் றந் நீர்மையைப் பார்த்து
மனத்த தறிந்தீவர் மாண்டார்—புனத்த
குடிஞை யிரட்டுங் குளிர்வரை நாட
கடிஞையுட் கல்லிடுவா ரில். ( ,, 246)

---

**805**. 3 கொள்வா; 7 சாற்றிற்; 9 தேர்வான்போல். **806**. 1. நிரல் படச்; 2 சொல்லார்; 4 நல்லார்; 10 படையளவு; 11 செல்லாரே. **807**. 8 திறப்பட்ட, திறப்பட; 10 மேம்பட்ட. **808**. 11 பயின்றவென். **810**. 2 யறி கல்லார்; 3 தம்முரு, தம்முறு, தம்முறுப்பு; 6-7 யறிவது வேபோல; 9 முகன றியார். **811**. 1 பேருலையிற்; 5 யோர்விழியி; 10 காணவே; 15 மற்று. **812**. 10 யாற் றுங்.

813. நாற்ற முரைக்கு மலருண்மை கூறிய
மாற்ற முரைக்கும் வினைநலந் தூக்கின்
அகம்பொதிந்த தீமை முகனுரைக்கு மெல்லா
முகம்போல முன்னுரைப்ப தில்.
(நான்மணி. 46)

814. மகனுரைக்குந் தந்தை நலத்தை யொருத்தன்
முகனுரைக்கு முண்ணின்ற வேட்கை—அகனீர்ப்
பிலத்தியல்பு புக்கா னுரைக்கும் நிலத்தியல்பு
வான முரைத்து விடும்.
( ,, 69)

815. புகைவித்தாப் பொங்கழல் தோன்றுஞ் சிறந்த
நகைவித்தாத் தோன்று முவகை—பகையொருவன்
முன்னம்வித் தாக முளைக்கு முளைத்தபின்
இன்னாவித் தாகி விடும்.
( ,, 31)

816. சொல்லா னறிப வொருவனை மெல்லென்ற
நீரா னறிப மடுவினை யார்கண்ணும்
ஒப்புரவி னானறிப கண்ணோட்ட மெய்க்கண்
மகிழா னறிப நறா.
( ,, 78)

## அதி. 77. அவையறிதல்*

817. நடலை யிலராகி நன்றுணரா ராய
முடலை முழுமக்கள் மொய்கொ ளவையுள்
உடலா வொருவற் குறுதி யுரைத்தல்
கடலுளால் மாவடித் தற்று.
(பழமொழி, 72)

818. அறிவன் றழகன் றறிவதூஉ மன்று
சிறிய ரெனற்பாடுஞ் செய்யும்—எறிதிரை
சென்றுலாஞ் சேர்ப்ப குழுவத்தார் மேயிருந்த
குன்றா டறப்பினு மன்று.
( ,, 207)

819. கல்வி யகலமுங் கட்டுரை வாய்பாடுங்
கொல்சின வேந்த னவைகாட்டு—மல்கித்
தலைப்பெய் திழிதரூஉந் தண்புனல் நீத்த
மலைப்பெயல் காட்டுந் துணை.
( ,, 264)

820. கல்வியி னாய கழிநுட்பங் கல்லார்முற்
சொல்லிய நல்லவுந் தீயவாம்—எல்லா

---

**813.** 9 அகம்பொதி. **814.** 4 யொருவன்; 6 முன்னின்ற; 8 அகநீர்ப்; 9 புலத்தியல்பு, பிலத்தியலப். **815.** 1 புகைவித்தாய்ப்; 5 நகைவித்தாய்த்; **816.** இது சில பிரதிகளில் இல்லை; ஒரு பிரதியில் ‘அறிவன்’ (818) என்பதன்பின். 3 வறிவினை; 11 சான்றாண்மை; 12 மிக்க; 13 மகிழ்வா; 13-14 மகிழ்பா லறிப; 14 லறிக. * இவ்வதிகாரம் 819-வது செய்யுளிலிருந்து தொடங்குகிறது. **818.** 3 றறிவது; 5 சிறியா; 12 மேவிருந்த. **819.** 10 யழிதருங். **820.** 1 கல்வியா; 9 மிகவரை; 14 காடுமொன்.

மிவர்வரை நாட தமரையில் லார்க்கு
நகரமுங் காடுபோன் றுங்கு.

(பழமொழி, 3)

821. கல்லா தவரிடைக் கட்டுரையின் மிக்கதுபோற்
பொல்லாத தில்லை யொருவற்கு—நல்லாய்
இழுக்கத்தின் மிக்க விழிவில்லை யில்லை
ஒழுக்கத்தின் மிக்க வுயர்வு.

( ,, 64)

822. அல்லவையுட் டோன்றி யலவலைத்து வாழ்பவர்
நல்லவையுட் புக்கிருந்து நாவடங்காக்—கல்வி
யளவிறந்து மிக்கா ரறிவெள்ளிக் கூறல்
மிளகுளு வுண்பான் புகல்.

( ,, 326)

823. பாடமே யோதிப் பயன்றெரிதல் தேற்றாத
மூடர் முனிதக்க சொல்லுங்காற்—கேடருஞ்சீர்ச்
சான்றோர் சமழ்த்தனர் நிற்பவே மற்றவரை
யீன்றாட் கிறப்பப் பரிந்து.

(நாலடி, 316)

824. மெய்ஞ்ஞானக் கோட்டி யுறழ்வழி விட்டாங்கோர்
அஞ்ஞானந் தந்திட் டதுவாங் கறத்துழாய்க்
கைஞ்ஞானங் கொண்டொழுகுங் காரறி வாளர்முன்
சொன்ஞானஞ் சோர விடல்.

( ,, 311)

825. சொற்றாற்றுக் கொண்டு சுனைத்தெழுதல் காமுறுவர்
கற்றாற்றல் வன்மையுந் தாந்தேறார்—கற்ற
செலவுரைக்கு மாறறியார் தோற்ப தறியார்
பலவுரைக்கு மாந்தர் பலர்.

( ,, 313)

826. தவலருந் தொல்கேள்வித் தன்மை யுடையார்
இகலில ரெஃகுடையார் தம்முட் குழீஇ
நகலி னினிதாயிற் காண்பா மகல்வானத்
தும்ப ருறைவார் பதி.

( ,, 137)

827. குடிப்பிறப் புடுத்துப் பனுவல் சூடி
விழுப்பே ரொழுக்கம் பூண்டு காமுற
வாய்மைவாய் மடுத்து மாந்தித் தூய்மையின்
காத லின்பத்துட் டங்கித் தீதறு
நடுவுநிலை நெடுநகர் வைகி வைகலும்
அழுக்கா றின்மை யவாவின்மை யென்றாங்

---

**821.** 2 வதரிடைக்; 4 மிக்கபோற்; 5 சொல்லாத; 14-15 ஊறிய மற்று. **822.** 7 நாமடங்காக்; 9 யளவறிந்து. **823.** 9 சான்றார். **825.** 3 துனைத் தெழுதல்; 5 (க்) குற்றாற்ற; 7 தாந்தேற்றார். **826.** 1 தொகலருந்; 3 தம்மை. **827.** 4, 4 தீதுறு; 5, 2 நெடுங்கா; 9, 1-2 யுடனம ரிருக்கை; 11,3 புலவாப்.

இருபெரு நிதியமு மொருதா மீட்டுந்
தோலா நாவின் மேலோர் பேரவை
யுடன்மரீஇ யிருக்கை யொருநாள் பெறுமெனிற்
பெறுகதில் லம்ம யாமே வரன்முறைத்
தோன்றுவழித் தோன்றுவழிப் புலவுப் பொதிந்து
ஞாங்கர் ஞாங்கர் நின்றுழி நில்லாது
நிலையுழி யாக்கை வாய்ப்பவிம்
மலர்தலை யுலகத்துக் கொட்கும் பிறப்பே.

(ஆசிரிய·)

## அதி. 78. நாடு

828. எண்ணி னிடரெட்டு மின்றி வயற்செந்நெற்
கண்ணின் மலரக் கருநீலம்—விண்ணின்
வகைத்தாய் வளனொடும் வைகின்றே வென்வேல்
நகைத்தாரான் தான்விரும்பு நாடு.

(வெண்பா. 205)

829. அள்ளற் பழனத் தரக்காம்பல் வாய்நெகிழ
வெள்ளந்தீப் பட்ட தெனவெரீஇப்—புள்ளினந்தங்
கைச்சிறகாற் பார்ப்பொடுக்குங் கவ்வை யுடைத்தரோ
நச்சிலைவேற் கோக்கோதை நாடு.

(முத்தொள்.)

830. நந்தி னிளஞ்சினையும் புன்னைக் குவிமொட்டும்
பந்த ரிளங்கமுகின் பாளையும்—சிந்தித்
திகழ்முத்தம் போற்றோன்றுஞ் செம்மற்றே தென்னன்
நகைமுத்த வெண்குடையா னாடு.

( ,, )

831. காவ லுழவர் களத்தகத்துப் போரேறி
நாவலோ வென்றழைக்கு நாளோதை—காவலன்றன்
கொல்யானை மேலிருந்து கூற்றிசைத்தாற் போலுமே
நல்யானைக் கோக்கிள்ளி நாடு.

( ,, )

832. நற்றவஞ்செய் வார்க்கிடந் தவஞ்செய்வார்க்கு மஃதிடம்
நற்பொருள்செய் வார்க்கிடம் பொருள்செய்வார்க்கு மஃதிடம்
வெற்றவின்பம் விழைவிப்பான் விண்ணுவந்து வீழ்ந்தென
மற்றநாடு வட்டமாக வைகுமற்ற நாடரோ.

(சிந்தா. 77)

833. சொல்லருஞ் சூற்பசும் பாம்பின் றோற்றம்போல்
மெல்லவே கருவிருந் தீன்று மேலலார்

---

**828.** 2 னிடரேழு; 4 யவற்செந்நெற்; 9-12 வகைத்தார்த் தெரியல் வளனொடு வைகிற்றே; 12 வெள்வேல். **829.** 4 வாயவிழ. **830.** 6 ரிளங்க முகம்; 10 போற்றோன்று; 11 செம்மைத்தே. **831.** 3 கடுங்களத்துப்; 5 நாவலோர்; 5-6 நாவ லெனவழைக்கு. **832.** இதன்பின் 'கரும்பிவை' (838) 'நெறிகடந்து' (839) என்பன. 10 வீழ்விப்பான்; 14 வட்டமா; 15 வைகு மற்றை. **833.** இதன்பின் 'கூற்றமில்லை' (840). 16 காய்த்ததே.

செல்வமே போற்றலை நிறுவித் தேர்ந்தநாற்
கல்விசேர் மாந்தரி னிறைஞ்சிக் காய்த்தவே.

(சிந்தா. 53)

834. மோடு கொண்டெழு மூரிக் கழைக்கரும்
பூடு கொண்ட பொதும்ப ரொளிவிராய்த்
தோடு கொண்டவை ங் காய்க்கதிர்ச் செந்நெலின்
காடு கொண்டன கண்ணக னாடெலாம்.

(சூளா. நாட்டு. 25)

835. வானிலங் கருவிய வரையு முல்லைவாய்த்
தேனிலங் கருவியு திணையுந் தேறல்சேர்
பானலங் கழனியுங் கடலும் பாங்கணி
நானிலங் கலந்துபொன் னரலு நாடதே.

( ,, 6)

836. சங்க நித்தில முங்கட லிப்பியுந்
தெங்கந் தீங்குலை யூறிய தேறலும்
வங்க வாரியும் வாரலை வாரியும்
தங்கு வாரிய தண்கட னாடெலாம்.

( ,, 26)

837. செந்நெலங் கரும்பினொ டிகலுந் தீஞ்சுவைக்
கன்னலங் கரும்புதான் கமுகைக் காய்ந்தெழும்
இன்னவை காண்கிலெ னென்று பூகமும்
முன்னிய முகில்களான் முகம்பு தைக்குமே.

(வளையா.)

838. கரும்பிவை கமுகிவை யென்று கண்டறி
வருந்துணை யுயர்தலி னருந்து மேதிகள்
கரும்புக ளிவையெனக் கணையுங் கார்ப்பொழிற்
சுரும்பிவர் கமுகினைக் குயில்கள் சொல்லுமே.

( ? )

839. நெறிக டந்து பரந்தன நீத்தமே
குறிய மிந்தன குங்குமத் தோள்களே
சிறிய வும்மவர் தேயு மருங்குலே
வெறிய வும்மவர் மென்மலர்க் கூந்தலே.

(இராமாவ. நாட்டு. 39)

840. கூற்ற மில்லையோர் குற்ற மிலாமையாற்
சீற்ற மில்லைத்தஞ் சிந்தையிற் செய்கையால்
ஆற்ற நல்லற மல்லதி லாமையால்
ஏற்ற மல்ல திழித்தக வில்லையே.

( ,, 38)

**834.** 4 (த்)தழைக்கரும்; 7-8 பொதும்பரொ ளெவிராய்த்; 12 செந் நெலிற்; 14 கொண்டது; 15-16 கண்டக நாடெலாம், தண்டக நாடெலாம். **835.** இதன்பின் 'செந்நெலங்' (837). 7 திணையுந். **836.** 11 வார்வலை; 15 கண்டக, தண்டக. **837.** 6 கரும்புதாம்; 10 காண்கல; 10-11 காண் கலே மென்று. **838.** 6 யாதலி; 11 கனையுங். **840.** 15 திழிதக; விழித்தக.

841. ஆலைவாய்க் கரும்பின் தேனு மரிதலைப் பாளைத் தேனுஞ்
சோலைவீழ் கனியின் தேனுந் தொடையவிழ் பிரசத்தின் தேனும்
மாலைவா யுக்க தேனும் வரம்பிகந் தோடி வங்க
வேலைவாய் மடுப்ப வேலை மீனெலாங் களிக்கு மாதோ.
(இராமாவ. நாட்டு. 9)

842. வரம்பெலா முத்தந் தத்து மடையெலாம் பணில மாநீர்க்
குரம்பெலாஞ் செம்பொன் மேதிக் குழியெலாங் கழுநீர்க் கொள்ளை
பரம்பெலாம் பவளஞ் சாலிப் பரப்பெலா மன்னம் பாங்கர்க்
கரும்பெலாஞ் செந்தேன் சந்தக் காவெலாங் களிவண் டீட்டம்.
( ,, 2)

843. வெண்டளக் கலவைச் சேறுங் குங்கும விரைமென் சாந்துங்
குண்டலக் கோதை மாதர் குடைந்தநீர்க் கொள்ளைச் சாற்றிற்
றண்டலைப் பரப்புஞ் சாலி வேலியுந் தழீஇய வைப்பின்
வண்டலிட் டோட மண்ணு மதுகர மொய்த்த தன்றே.
( ,, 12)

844. பெருநீரால் வாரி சிறக்க விருநிலத்
திட்டவித் தெஞ்சாமை நாறுக நாறுர
முட்டாது வந்து மழைபெய்க பெய்தபி
னொட்டாது வந்து கிளைபயில்க வக்கிளை
பால்வார் பிறைஞ்சிக் கதிரீன வக்கதிர்
ஏர்கெழு செல்வர் களநிறைக வக்களத்துப்
போரெலாங் காவாது வைகுக போரின்
உருகெழு மோதை வெரீஇப் பெடையொடு
நாரை பிரியும் விளைவயல்
யாணர்த் தாகவவ னகன்றலை நாடே.
(தகடூர்.)

845. திருவுடைத் தம்ம பெருவிறற் பகைவர்
பைங்கண் யானைப் புணர்நிரை துமிய
உரந்துரந் தெறிந்த கறையடிக் கழற்காற்
கடுமான் மறவர் கதழ்தொடை மறப்ப
விளையினிது தந்த விளைவுமுட் டுறாது
புலம்பா வுறையுள் நீதொழி லாற்றலின்
விடுநிலக் கரம்பை விடரளை நிறையக்
கோடை நீடக் குன்றம் புல்லென
அருவி யற்ற பெருவறற் காலையும்

**841.** 8 கமுகின்; 10 தொடையழி, தொடையிழி; 14 யுகுத்த; 24 மன்றே. **842.** 6 மானீர்க்; 8 செங்கண்; 15 சோலைப்; 18 பாங்கார்; 23 களவண். **843.** 1 வெண்டலக்; 20 டோடு; 21 மன்னு; 23-24 மொய்க்கு மாதோ. **844.** தகடூர் மாலை. 1,1 பெய்நீரால், பெயுநீரால், பொய்நீரால்; 2,4 நார; 5,3 கதிரீன்க; 6, 3, களநிறைக்க; 9, 3 வளைவயல். **845.** 2, 3 புணரி நிரை; 3, 1 ஊர்ந்தூர்ந், விரந்துரக்; 4, 3 கமழ்தொடை, திகழ்கொடை; 5, 1 விளைவினிது; 5, 4 டாது; 9, 3 பெருவறக்; 10, 1-2 நீர்வந்து கரை யழிதரு; 10,2 யழிதரு; 12, 4 மலர் நிறையச்; 14, 3 னகன்ற.

நிவந்துகரை யிழிதரு நனந்தலைப் பேர்யாற்றுச்
சீருடை வியன்புலம் வாய்பரந்து மிகீஇயர்
உவலை சூடி யுருத்துவரு மலிர்நிறைச்
செந்நீர்ப் பூச லல்லது
வெம்மை யறியாநின் னகன்றலை நாடே.

(பதிற்று. 28)

846. தாமரை வெண்கிழங்கு விரவி யோராங்குக்
கருமலங்கு மிளிரக் கொழுமுகந் தியக்கி
பழஞ்சேற்றுப் பரப்பிற் பருமுத லெடுத்து
நெடுங்கதி ரிறைஞ்ச வாங்கிக் கால்சாய்த்து
வாளிற் றுமித்த சூடே மாவின்
கிளைகளைந்து பிறக்கிய போர்பே யெருத்தின்
கவையடி [ய]வைத்த வுணவே மருதின்
கொழுநிழற் குவைஇய குப்பையொ டனைத்தினும்
பலர்மகிழ் தூங்க வுலகுபுறந் தரூஉ
மாவண் சோணாட் டேர்தொறும்
ஏரோர் களவழி வாழிய நெடிதே.

(ஆசிரிய.)

## அதி. 79. அரண்

847. நீண்டநீர் காடுகளர்நிவந்து விண்டோயு
மாண்ட மலைமக்க ளுள்ளிட்டு—மாண்டவர்
ஆய்ந்தன வைந்து மரணு வுடையானை
வேந்தென நாட்டல் விதி.

(சிறுபஞ்ச. 48)

848. அமையா விடத்தோ ரரும்பொருள் வைத்தால்
இமையாது காப்பினு மாகா—இமையாரும்
அக்காலத் தோம்பி யமிழ்துகோட் பட்டமையின்
நற்காப்பிற் றீச்சிறையே நன்று.

(பழமொழி, 336)

849. அகழ்கிடங் கந்துகி லாய்பொற் பாம்புரி
புகழ்தரு மேகலை ஞாயில் பூண்முலை
திகழ்மணிக் கோபுரந் திங்கள் வாண்முகஞ்
சிகழிகை நெடுங்கொடி செல்விக் கென்பவே.

(சிந்தா. 1444)

850. இஞ்சி மாக நெஞ்சுபோழ்ந் தெல்லை காண வேகலின்
மஞ்சு சூழ்ந்து கொண்டணிந்து மாக நீண்ட நாகமும்
அஞ்சு நின்னை யென்றலி னுண்டு நின்று நீண்டதன்
குஞ்சிமாண் கொடிக்கையாற் கூவி விட்ட தொத்ததே.

( ,, 143)

---

**846.** 2, 1 (த்)தருமலங்கு; 2, 2 மிளிராக்; 2, 4 தியக்கிய; 4,2 ருரிஞ்ச; 5,3 சூடு; 6,3 போர்வே; 10, 1 மாவென்; 10, 2 சோழநாட்; 11, 1 ஓரோர். **847.** 14 நாடல். **848.** 11 யமிழ்துதொடப், யழித்தோட்டப், யழிதோட்டப். **849.** 3 லாய்பொற்; 5 புகழ்தகு; 9 திகழணி. **850.** 22 கூடு.

851. மாற்றவர் மறப்படை மலைந்துமதில் பற்றின்
நாற்றவரைக் கொல்லியொடு நாக்கியெறி பொறியும்
தோற்றமுறு பேய்களிறு துற்றுபெரும் பாம்புங்
கூற்றமன கழுகுதொடர் குந்தமொடு கோண்மா.
(சிந்தா. 101)

852. விற்பொறிகள் வெய்யவிடு குதிரைதொட ரயில்வாள்
கற்பொறிகள் பாவையன மாடமடு செந்தீக்
கொற்புனைசெய் கொள்ளிபெருங் கொக்கெழில்செய் கூகை
நற்றலைகள் திருக்கும்வலி நெருக்குமர நிலையே.
(,, 102)

853. செம்புருகு வெங்களிக ளுமிழ்வதிரிந் தெங்கும்
வெம்புருகு வட்டுமிழ்வ வெந்நெய்முகந் துமிழ்வ
அம்புமிழ்வ கல்லுமிழ்வ வேலுமிழ்வ வாகித்
தம்புலன்க ளால்யவனர் தாட்படுத்த பொறியே.
(,, 103)

854. கரும்பொனியல் பன்றிகத நாகம்விடு சகடம்
குரங்குபொரு தகரினொடு கூர்ந்தரிவ நுண்ணூல்
பரந்தபசும் பொற்கொடி பதாகையொடு கொடிக்குந்
திருந்துமதில் தெவ்வர்தலை பனிப்பத்திருந் தின்றே.
( ,, 104)

855. வயிரவரை கண்விழிப்ப போன்றுமழை யுகளும்
வயிரமணித் தாழ்க்கதவின் வாயின்முக மாக
வயிரமணி ஞாயின்முலை வான்பொற்கொடிக் கூந்தல்
வயிரக்கிடங் காடைமதிற் கன்னியது கவினே.
( ,, 105)

856. செஞ்சுடர்க் கடவுட் டிண்டே ரிவுளிகால் திவள வூன்று
மஞ்சுடை மகர நெற்றி வானுழு வாயில் மாடத்
தஞ்சுட ரிஞ்சி யாங்கோ ரகழணிந் திருந்த தோற்றம்
வெஞ்சுடர் விரியு முந்நீர் வேதிகை மீதிட் டன்றே.
(சூளா. நகர. 3)

857. நால்வகைச் சதுரம் விதிமுறை நாட்டி
நனிதவ வுயர்ந்தன மதிதோய்
மால்வரைக் குலத்தில் யாவையு மில்லை
யாதலா லுவமைமற் றில்லை
நூல்வகைத் தொடர்ந்து பயத்தொடும் பழகி
நுணங்கிய நுவலரு முணர்வே
போல்வரைத் தல்லா லுயர்வினோ டுயர்ந்த
தென்னலாம் பொன்மதி னிலையே.
(இராமாவ. நகர.8)

---

**851.** 3 மறந்துமதில்; 4 பற்றி; 7 நாக்கிநெறி. **852.** 13-14 நற்றலை கடிக்கும்வலி; 14 திருக்கும்வகை. **853.** 10-11 வேலுமிழ்வ கல்லுமிழ்வ; 12 தாகத்; 14 ளால்யெவர். **854.** 10 பொற்கொடிகள்; 12 கொட்குந். **855.** 11 வான்முற்கொடிக். **856.** 7 மஞ்சுறை; 10 வானுழை; 16 (ர்) மகணிணங்; 23 மிதித்திட். **857.** 7 பனிதோய்; 18 மகிழ்ந்து; 19 நடங்கிய; 20 நுவல்வரு; 24 வுயர்வினோ.

858. கோலிடை யுலக மளத்தலிற் பகைஞர்
முடித்தலை கோடலின் மனுவின்
நூலிடை நடக்குஞ் செவ்வையின் யார்க்கு
நோக்கருங் காவலின் வலியின்
வேலொடு வாள்விற் பயிறலின் வெய்ய
சூழ்ச்சியின் வெலற்கரு நலத்திற்
சால்புடை யுயர்விற் சக்கர நடத்துந்
தன்மையிற் றலைவரொத் துளதே.

(இராமாவ. நகர. 11)

859. மேவரு முணர்வு முடிவிலா மையினால்
வேதமு மொக்கும் விண்புகலால்
தேவரு மொக்கும் முனிவரு மொக்குந்
தின்பொறி யடக்கிய செயலால்
காவலிற் கலையூர் கன்னியை யொக்குஞ்
சூலத்தாற் காளியை யொக்கும்
யாவரு மொக்கும் பெருமையா லெய்தற்
கருமையா லீசனை யொக்கும்.

( ,, 9)

860. சினத்தயில் கொலைவாள் சிலைமழுத் தண்டு
செம்புருக் காக்கெணெய் சிவணிக்
கனத்திடை யுருமின் வெருவருங் கவண்க
லென்றிவை கணிப்பில களிற்றின்
இனத்தையு முவணத் திறையையு மியங்குங்
காலையு மதிபெலா நினையு
மனத்தையு மெறியும் பொறியுள வென்றால்
மற்றினி யுணர்த்து மாறெவனோ.

( ,, 12)

861. மன்னன் மேவு கோயில் மேரு மான மற்றிமண்ணெலா
மென்ன லாய வூரிடத் திலங்கு மாளி கைக்குலம்
பொன்னின் மேரு வின்புறம் பொருப்பு நேர வப்புறந்
துன்னு நேமி வெற்பை யென்பர் சூழ்மதிற் பரப்பையே.

(நாரத.)

## அதி. 80. நகர்

862. களிகள் களிகட்கு நீட்டத்தங் கையாற்
களிகள் விதிர்த்திட்ட வெங்கட்—டெளிகலந்
தோங்கெழில் யானை மிதிப்பச்சே றாகுமே
பூம்பொழில் வஞ்சி யகம்.

(முந்தோள்.)

---

**858.** 3 மளித்தலிற்; 8 நூலுடை; 10 செவ்வியின்; 17 பயிற்றலின்; 18 செய்ய; 21 நிலத்திற்; 25 நடாத்துந். **859.** 1-2 மேவா வுணர்வு, மேவா வுணர; 6-7 (ம்) பொருள்களு மொக்கும். **860.** 3 சினமழுத்; 5 செப்புருக்; 11 கருங்க; 13-14 கணிப்பிலங் களப்பின்; 14 (ங்) களம்பின், களங்கம்பின்; 20 மதியினர், மதியினை, மதியலா; 21 நினைக்கைய. **861.** 1 மன்ன; 6 மாற்றி மண்ணெலா; 15 வினபுறப்; 18 மாண்புறத்; 22 யென்ப. **862.** 6 விதித்திட்ட; 8 டளிகலத்; 12-13 றுயிற்றெம் பூம்புனல்.

863. மாலை விலைபகர்வார் கிள்ளிக் களைந்தபூச்
சால மருவியதோர் தன்மைத்தால்—காலையே
விற்பயில் வானகம் போலுமே வெல்வளவன்
பொற்பா ருறந்தை யகம்.

(முத்தொள்.)

864. மைந்தரோ டூடி மகளிர் திமிர்ந்திட்ட
குங்கும வீர்ஞ்சாந்தின் சேறிழுக்கி—எங்குந்
தடுமாற லாகிய தன்மைத்தே தென்னன்
நெடுமாடக் கூட லகம்.

( ,, )

865. மலிதேரான் கச்சியு மாகடலுந் தம்முள்
ஒலியும் பெருமையு மொக்கும்—மலிதேரான்
கச்சி படுவ கடல்படா கச்சி
கடல்படுவ தெல்லாம் படும்.

(யாப்பருங். 61, உரை)

866. உலகை யொருநிறையாத் தானோர் நிறையாப்
புலவர் புலக்கோலாற் றூக்க—உலகனைத்துந்
தான்வாட வாடாத தன்மைத்தே தென்னவன்
நான்மாடக் கூட னகர்.

(பரிபாடலுறுப்பு)

867. நிழலகந் தவழ்ந்துதே னிமிர்ந்து தாதுசேர்
பொழிலகம் பூவையுங் கிளியும் பாடுமே
குழலகங் குடைந்துவண் டறங்குங் கோதையர்
மழலையும் யாழுமே மலிந்த மாடமே.

(சூளா. நாட்டு. 4)

868. சங்கமேய் தரங்க வேலைத் தடங்கடற் பொய்கை பூத்த
அங்கண்மா ஞால மென்னுந் தாமரை யகத்து ளாங்கே
செங்கண்மால் சுரமை யென்னுந் தேம்பொகுட் டகத்து வைகும்
நங்கையோர் படிவங் கொண்ட நலத்தது நகர மன்றே.

( ,, நகர. 2)

869. அகிலெழு கொழும்புகை மஞ்சி னூடவும்
முகிலிசை யெனமுழா முரன்று விம்மவும்
துகிலிகைக் கொடியனார் மின்னிற் றோன்றவும்
இகலின மலையொடு மாட மென்பவே.

( ,, 6)

870. மாடவாய் மணிமுழ விசையு மங்கையர்
ஆடுவார் சிலம்பிணை யதிரு மோசையும்
பாடுவார் பாணியும் பயின்று பல்கல
மூடிமா நகரது முரல்வ தொத்ததே.

( ,, 8)

---

**863**. இது 'மைந்தரொடூடி' (864) என்பதன்பின். 5 சாலை; 6 மிகுவதோர்; 7 தன்மைத்தாய்க்; 8 காலைய. **864**. 7 சேறழுக்கி; 10 லாகாத; 15 னகர். **866**. 2 மொருகுறையாத். **867**. 3 னிரந்து, னிமிர்ந்த; 4 தாதுசேர். **868**. 11யதனு; 14 சுரபை. **870**. 6 சிலம்பினை; 12 பல்பகல்.

871. திருவ நீணகர்ச் செம்பொனி னீடிய
வுருவ வொண்கொடி யூழி னுடங்குவ
பரவை வெங்கதிர்ச் செல்வன பன்மயிர்ப்
புரவி பொங்கழ லாற்றுவ போன்றவே.

(சிந்தா. 126)

872. எறிசுற விளையவ ரேந்து பூங்கொடி
மறிதிரை வரைபுரை மாட மாக்கலம்
பெறலருந் திருவனு ரமுதம் பேரொலி
அறைகடல் வளநக ராய தென்பவே.

( ,, 1446)

873. பாத்தரும் பசும்பொனின் மாடத் தூச்சிமேல்
தூத்திரள் மணிக்குடம் நிரைத்துத் தோன்றுவ
பூத்தன வேங்கைமேற் பொலிந்து கார்நினைந்
தேத்தரு மயிற்குழா மிருந்த போன்றவே.

( ,, 87)

874. மாயோன் கொப்பூழ் மலர்ந்த தாமரைப்
பூவொடு புரையுஞ் சீரூர் பூவின்
இதழகத் தனைய தெருவ மிதழகத்
தரும்பொருட் டனைத்தே யண்ணல் கோயில்
தாதி னனையர் தண்டமிழ்க் குடிகள்
தாதுண், பறவை யனையர் பரிசில் வாழ்நர்
பூவினுட் பிறந்தோ னாவினுட் பிறந்த
நான்மறைக் கேள்வி நவில்குர லெடுப்ப
ஏம வின்றுயி லெழுத லல்லதை
வாழிய வஞ்சியுங் கோழியும் போலக்
கோழியி னெழாதெம் பேரூர் துயிலே.

(பரிபாடலுறுப்பு)

875. தன்றமிழ் வேலித் தமிழ்நாட் டகமெல்லாம்
நின்று நிலைஇப் புகழ்பூத்த லல்லது
குன்றுத லுண்டோ மதுரைக் கொடித்தேரான்
குன்றமுண் டாகு மளவு.

( ,, )

876. செய்யாட் கிழைத்த திலகம்போற் சீர்க்கொப்ப
வையம் விளங்கிப் புகழ்பூத்த லல்லது
பொய்யாத லுண்டோ மதுரைப் புனைதேரான்
வையையுண் டாகு மளவு.

( ,, )

877. கார்த்திகைக் காதிற் கனமகர குண்டலம்போற்
சீர்த்து விளங்கித் திருப்பூத்த லல்லது
கோர்த்தையுண் டாமோ மதுரைக் கொடித்தேரான்
வார்த்தையுண் டாகு மளவு. ( ,, )

**871.** 4 னீட்டிய; 16 போன்றதே. **872.** 6 மலைபுரை; 16 வென்பவே. **873.** 1 மாற்றரும்; 12 கார் நிரைந்; 15 மிருத்தல். **874.** 2, 3 சீறூர்; 7, 3 னுவினிற்; 11, 3 பேரூர்த், பேரூரிருந், பேரிருந். **877.** 9 கோத்தையுண்.

878. ஈவாரைக் கொண்டாடி யேற்பாரைப் பார்த்துவக்குஞ்
சேய்மாடக் கூடலுஞ் செவ்வேள் பரங்குன்றும்
வாழ்வாரே வாழ்வா ரெனப்படுவார் மற்றையார்
போவாரார் புத்தே ளுலகு.

(பரிபாடலுறுப்பு)

## அதி. 81. பொருள்செயல்வகை

879. வடுவிலா வையத்து மன்னிய மூன்றின்
நடுவண தெய்த விருதலையு மெய்தும்
நடுவண தெய்தாதா னெய்தும் உலைப்பெய்
தடுவது போலுந் துயர்.

(நாலடி, 114)

880. கல்லிற் பிறக்குங் கதிர்மணி காதலி
சொல்லிற் பிறக்கு முயிர்மதம்—மெல்லென்
அருளிற் பிறக்கும் அறநெறி யெல்லாம்
பொருளிற் பிறந்து விடும்.

(நான்மணி. 5)

881. ஒல்லாதொன் றின்றி யுடையார் கருமங்கள்
நல்லவாய் நாடி நடக்குமாம்—இல்லார்க்
கிடரா யியலு மிலங்குநீர்ச் சேர்ப்ப
கடலுள்ளுங் காண்பவே நன்கு.

(பழமொழி, 145)

882. சிறிய பொருள்கொடுத்துச் செய்த வினையாற்
பெரிய பொருள்கருது வாரே—விரிபூ
விராஅம் புனலூர வேண்டயிரை யிட்டு
வராஅல் வாங்கு பவர்.

( ,, 302)

883. பொருத்த மழியாத பூந்தண்டார் மன்னர்
அருத்த மடிநிழ லாரை—வருத்தாது
கொண்டாரும் போலாது கோட லதுவன்றே
வண்டோதா துண்டு விடல்.

( ,, 242)

884. பாற்பட்டு வாழ்வ ரெனினுங் குடிகள்மேல்
மேற்பட்ட கூட்டு மிகைநிற்றல் வேண்டாவே
கோற்றலை யாயினுங் கொண்டீக காணுங்காற்
பாற்றலைப் பாலூற லில்.

( ,, 333)

---

**878.** இது 'தன்றமிழ்' (875) என்பதன்பின்; ஒரு பிரதியில் 'செய் யாட்கிழைத்த' (876) என்பதன் பின். 10 வாழ்ந்தா; 13 போவாராம். **879.** 5 - 6 நடுவணே யெய்த, நடுவணே யெய்தி(வி); 9 - 10 நடுவணே யெய்தாதா; 10-11 தெய்தாதே லெய்தும், தெய்தானே லெய்தும். **880.** 9 றருளிற். **881.** 1 அல்லாதொன்; 7 நடிக்குமாம்; 14 காணவே. **882.** 2 பொருள் கொடுத்துஞ்; 3 செய்க; 8 தெரியில்; 11 வேண்டுமிரை, வேண்டவிரை, வேணவிரை; 12 விட்டு. **883.** 2 மிழிவாகப், மழிவாகப், மிலராகிப்; 9-10 கொண்டாலும் பொல்லாது; 13 வண்டுதா. **884.** 3 மெனினுங்; 7 மிகநிற்றல்; 9 கோற்றலையே; 12 கார்முகங்காற்; 14 பாலுற.

885. எனைப்பலவே யாயினுஞ் சேய்த்தாய்ப் பெறலிற்
றினைத்துணை யானு மணிக்கொண்ட னன்றே
இனக்கலை தேன்கிழிக்கு மேகல்சூழ் வெற்ப
பனைப்பதித் துண்ணார் பழம்.

(பழமொழி, 68)

886. தந்நம் பொருளுந் தமர்கள் வளமையும்
முந்துற நாடிப் புறந்தர லோம்புக
அந்த ணருவி மலைநாட சேணோக்கி
நந்துநீர்க் கொண்டதே போன்று.

( ,, 69)

887. உடையதனைக் காப்பா னுடையா னதுவே
உடையானைக் காப்பதூஉ மாகும்—அடையிற்
புதற்குப் புலியும் வலியே புலிக்குப்
புதலும் வலியாய் விடும்.

( ,, 282)

888. ஊக்கி யுழந்தொருவ னீட்டிய வொண்பொருளை
நோக்குமி னென்றவந்து நொவ்வியார் கைவிடுதல்
போக்குநீர் தூக்கும் பொருகடற் றண்சேர்ப்ப
காக்கையைக் காப்பிட்ட சோறு.

( ,, 315)

889. முன்னை யுடையது காவா திகழ்ந்திருந்து
பின்னையஃ தாராய்ந்து கொள்குறுதல்—இன்னியற்கைப்
பைத்தகன்ற வல்குலா யஃதாலவ் வெண்ணெய்மேல்
வைத்து மயில்கொள்ளு மாறு.

( ,, 325)

890. களமர் பலரானுங் கள்ளம் படினும்
வளமிக்கார் செல்வம் வருந்தா—விளைநெல்
அரிந ரணைதிறக்கு மூர அறுமோ
நரிநக்கிற் றென்று கடல்.

( ,, 177)

891. அருமை யுடைய பொருளுடையார் தங்கட்
கரும முடையாரை நாடார்—எருமைமேல்
நாரை துயில்வதியு மூர குளந்தொட்டுத்
தேரை வழிச்சென்றா ரில்.

( ,, 23)

892. நோக்கி யிருந்தா ரிமைக்கு மளவின்கண்
ஒப்பப் படினு முணங்கலைப் புட்கவரும்
போற்றிப் புறந்தந்தக் கண்ணும் பொருளினைக்
காப்பாரிற் பார்ப்பார் மிகும். ( ,, 259)

**885.** 3 சேய்த்தாற்; 7 நனிகொண்ட; 11 மெக்கல்சூழ். **886.** 9 வந்து; 12 சேணாக்கி; 13 நந்துசீர், நந்துநீர். **887.** 12 வலிக்குப்; 14 வளையாய். **888.** 2 யுழன்றொருவ, யுலந்தொருவ; 7 நோவறியார்; 10 தூங்கும்; 13 யாக்கையைக்; 14 காப்பட்ட. **889.** 11 யஃதலதவ், யஃதேலவ்; 14 மயில்கொல்லு; 15 (ம்) வாறு. **890.** 1 களவர்; 7 வருந்தார்; 9 வருநீ, அரிநீ; 10 ரணைதிர்க்கு. **891.** 2 யுடையர்; 15 ருமில். **892.** 10-12 புறந்தந் தகப்பட்ட வொண்பொருட்குக்.

893. அருளுடை யாருமற் றல்லா தவரும்
பொருளுடை யாரைப் புகழா தாரில்லை
பொருபடைக் கண்ணு மதுவாற் றிருவுடையார்
பண்ட மிருவர் கொளல்.

(பழமொழி, 269)

894. செய்கபொரு ளாருஞ்செறு வாரைச்செறு கிற்கும்
எஃகுபிறி தில்லையிருந் தேயுயிரு முண்ணும்
ஐயமில்லை யின்பமற னோடெவையு மாக்கும்
பொய்யில்பொரு ளேபொருண்மற் றில்லைபிற பொருளே.

(சிந்தா. 497)

895. பொன்னி னாகும் பொருபடை யப்படை
தன்னி னாகுந் தரணி தரணியிற்
பின்ன ராகும் பெரும்பொரு ளப்பொருள்
துன்னுங் காலைத் துன்னாதன வில்லையே.

( ,, 1923)

896. வென்றி யாக்கலு மேதக வாக்கலும்
அன்றி யுங்கல்வி யோடழ காக்கலும்
குன்றி னார்தமைக் குன்றென வாக்கலும்
பொன்றாஞ் சாகத்தி னாய்பொருள் செய்யுமே.

( ,, 1922)

897. குலந்தருங் கல்வி கொணர்ந்து முடிக்கும்
அலந்த கிளைக ளழிபசி தீர்க்கும்
நிலம்பக வெம்பிய நீள்சுரம் போகிப்
புலம்பில் பொருடரப் புன்கண்மை யுண்டோ.

(வளையா.)

## அதி. 82. படைமாட்சி

898. போரறின் வாடும் பொருநர்சீர் கீழ்வீழ்ந்த
வேரறின் வாடு மரமெல்லாம்—நீர்பாய்
மடையறின் நீணெய்தல் வாடும் படையறின்
மன்னர்சீர் வாடி விடும்.

(நான்மணி. 42)

899. பொய்யகல நாளும் புகழ்விளைத்த லென்வியப்பாம்
வையகம் போர்த்த வயங்கொலிநீர்—கையகலக்
கற்றோன்றி மண்டோன்றாக் காலத்தே வாளோடு
முற்றோன்றி மூத்த குடி.

(வெண்பா. 35)

900. மின்னார் சினஞ்சொரிவேல் மீளிக் கடற்றானை
யொன்னார் நடுங்க வுலாய்நிமிரின்—என்னாங்கொல்
ஆழித்தேர் வெல்புரவி யண்ணல் மதயானைப்
பாழித்தோள் மன்னர் படை.

( ,, 131)

---

**893.** 9 பொருள்படைக், பெரும்படைக். **894.** 1 செய்யபொரு; 3 வாரைச்சிற; 7 - 8 தேயுமுயி ருண்ணும்; 11 னோடெவையு; 15 றல்லபிற. **895.** 7-8 தரணியிற்றரணி; 9-10 பின்னை யாகும்; 10 தாகும். **897.** 9 நிலம்புக. **898.** 1 போரன்றி; 5 வேரன்றி; 9-10 மடையிறி னீர்நெய்தல். **899.** 3 புகழ்விளைத.

901. தமருட் டலையாதல் தார்தாங்கி நிற்றல்
எமருள்யா மின்னமென் றெண்ணல்—அமருள்
முடுகழலின் முந்துறுதல் முல்லைத்தார் வேந்தன்
தொடுகழல் மைந்தர் தொழில்.

(வெண்பா. 41)

902. மறமனத்தா னல்லாத மாநலத்த வேந்தன்
உறமனத்தா னாகி யொழுகின்—தெறுமனத்தார்
பாயிரங் கூறிப் படைதொக்கா லென்செய்ப
ஆயிரங் காக்கைக்கோர் கல்.

(பழமொழி, 165)

903. மொய்கொண் டெழுந்த வமரகத்து மாற்றார்வாய்ப்
பொய்கொண் டறைபோய்த் திரிபவர்க் கென்கொலாம்
மையுண் டமர்த்தகண் மாணிழாய் சான்றவர்
கையுண்டுங் கூறுவர் மெய்.

( ,, 241)

904. உருத்தரு ஞாட்பினு ளொன்னார் தொலையச்
செருக்கினாற் செய்கலார் செய்வாரே போலத்
தருக்கினாற் றம்மிறைவன் கூழுண் பவரே
கருத்தினாற் கூறைகொள் வார்.

( ,, 378)

905. கொடையு மொழுக்கமுங் கோளுள் ளுணர்வும்
உடைய ரெனப்பட் டொழுகிப் பகைவர்
உடையமேற் செல்கிற்கு மூற்ற மிலாதார்
படையிற் படைத்தனிமை நன்று.

( ,, 324)

906. அமர்விலங்கி யாற்ற வறியவும் பட்டார்
எமர்மேலை யின்னரால் யார்க்குரைத்து மென்று
தமர்மறையாக் கூழுண்டு சேற லதுவே
மகன்மறையாத் தாய்வாழு மாறு.

( ,, 116)

907. தன்னின் வலியானைத் தானுடைய னல்லாக்கால்
என்ன குறைய னிளையரான்—மன்னும்
புலியிற் பெருந்திறல வாயினும் பூசை
எலியில் வழிப்பெறு பால்.

( ,, 330)

908. உடையிட்டார் புன்மேய்வா ரோடுநீர்ப் புக்கார்
படையிட்டார் பற்றேது மின்றி—நடையிட்டார்

---

**901.** 5 எமருளர்யா; 6 மின்னணமென்; 9 முறுகழலின்; 10 முந்துறுகண்; 14 வேந்தன், மைந்தன். **902.** 3 மானத்தார்; 5 உறுமனத்த; 7 யொழுகித்; 10 கூறப்; 11 படைநோக்கா; 15 சோல். **903.** 2 டெழுந்து; 4 மற்றார்வாய்ப்; 8 கென்கொலோ; 9 மைகொண். **904.** 1 உருத்தகு; 5 செருக்கினார்; 7 செல்வாரே. **905.** 3 கொள்ளுள்; 10 செல்கிற்று; 12 மிலாத. **906.** 3 லறியவும்; 6 யின்னலமாரால்; 12 விதுவே; 13 மகள்மறையாத்; மகன்மறையத். **907.** 6 குறையி; 6-7 குறைபினுடை யாரிடத்து, குறைபின்னை யாரிடத்து; 7 னினையரான்; 10 பொருந்திறல; 14 வழிப்பெறுப், வழிப்பேறும். **908.** 2 புன்மேய்ந்தா; 8 நடைவிட்டார்; 9-10 இவ்வகைய ரை வரையு; 10 யைவரை(யெ); 13 செவ்வகைச்.

இவ்வகை யைவரையு மென்று மணுகாரே
செய்வகைச் சேவகர் சென்று.

(சிறுபஞ்ச. 40)

909. தறுக ணாண்மைய தாமரை நிறத்தன தகைசால்
மறுவில் வான்குளம் புடையன மாளுவத் தகத்த
பறையி னாலுவ படுசினை நாவலின் கனிபோற்
குறைவில் கோலத்த குளிர்புனற் சிந்துவின் கரைய.

(சிந்தா. 2159)

910. பார சூரவம் பல்லவ மெனும்பதிப் பிறந்த
வீர வாற்றல விளைகடுந் தேறலி னிறத்த
பாரிற் றேர்செலிற் பழிபெரி துடைத்தென நாணிச்
சோரும் வார்புயல் துளங்குவிண் புகுவன துரகம்.

( ,, 2160)

911. அலங்கு தண்மதி யைப்பசி யடையவப் பகலே
நிலங்கொண் டோங்குவ நிரம்பிய புட்சுழி யுடைய
உலம்பி முன்னிரு தாள்களு முமிழ்வன போல
விலங்கு பாய்வன விடுகணை விலங்குவ கலிமா.

( ,, 1770)

912. அரும்பனைத் தடக்கை யபரகாத் திரம்வா
லெயிறிவை யைந்தினுங் கொல்வ
கருங்கடற் சங்குங் கறந்தவான் பாலுங்
கனற்றிய காலுகி ருடைய
பெரும்புலி முழக்கின் மாறெதிர் முழங்கிப்
பெருவரை கீண்டிடுந் திறல
திருந்தியே ழுறுப்புந் திண்ணிலந் தோய்வ
தீயுமிழ் தறுகணிற் சிறந்த.

( ,, 2154)

## அதி. 83. நட்பு

913. கோட்டுப்பூப் போல மலர்ந்துபிற் கூம்பாது
வேட்டதே வேட்டதாம் நட்பாட்சி—தோட்ட
கயப்பூப்போல் முன்மலர்ந்து பிற்கூம்பு வாரை
நயப்பாரு நட்பாரு மில்.

(நாலடி, 215)

914. நறுமலர்த் தண்கோதாய் நட்டார்க்கு நட்டார்
மறுமையுஞ் செய்வதொன் றுண்டோ—இறுமளவும்
இன்புறுவ தின்புற் றெழீஇ யவரொடு
துன்புறுவ துன்புறாக் கால்.

( ,, 209)

---

**909**. 4 நிறத்தின; 9 மாளவத். **910** 8 விளைசெங்; 10 னிறந்த; 17 வாய்புயல்; 18 துளங்கவிண்; 20 துரங்கம். **911**. 7 டோங்கின, டேகுவ; 9 புகர்ச்சுழி; 17 மாய்வன; 19 விலக்குவ. **912**. 3-6 மருப்புக்காத் திரம்வா லெயி றைந்தினுங்; 9 சங்கு; 21 திறத்த. **913**. 14 நட்டாரு. **914**. 11 றிரீஇ.

915. காதலார் சொல்லுங் கடுஞ்சொல் லுவந்துரைக்கும்
ஏதிலா ரின்சொல்லிற் றீதாமோ—போதெலாம்
மாதர்வண் டார்க்கு மலிகடற் றண்சேர்ப்ப
ஆவ தறிவார்ப் பெறின்.

(நாலடி, 73)

916. குற்றமு மேனைக் குணனு மொருவனை
நட்டபி னாடித் திரிவனேல்—நட்டான்
மறைகாவா விட்டவன் செல்வுழிச் செல்க
அறைகடல்சூழ் வையம் நக.

( ,, 230)

917. பெரியவர் கேண்மை பிறைபோல நாளும்
வரிசை வரிசையா நந்தும்—வரிசையால்
வானூர் மதியம்போல் வைகலுந் தேயுமே
தானே சிறியார் தொடர்பு.

( ,, 125)

918. தானட் டொழுகற்குத் தக்கா ரெனவேண்டா
யார்நட்ப தாயினும் நட்புக் கொளல்வேண்டும்
கானட்டு நாறுங் கதுப்பினாய் தீற்றாதோ
நாய்நட்டால் நல்ல முயல்.

(பழமொழி, 14)

919. தெற்றப் பரிந்தொருவர் தீர்ப்ப ரெனப்பட்டார்க்
குற்ற குறையை யுரைப்பதாந்—தெற்ற
அறையா ரணிவளையாய் தீர்த லுறுவார்
மறையார் மருத்துவர்க்கு நோய்.

( ,, 88)

920. நன்றே யொருவற் றுணைக்கோடல் பாப்பிடுக்கண்
ஞெண்டேயும் பார்ப்பான்கட் டீர்த்தலான்—விண்டோயுங்
குன்றக நன்னாட கூறுங்கா லில்லையே
ஒன்றாக் குதவாத வொன்று.

( ,, 111)

921. உற்றா லிறைவற் குடம்பு கொடுக்கிற்பான்
மற்றவற் கொன்னாரோ டொன்றுமோ—தெற்ற
முரண்கொண்டு மாறாய வுண்ணுமோ வுண்ணா
இரண்டே றொருதுறையி னீர்.

( ,, 239)

922. தன்னை மதித்துத் தமரென்று கொண்டக்கால்
என்ன படினு மவர்செய்வ செய்வதே
இன்னொலி வெற்ப விடரென்னை துன்னூசி
போம்வழிப் போகு மிழை.

( ,, 358)

---

**915**. 7 றீதாமே; 12 றண்சேரா. **916**. 7 திரிவெனேல். **917**. 6 வரிசையால்; 11-12 வைகலு நந்துமே. **918**. 2 டொழுகுதற்குத்; 4 னென வேண்டா; 9 கார்நட்டு; 12 தின்னாதோ. **919**. 1 தெற்றப்; 2 பிறிந்தொரு வர்; 9 அறைவா; 11 தீர்த்த. **920**. 7 டீர்க்கலான். **921**. 2 லொருவற்; 4 கெடுக்கிற்பான்; 7 டொன்றுமே. **922**. 6 படானு; 8 செய்வதென்.

923. கருவினுட் கொண்டு கலந்தாருந் தம்முள்
ஒருவழி நீடி யுறைதலோ துன்பம்
பொருகடற் றண்சேர்ப்ப பூந்தா மரைமேற்
றிருவொடு மின்னாது துச்சு.

(பழமொழி, 123)

924. பறைநன்று பண்ணமையா யாழி னிறைநின்ற
பெண்ணன்று பீடிலா மாந்தரிற்—பண்ணழிந்
தார்தலி னன்று பசித்தல் பசைந்தாரிற்
றீர்தலிற் றீப்புகுத னன்று.

(நான்மணி. 13)

925. கெட்டே மிதுவெந் நிலையென்று சார்தற்கண்
நட்டவ ரல்லார் நனிமிகு பவர்சுற்றம்
பெட்டது சொல்லிப் பெரிதிகழ்ந் தாற்றவும்
எட்டவந் தோரிடத் தேகி நிற்பவே.

(வளையா.)

926. பலர்க்கு நிழலாகி யுலகமீக் கூறத்
தலைப்போ கன்மையிற் சிறுவழி மடங்கி
நிலைபெறு நடுக லாகியக் கண்ணும்
இடங்கொடுத் தளிப்ப மன்ற வுடம்பொ
டின்னுயிர் வீழுங் கிழமைத்
தொன்னட் புடையோர் தம்முழைச் செலினே.

(புறம், 223)

## அதி. 84. நட்பாராய்தல்

927. யானை யனையவர் நண்பொரீஇ நாயனையார்
கேண்மை கெழீஇக் கொளல்வேண்டும்—யானை
அறிந்தறிந்தும் பாகனையே கொல்லும் எறிந்தவேல்
மெய்யதா வால்குழைக்கும் நாய்.

(நாலடி, 213)

928. பலநாளும் பக்கத்தா ராயினும் நெஞ்சிற்
சிலநாளு மொட்டாரோ டொட்டார்—பலநாளும்
நீத்தா ரெனக்கை விடலுண்டோ தந்நெஞ்சத்
தியாத்தாரோ டியாத்த தொடர்பு.

( „ 214)

929. கடையாயார் நட்புக் கமுகனைய ரேனை
இடையாயார் தெங்கி னனையர்—தலையாயார்
எண்ணரும் பெண்ணைபோன் றிட்டஞான் றிட்டதே
தொன்மை யுடையார் தொடர்பு.

( „ 216)

---

**923.** 1 கருவினுடல்; 6 - 7 நீடு முறைதலோ. **925.** 9 பெற்றது; 13 ஒட்டவர்; 15 தேசி, தேக. **926.** 3, 1 நிலைப்பெறு; 5, 2 வழங்கு, விரும்புங். **927.** 3 நட்பொரீஇ; 6 கழீஇக்; 13 மெய்யதாஅ. **928.** 2 பக்கத்த; 11 விடிலுண்டோ; 13-14 தியார்த்தாரோ டியார்த்தார்.

930. நாய்க்காற் சிறுவிரல்போல் நன்கணிய ராயினும்
ஈக்காற் றுணையு முதவாதார் நட்பென்னும்
சேய்த்தானுஞ் சென்று கொளல்வேண்டுஞ் செய்வினைக்கு
வாய்க்கா லனையார் தொடர்பு.

(நாலடி, 218)

931. மரீஇப் பலரொடு பன்னாள் முயங்கிப்
பொரீஇப் பொருட்டக்கார்க் கோடலே வேண்டும்
பரீஇ யுயிர்செகுக்கும் பாம்பொடு மின்னா
மரீஇஇப் பின்னைப் பிரிவு.

( ,, 220)

932. கனைகடற் றண்சேர்ப்ப கற்றறிந்தார் கேண்மை
நுனியிற் கரும்புதின் றற்றே—நுனிநீக்கித்
தூரிற்றின் றன்ன தகைத்தரோ பண்பிலா
ஈரமி லாளர் தொடர்பு.

( ,, 138)

933. கருத்துணர்ந்து கற்றறிந்தார் கேண்மையெஞ் ஞான்றும்
குருத்திற் கரும்புதின் றற்றே—குருத்திற்
கெதிர்செலத் தின்ற தகைத்தரோ வென்று
மதுரமி லாளர் தொடர்பு.

( ,, 211)

934. மண்ணி யறிப மணிநலம் பண்ணமைத்
தேறிய பின்னறிப மாநல—மாசறச்
சுட்டறிப பொன்னி னலங்காண்பான் கெட்டறிப
கேளிரா லாய பயன்.

(நான்மணி. 3)

935. தாளாள னென்பான் கடம்படா வாழ்பவன்
வேளாள னென்பான் விருந்திருக்க வுண்ணாதான்
கோளாள னென்பான் மறவாதா னிம்மூவர்
கேளாக வாழ்த லினிது.

(திரிகடு. 12)

## அதி. 85. நட்பிற் பிழைபொறுத்தல்

936. நண்பொன்றித் தம்மாலே நட்கப்பட் டார்களைக்
கண்கண்ட குற்ற முளவெனினுங் காய்ந்தீயார்
பண்கொண்ட தீஞ்சொற் பணைத்தோளா யாருளரோ
தங்கன்று சாக்கறப் பார்.

(பழமொழி, 16)

937. விலங்கேயுந் தம்மோ டுடனுறைதல் மேவுங்
கலந்தாரைக் கைவிடுத லொல்லா—இலங்கருவி
தாஅ யிழியு மலைநாட வின்னாதே
பேஎயொ டானும் பிரிவு. ( ,, 122)

---

**930.** 4 ராயிடினும்; 8 நண்பென்னும்; 12 செய்வினைக்கும். **931.** 1 சரீஇப்; 9 மரீஇ; 13 மரீஇய. **933.** இது சில பிரதிகளில் இல்லை; சில பிரதிகளில் 'மண்ணியறிப' (934) என்பதன் பின். **934.** 5-6 தேறி யறிபபின். **935.** 3 கடம்படான்; 13 நாள்பல. **936.** 2 (ற்)றம்மாலே; 8 காத்தீயார், காய்ந்திடார்; 12 (ய்) கள்ளரோ. **937.** 9-10 மீதா றிழியு; 13 பேரியொ.

938\. கொழித்துக் கொளப்பட்ட நண்பி னவரைப்
பழித்துப் பலர்நடுவட் சொல்லாடா ரென்கொல்
விழித்தலரும் நெய்தற் றுறைவ வுரையார்
இழித்தக்க காணிற் கனு.

(பழமொழி, 182)

939\. ஆண்டைக் டெனவொன்றோ வேண்டா வடைந்தாரை
மாண்டில ரென்று மறைப்பக் கிடந்ததோ
பூண்டாங் கிளமுலைப் பொற்றொடீஇ பூண்ட
பறையறையாப் போயினா ரில்.

( ,, 112)

940\. தந்தீமை யில்லவர் நட்டவர் தீமையையும்
எந்தீமை யென்றே யுணர்பதாம்—அந்தண்
பொருதிரை வந்துலாம் பொங்குநீர்ச் சேர்ப்ப
ஒருவர் பொறையிருவர் நட்பு.

( ,, 247)

941\. நல்லா ரெனத்தாம் நனிவிரும்பிக் கொண்டாரை
யல்லா ரெனினு மடக்கிக் கொளல் வேண்டும்
நெல்லிற் குமியுண்டு நீர்க்கு நுரையுண்டு
புல்லிதழ் பூவிற்கு முண்டு.

(நாலடி, 221)

942\. இன்னா செயினும் விடுதற் கரியாரைத்
துன்னாத் துறத்தல் தகுவதோ—துன்னருஞ்சீர்
விண்குத்து நீள்வரை வெற்ப களைபவோ
கண்குத்திற் றென்றுதங் கை.

( ,, 226)

943\. இன்னா செயினும் விடற்பால ரல்லாரைப்
பொன்னாகப் போற்றிக் கொளல்வேண்டும்—பொன்னொடு
நல்லிற் சிதைத்ததீ நாடொறு நாடித்தம்
இல்லத்த தாக்குத லான்.

( ,, 225)

944\. தமரென்று தாங்கொள்ளப் பட்டவர் தம்மைத்
தமரன்மை தாமறிந்தா ராயி னவரைத்
தமரினும் நன்கு மதித்துத் தமரன்மை
தம்மு ளடக்கிக் கொளல்.

( ,, 229)

945\. வேற்றுமை யின்றிக் கலந்திருவர் நட்டக்கால்
தேற்றா வொழுக்க மொருவன்க ணுண்டாயின்
ஆற்றுந் துணையும் பொறுக்க பொறானாயின்
தூற்றாதே தூர விடல்.

( ,, 75)

---

**938.** 6 பலர்நடுவுட்; 8 தென்கொல்; 12 வறையார். **939.** 5 மாண்டிலா; 9 பூண்டங்; 11 பொற்கொடீஇ; 13 பறையறையப், பறையறையார். **940.** 4 தீமையும், தீமையை; 7 யுணர்வதாம். **941.** 1 நல்ல; 2 ரெனத்தான்; 5 இல்லா; 9 நெல்லுக். **942.** 5 துன்னார்; 6-7 துறத்தற் குறுவதோ; 10 நீர வரை. **943.** 10 சிறைத்ததீ; 14 ராக்குத. **944.** 5 தமரின்மை; 10 நன்று.

946. பெரியார் பெருநட்புக் கோடல்தாஞ் செய்த
அரிய பொறுப்பரென் றன்றோ—அரியரோ
ஒல்லெ னருவி யுயர்வரை நன்னாட
நல்லசெய் வார்க்குத் தமர்.

(நாலடி, 77)

947. மலைப்பினும் வாரணந் தாங்குங் குழவி
அலைப்பினும் அன்னையென் றோடும்—சிலைப்பினும்
நட்டார் நடுங்கும் வினைசெய்யா ரொட்டார்
உடனுறையுங் காலமு மில்.

(நான்மணி, 23)

## அதி. 86. தீநட்பு

948. பெரியநட் டார்க்கும் பகைவர்க்குஞ் சென்று
திரிவின்றித் தீர்ந்தார்போற் சொல்லி யவருள்
ஒருவரோ டொன்றி யொருப்படா தாரே
இருதலைக் கொள்ளியென் பார்.

(பழமொழி, 10)

949. தமக்குற்ற தேயாகத் தம்மடைந்தார்க் குற்ற
எமக்குற்ற தென்றுணரா விட்டக்கா லென்னாம்
இமைத்தருவி பொன்வரன்று மீர்ங்குன்ற நாட
உமிக்குற்றுக் கைவருந்து மாறு.

( ,, 368)

950. திருந்தாய்நீ யார்வத்தைத் தீமை யுடையார்
வருந்தினு ரென்றே வயப்படுத்த லுண்டோ
அரிந்தரிகால் பெய்தமையக் கூட்டியக் கண்ணும்
பொருந்தாமண் ணாகா சுவர்.

( ,, 9)

951. பாப்புக் கொடியாற்குப் பால்மேனி யான்போலத்
தாக்கி யமருட் டலைப்பெய்யார்—போக்கி
வழியரா நட்டார்க்கு மாதவஞ்செய் வாரோ
கழிவிழாத் தோளேற்று வார்.

( ,, 13)

952. தானகத்தா னட்டுத் தமரென் றொழுகியக்கால்
நாணகத்துத் தாமின்றி நன்கொழுகா ராயவேல்
மானமர்க் கண்ணி மறந்தும் பரியலராற்
கானகத் துக்க நிலா.

( ,, 210)

953. எய்ப்புழி வைப்பா மெனப்போற்றப் பட்டவர்
உற்றுழி யொன்றுக் குதவலராய்ப் பைந்தொடீஇ

---

**946.** 3 கோடல்தான்; 6 பொறுப்பவென்; 8 அரியாரோ; 11 யுயர்மலை; 14 வார்க்குந். **947.** 5 யுலப்பினும்; 7 றோதும்; 13 உடனுறங்குங். **948.** 6 தீந்தார்போற்; 14 கொள்ளியொப், கொள்ளியேய்ப். **949.** 6 வென்றுணர; 13 உமிக்குற்றிக், உமிக்குத்திக். **950.** 1-2 திருந்தாத வார்வத்துத், திருந்தாதா ராயத்துத்; 3 தீர்மை; 6-7 றென்று யெப்படுத; 9 வரிந்தருகால், வருந்தரிகால்; 11 கட்டிய, கூடியக்; 13 பொருந்தறமண். **951.** 1 பார்ப்புக்; 9 வழியாய; 14 தேரேற்று. **952.** இது சில பிரதிகளில் இல்லை. 12 பிரியலாக். **953.** 8 பைந்தொடியே; 13 மச்செறி.

அச்சிடை யிட்டுத் திரியி னஃதால
மச்சேற்றி யேணி களைவு.

(பழமொழி, 291)

954. இடையீ டுடையா ரிவரவரோ டென்று
தலையாயா ராய்ந்தறிந் தாரும் கடையாயார்
முன்னின்று கூறுங் குறளை தெரிதலாற்
பின்னின்று பேதையார் நட்பு.

( ,, 113)

955. பெருகு வதுபோலத் தோன்றிவைத் தீப்போல்
ஒருபொழுதுஞ் சொல்லாதே நந்து—மருகெலாஞ்
சந்தன நீள்சோலைச் சாரல் மலைநாட
பந்தமி லாளர் தொடர்பு.

(நாலடி, 234)

956. சான்றோ ரெனமதித்துச் சார்ந்தாய்மற் சார்ந்தாய்க்குச்
சான்றாண்மை சார்ந்தார்க ணில்லாயிற்—சார்ந்தோய்கேள்
சாந்தகத் துண்டென்று செப்புத் திறந்தொருவன்
பாம்பகத்துக் கண்ட துடைத்து.

( ,, 126)

957. பகல்போலும் நெஞ்சத்தார் பண்பின்மை யின்னா
நகையாய நண்பினார் நாரின்மை யின்னா
இகலி லெழுந்தவ ரோட்டின்னா வின்னா
நயமின் மனத்தவர் நட்பு.

(இன்னா. 8)

## அதி. 87. கூடாநட்பு

958. நலிந்தொருவர் நாளு மடுபாக்குப் புக்கால்
மெலிந்தவர் வீழாமை கண்டு—மலிந்தடைதல்
பூப்பிழைத்து வண்டு புடையாடுங் கண்ணினாய்
ஏப்பிழைத்துக் காக்கொள்ளு மாறு.

(பழமொழி, 354)

959. யாவ ரொருவ ரொருவர்தம் முள்ளத்தைத்
தேருந் துணைமை யுடையவர்—சாரற்
கனமணி நின்றிமைக்கு நாடகேள் மக்கள்
மனம்வேறு செய்கையும் வேறு.

(நாலடி, 127)

960. செறிப்பில் பழங்கூரை சேறணை யாக
இறைத்துநீ ரேற்றுங் கிடப்பர்—கறைக்குன்றம்
பொங்கருவி தாழும் புனல்வரை நன்னாட
தங்கரும முற்றுந் துணை.

( ,, 231)

---

**954.** 3ரிவரிவரோ; 4 டொன்றுந்,டென்றுந்; 6ராய்ந்தறூஉங்; 11 குதலை. **955.** 1-4 பெருகுவது போற்றோன்றி வைத்தீயே போல; 3 தோன்றவைத்; 4 தீயேபோல்; 6 செல்லாதே; 10 நீர்ச்சோலைச். **956.** 6 சார்ந்தோர்க. **957.** 10-11 னெழுந்தவ ரோடின்னா; 13 நவமின். **958.** 1 நலிந்தொருவன்; 3 மடுப்பார்க்குப், மடுப்பாக்குப்; 11 புடைபாடுங்; 14 கைக்கொள்ளு. **959.** 1 யாஅ; 9 கணமணி. **960.** 1 செறுப்பில்; 14 முந்துந்.

961. உள்ளத்தால் நள்ளா துறுதித் தொழிலராய்க்
கள்ளத்தால் நட்டார் கழிகிழமை—தெள்ளிப்
புனற்செதும்பு நின்றலைக்கும் பூங்குன்ற நாட
மனத்துக்கண் மாசாய் விடும்.

(நாலடி, 128)

## அதி. 88. பேதைமை

962. ஆயிரவ ரானு மறிவிலார் தொக்கக்கால்
மாயிரு ஞாலத்து மாண்பொருவன் போல்கல்லார்
பாயிருள் நீக்கு மதியம்போற் பன்மீனுங்
காய்கலா வாகு நிலா.

(பழமொழி, 17)

963. பெரியார்க்குச் செய்யுஞ் சிறப்பினைப் பேணிச்
சிறியார்க்குச் செய்து விடுதல்—பொறிவண்டு
பூமே விசைமுரலு மூரா வதுவன்றே
நாய்மேற் றவிசிடு மாறு.

( ,, 75)

964. ஓர்த்த கருத்து முலகு முணராத
மூர்க்கர்க் குறுதி மொழியற்க—மூர்க்கன்றான்
கொண்டதே கொண்டு விடானாகு மாகாதே
உண்டது நீலம் பிறிது.

( ,, 168)

965. தெரியாதார் சொல்லுந் திறனின்மை தீதாப்
பரியார் பயனின்மை செய்து—பெரியார்சொற்
கொள்ளாது தாந்தம்மைக் காவா தவர்பிறரைக்
கள்ளராச் செய்குறு வார்.

( ,, 310)

966. தங்குற்றம் நீக்கல ராகிப் பிறர்குற்றம்
எங்கெங்கும் நீக்கற் கிடைபுகுதல்—எங்கும்
வியனுலகில் வெள்ளாடு தன்வளி தீரா
தயல்வளி தீர்த்து விடல்.

( ,, 124)

967. சொல்லெதிர்ந்து தம்மை வழிபட் டொழுகலராய்க்
கல்லெறிந்தாற் போலக் கலாந்தலைக் கொள்வாரை
இல்லிருந் தாற்ற முனிவித்தல் உள்ளிருந்
தச்சாணி தாங்கழிக்கு மாறு.

( ,, 276)

968. இல்வாழ்க்கை யானு மிலிங்கானு மேற்கொள்ளார்
நல்வாழ்க்கை போக நடுவுநின்—றெல்லாம்

---

**961**. இது 'பேதைமை'யில் முதற்செய்யுளாகவுள்ளது. 5 கள்ளத்தார். **962**. 12 பண்மீனும். **963**. 10 விரைமுரலு; 14-15 றவிசிட்டவாறு. **964**. 4 முணராதார்; 13 உண்டதோர். **965**. 3-4 திறமின்மை மீதாய்ப்; 5 பெரியார்; 13 கள்ளாகச். **966**. 2 நீங்கல, நீக்கில; 6 நீங்கற்; 11 தின்றவழி; 14 தீர்ந்து. **967**. 3 வழிப்பட்; 4 டொழுகலாய்க், டொருகாலாய்க்; 10 தாற்றி; 13 தக்காணி; 14-15 தான்கழிந் தற்று.

ஒருதலையாச் சென்று துணியா தவரே
இருதலையுங் காக்கழிப் பார்.

(பழமொழி, 208)

969. கல்லார்க் கினனா யொழுகலுங் காழ்க்கொண்ட
இல்லாளைக் கோலாற் புடைத்தலும்—இல்லஞ்
சிறியாரைக் கொண்டு புகலுமிம் மூன்றும்
அறியாமை யான்வருங் கேடு.

(திரிகடு. 3)

970. நண்பிலார் மாட்டு நகைக்கிழமை செய்வானும்
பெண்பாலைக் காப்பிகழும் பேதையும்—பண்பின்
இழுக்காய சொல்லாடு வானுமிம் மூவர்
ஒழுக்கங் கடைப்பிடியா தார்.

( ,, 94)

971. இருளாய்க் கழியு முலோபியும் யாதுந்
தெருளா துரைக்கும் வெகுளியும்—பொருளல்ல
காதற் படுக்கும் விழைவு மினைமூன்றும்
பேதைமை வாழு முயிர்க்கு.

( ,, 93)

972. கொலைநின்று தின்றுழல் வானும் பெரியவர்
புல்லுங்காற் றூன்புல்லும் பேதையும்—இல்லெனக்கொன்
றீயென் பவனை நகுவானு மிம்மூவர்
யாதுங் கடைப்பிடியா தார்.

( ,, 74)

973. பழியஞ்சான் வாழும் பசுவும் பரிவிறைற்
கொண்ட வருந்தவம் விட்டானுங் கொண்டிருந்
தில்லஞ்சி வாழு மொருத்தி யிவர்மூவர்
நெல்லுண்ட நெஞ்சிற்கோர் நோய்.

( ,, 79)

974. பெருமை யுடையா ரினத்தி னகறல்
உரிமையில் பெண்டிரைக் காமுற்று வாழ்தல்
விழுமிய வல்ல துணிதலிம் மூன்றும்
முழுமக்கள் காத லவை.

( ,, 9)

975. பாலாற் கழீஇப் பலநா ளுணக்கினும்
வாலிதாம் பக்க மிருந்தைக் கிருந்தன்று
கோலாற் கடாஅய்க் குறினும் புகலொல்லா
நோலா வுடம்பிற் கறிவு.

(நாலடி, 258)

976. பெறுவதொன் றின்றியும் பெற்றானே போலக்
கறுவுகொண் டேலாதார் மாட்டுங்—கறுவினாற்
கோத்தின்னா கூறி யுரையாக்காற் பேதைக்கு
நாத்தின்னு நல்ல சுனைத்து.

( ,, 335)

---

**969, 970.** இவை சிலபிரதிகளிற் காணப்பெறவில்லை. **971.** 7 வெகுள்வும். **972.** 2 நின்றுழல்; 7 பேதைமையும். **973.** 1-2 பழியஞ்சா னைய; 8-9 கொண்டிருந்தவில்லஞ்சி; 12 யிம்மூவர், யிவைமூவர். **974.** 5 உரிமையிற். **975.** 9 கோலாய்க்; 12 புகலொவ்வா; 14-15 வுடம்பி னறிவு. **976.** 3 பெற்றாரே; 6 டல்லாதார்; 14 நன்கு; 15 சுவைத்து.

977. நல்லவை நாடொறு மெய்தா ரறஞ்செய்யார்
இல்லாதார்க் கியாதொன்று மீகலார்—எல்லாம்
இனியார்தோள் சேரா ரிசைபட வாழார்
முனியார்கொல் தாம்வாழும் நாள்.

(நாலடி, 338)

978. பன்றிக்கூழ்ப் பத்தரிற் றேமா வடித்தற்றால்
நன்றறியா மாந்தர்க் கறத்தா றுரைக்குங்காற்
குன்றின்மேற் கொட்டுந் தறிபோற் றலைதகர்ந்து
சென்றிசையா வாகுஞ் செவிக்கு.

( ,, 257)

979. கொலைஞ ருலையேற்றித் தீமடுப்ப வாமை
நிலையறியா தந்நீர்ப் படிந்தாடி யற்றே
கொலைவல் பெருங்கூற்றம் கோட்பார்ப்ப வீண்டை
வலையகத்துச் செம்மாப்பார் மாண்பு.

( ,, 331)

980. தெண்ணீர் பரந்து திரைசெறும் போய்க்கெட்ட
எண்ணெய்க்கொண் டீட்டற் கிவறுத லொக்கும்
பெண்மனம் பேதித் தொருப்படுப் பேனென்னும்
எண்ணி லொருவ னியல்பெண்ணு மாறே.

(வளையா.)

981. நீண்முகை கையாற் கிழித்தது மொக்குறு
மாண்வினைப் பாவை மறைந்தின்று கேட்குறிற்
பேணுது மன்பும் பிறந்துழிப் பேதுசெய்
தாணைப்பெண் ணைய வணைக்குறு மாறே.

( ,, )

## அதி. 89. புல்லறிவாண்மை

982. மறுமையொன் றுண்டோ மனப்பட்ட தெல்லாம்
பெறுமாறு செய்ம்மினென் பாரே—நறுநெய்யுட்
கட்டி யடையைக் களைவித்துக் கண்செரீஇ
இட்டிகை தீற்று பவர்.

(பழமொழி, 158)

983. நீர்த்தன் றொருவர் நெறியன்றிக் கொண்டக்காற்
போர்த்துத் தெருட்டல் பெரியார்க்கு மாகாதே
கூர்த்தநுண் கேள்வி யறிவுடையார்க் காயினும்
ஓர்த்த படுமே பறை.

( ,, 195)

984. கல்லாதுங் கேளாதுங் கற்றா ரவைநடுவட்
சொல்லாடு வாரையு மஞ்சற்பாற்—றெல்லருவி

---

**977.** 5 இல்லாருக்; 14 தாம்வீழு. **978.** 12 றலைசிதர்ந்து. **979.** 11 கோள்பார்ப்ப; 12 வீண்ட. **980.** 2 (ப்)பரந்த; 4 போய்க்கொட்ட; 6 டாடற்; 6-7 டிட்ட விவறுத; 15 னியல்பென்று. **981.** 1 நீண்வினைக்; 4 மோக்குறும்; 8 கேட்டுறிற்; 11 பிறிந்துழிப்; 13-15 தாணைப் பெண்ணை யணைக்குறு. **982.** 1-2 மறுமையு முண்டோ; 10 யடையக்; 13 இட்டகை. **983.** 3 நெறியின்றிக்; 13 தூர்க்கப்; 13-14 போர்க்கப் படுமோ; 15 மறை. **984.** 1 கல்லாது; 5-6 சொல்லா வொருவரையு; 8 றெல்லருவி.

பாயுமலை நாட பரிசறிந் தாரொடு
தேவரு மாற்ற லிலர்.

(பழமொழி, 350)

985. நல்லவை கண்டக்கால் நாச்சுருட்டி நன் றுணராப்
புல்லவையுட் டம்மைப் புகழ்ந்துரைத்தல்—புல்லார்
புடைத்தறுக ணஞ்சுவா னில்லுள்வில் லேற்றி
இடைக்கலத் தெய்து விடல்.

( ,, 249)

986. மானமும் நாணு மறியார் மதிமயங்கி
ஞான மறிவா ரிடைப்புக்குத் தாமிருந்து
ஞானம் வினாஅ யுரைக்கி னகையாகும்
யானைப்பற் காண்பான் புகல்.

( ,, 298)

987. நற்கறி வில்லாரை நாட்டவு மாகாதே
சொற்குறி கொண்டு துடிப்பண் ணுறுத்ததுபோல்
வெற்பறைமேற் றாழும் விலங்கருவி நன்னாட
கற்பறிவு போகா கடை.

( ,, 270)

988. சிறுகாலை யேதமக்குச் செல்வுழி வல்சி
இறுகிறுகத் தோட்கோப்புக் கொள்ளார்—இறுகிறுகிப்
பின்னறிவா மென் றுரைக்கும் பேதையார் கைகாட்டும்
பொன்னும் புளிவிளங்கா யாம்.

(நாலடி, 328)

989. தாமேயு மின்புறார் தக்கார்க்கு நன்றாற்றார்
ஏமஞ்சால் நன்னெறியுஞ் சேர்கலார்—தாமயங்கி
ஆக்கத்துட் டூங்கி யவத்தமே வாழ்நாளைப்
போக்குவார் புல்லறிவி னார்.

( ,, 327)

990. வெறுமை யிடத்தும் விழுப்பிணிப் போதும்
மறுமை மனத்தரே யாகி—மறுமையை
ஐந்தை யனைத்தானு மாற்றிய காலத்துச்
சிந்தியார் சிற்றறிவி னார்.

( ,, 329)

991. உளநாள் சிலவா லுயிர்க்கேம மின்றால்
பலர்மன்னுந் தூற்றும் பழியாற்—பலருள்ளுங்
கண்டாரோ டெல்லா நகாஅ தெவனொருவன்
தண்டித் தனிப்பகை கோள்.

( ,, 324)

992. இடம்பட மெய்ஞ்ஞானங் கற்பினு மென்றும்
அடங்காதா ரென்று மடங்கார்—தடங்கண்ணாய்

---

**985.** 4 நன்றுணராப்; 9 படைத்தறுக; 13 இடைத்தகலத், இடைக் காலத். **986.** 6 மறியா; 8 தாமயங்கி; 12 னகையாகி. **987.** 1-2 நற்குறி யில்லாரை; 5 சொற்கொறி, சொற்குறிது; 13 கற்பறியும்; 14 மேகா. **989.** 4 நின்றாற்றார்; 5 எமஞ்சார், சேமஞ்சார். **990.** 9 யந்தை; 11 மாகிய. **991.** 1 உளதாஞ்; 4 மின்றாம். **992.** 2 நன்ஞானங்; 12 பெய்திடினும், பெய் யினும்.

உப்பொடு நெய்பால் தயிர்காயம் பெய்தடினும்
கைப்பறா பேய்ச்சுரையின் காய்.

(நாலடி, 116)

993. கற்றவுங் கண்ணகன்ற சாயலு மிற்பிறப்பும்
பக்கத்தார் பாராட்டப் பாடெய்துந் தாமுரைப்பின்
மைத்துனர் பல்கி மருந்திற் றணியாத
பித்தனென் றெள்ளப் படும்.

( ,, 340)

994. வெல்வது வேண்டி வெகுண்டுரைக்கும் நோன்பியும்
இல்லது காமுற் றிருப்பானுங்—கல்வி
செவிக்குற்றம் பார்த்திருப் பானுமிம் மூவர்
உமிக்குற்றுக் கைவருந்து வார்.

(திரிகடு. 28)

995. அரும்பொனன் னூர்கோட்டி யார்வுற்றக் கண்ணுங்
கரும்புநின் பார்முன்னர் நாய்போற்—கரும்புலவர்
கொண்டொழிப வொன்றோ துயில்மடிப வல்லாக்கால்
விண்டுரைப்பர் வேறு விருந்து.

(தகடூர்.)

996. அந்தக னந்தகற் காறு சொலலொக்கும்
முந்துசெய் குற்றங் கெடுப்பான் முழுவதும்
நன்கறி வில்லா னறிவறி யாதவற்
கின்புறு வீட்டி னெறிசொல்லு மாறே.

(வளையா.)

## அதி. 90. பகைத்திறந்தெரிதல்

997. எதிர்த்த பகையை யிளைதாய போழ்தே
கதித்துக் களைக முதிரா—தெதிர்த்து
நணிநிற்பச் செய்தவர் நண்பெலாந் தீர்க்கத்
தணிமரங் காடாவ தில்.

(பழமொழி, 390)

998. வன்பாட் டவர்பகை கொள்ளினு மேலையார்
புன்பாட் டவர்பகை கோடல் பயமின்றே
கண்பாட்ட பூங்காவிக் கானலந் தண்சேர்ப்ப
வெண்பாட்டம் வெள்ளந் தரும்.

( ,, 71)

999. தழங்குரல் வானத்துத் தண்பெயல் பெற்றுங்
கிழங்குடைய வெல்லா முளைக்குமோ ராற்றான்
விழைந்தவரை வேறன் றிக் கொண்டொழுகல் வேண்டா
பழம்பகை நட்பாத லில். ( ,, 97)

---

**993.** 10 மல்கி; 14 றெண்ணப். **994.** 2 கொண்டு; 4 நோன்பிலியும்; 5 அல்லது; 10-11 பார்த்தே யிருப்பானிம்; 13 உமிக்குற்றிக். **995.** தகடூர் மாலை. 1-2 அரும்பென்னூர் முன்கோட்டி, அரும்பொன்னூர் முன்கோட்டி; 1-3 அரும்பன்னூர் முன்கொடிய ராயுற்றக்; 7 காய்போற்; 8 பெரும்புலவர்; 13 விண்டுரையா; 14 வேறோர். **996.** 1 அந்த; 3-4 காறுசொலல் யாதொக்கும்; 15 னெறிசெல்லு. **997.** 5 கதிர்த்துக்; 8 தெதிர்த்தால்; 10 செய்தலா, செய்பவர்; 14 காடாய; 14-15 காடாத லில். **999.** 3 தண்புயல்; 14-15 நட் பாவ தில்.

1000. அமர்நின்ற போழ்தின்க ணாற்றுவ ரேனும்
நிகரொன்றின் மேல்விடுத லேதம்—நிகரின்றி
வில்லொடுநே ரொத்த புருவத்தா யஃதன்றோ
கல்லொடு கையெறியு மாறு.

(பழமொழி, 382)

1001. ஆற்றப் பெரியார் பகைவேண்டிக் கொள்ளற்க
போற்றாது கொண்டரக்கன் போருளகப் பட்டானால்
நோற்ற பெருமை யுடையாருங் கூற்றம்
புறங்கொம்மை கொட்டினா ரில்.

( ,, 126)

1002. முன்னலிந் தாற்ற முரண்கொண் டெழுந்தாரைப்
பின்னலிது மென்றுரைத்தல் பேதைமையே—பின்னின்று
காம்பன்ன தோளி கலங்கக் கடித்தோடும்
பாம்புபற் கொள்வாரோ வில்.

( ,, 148)

1003. பொருந்தா தவரைப் பொருதட்டக் கண்ணும்
இருந்தமையா ராகி யிறப்ப வெகுடல்
விரிந்தருவி வீழ்தரும் வெற்ப வதுவே
அரிந்தரிகால் நீர்ப்படுக்கு மாறு.

( ,, 281)

1004. உற்றதற் கெல்லா முரஞ்செய்ய வேண்டுமோ
கற்றறிந்தார் தம்மை வெகுளாமற் காப்பதே
நெற்செய்யப் புற்றேய்ந்தாற் போல நெடும்பகை
தற்செய்யத் தானே கெடும்.

( ,, 83)

1005. மிக்குடைய ராகி மிகமதிக்கப் பட்டாரை
ஒற்கப் படமுயற லென்ற விழுக்காகும்
நற்கெளி தாகி விடினும் நளிவரைமேற்
கற்கிள்ளிக் கையுய்ந்தா ரில்.

( ,, 36)

1006. இயற்பகை வெல்குறுவா னேமாப்ப முன்னே
அயற்பகை தூண்டி விடுத்தோர்—நயத்தாற்
கறுவழுங்கிக் கைக்கெளிதாச் செய்க வதுவே
சிறுகுரங்கின் கையாற் றுழா.

( ,, 51)

1007. நிரம்பி நிரையத்தைக் கண்டந் நிரையம்
வரம்பில் பெரியானும் புக்கான்—இரங்கார்
கொடியார மார்ப குடிகெட வந்தால்
அடிகெடமன் றாடி விடல்.

( ,, 103)

---

**1000**. 11 புருரத்தா. **1001**. 6-7 கொண்டான் பொருளகப்; 8 பட்டானா. **1002**. 7 பேதைதமை; 8 மின்னின்று. **1003**. 3 பொருந்தட்டக்; 5-7 இருந்தமை யாரா விறப்ப; 13 அரிந்தரிக்கால். **1004**. 1 உற்றறி; 3 முரஞ்செயல். **1005**. 5 ஒக்கப்; 6 படமுடையற; 8 விழுக்காடு; 12 நனி வரைமேற். **1006**. 2 வெஃகுறுவா. **1007**. 3 கண்டிந்; 9 கடியார.

1008. எரியுந் தீத்திர ளெட்டுணை யாயினுங்
கரியச் சுட்டிடுங் காந்திக் கனலுமேல்
தெரியிற் றொல்பகை தான்சிறி தாயினும்
விரியப் பெற்றிடின் வென்றிடு கிற்குமே.

(சூளா. சீய. 71)

1009. முட்கொ ணச்சு மரமுளை யாகவே
உட்க நீக்கி னுகிரினும் நீக்கலாம்
வட்க நீண்டதற் பின்மழுக் கொள்ளினுங்
கட்கொ டாமன்ன யார்களை கிற்பவே.

( ,, 72)

## அதி. 91. உட்பகை

1010. தலைமை கருதுந் தகையாரை வேந்தன்
நிலைமையா னேர்செய் திருத்தல்—மலைமிசைக்
காம்பனுக்கு மென்றோளா யஃதாலவ் வோரறையுட்
பாம்போ டுடனுறையு மாறு.

(பழமொழி, 349)

1011. கண்ணின் மணியேபோற் காதலராய் நட்டாரும்
உண்ணுந் துணையு முளராய்ப் பிறராவர்
எண்ணி யுயிர்கொள்வா னென்று திரியினும்
உண்ணுந் துணைக்காக்குங் கூற்று.

( ,, 89)

1012. வெள்ளம் பகைவரினும் வேறிடத்தார் செய்வதென்
கள்ள முடைத்தாகிச் சார்ந்தார் கழிநட்புப்
புள்ளொலிப் பொய்கைப் புனலூர வஃதன்றே
உள்ளில்லத் துண்ட தனிசு.

( ,, 98)

1013. இம்மைப் பழியு மறுமைக்குப் பாவமுந்
தம்மைப் பிரியார் தமர்போ லடைந்தாரிற்
செம்மைப் பகைகொண்டு சேராதார் தீயரோ
மைம்மைப்பின் நன்று குருடு.

( ,, 188)

1014. தொழுததங் கையி னுள்ளுந் துறுமுடி யகத்துஞ் சோர
அழுதகண் ணீரி னுள்ளு மணிகலத் தகத்து மாய்ந்து
பழுதுகண் ணரிந்து கொல்லும் படையுட னடங்கும் பற்று
தொழிகயார் கண்ணுந் தேற்றந் தெளிகுற்றார் விளிகுற் றாரே.

(சிந்தா. 1891)

1015. தோய்தகை மகளிர்த் தோயின் மெய்யணி நீக்கித் தூய்நீர்
ஆய்முது மகளிர் தம்மா லரிறபத் திமிரி யாட்டி

---

**1008.** 2-3 தீத்திற ளெட்டுணை; 14 பெற்றுடன்; 15 வேறிடு. **1009.** 8 கொல்லலாம்; 10 நீண்டதன்; 12 தன்னினுங்; 14 டார்மன்ன. **1010.** 6 நேர்செய்; 11-12 யஃதாலல் வோரறையுட். **1011.** 3 காதலாய்; 4 நட்டானும்; 5 உண்ணுந்; 7-8 (ம்)பிறராகி நிற்பரால். **1012.** 2 பலவரினும்; 3-5 வேறிடத்தாற் சென்றுருக் குள்ள; 8 கணட்புப்; 13-14 உள்ளில்தனு வுண்ட. **1013.** 6 பரியார், பிரியா; 13 மிமைப்பினின். **1014.** 10 மருங்கலத்; 13 பழுதுதண். **1015.** 3 தொய்யின்; 6 தூநீர்; 10 லரிப்பறத்; 15 யார்க்கு; 19 தாநவு, தானல.

வெய்திறக் தோளி னார்க்கு வெண்டுகில் மாலை சாந்தந்
தாய்நல கலங்கள் சேர்த்தித் தடமுலை தோய்க வென்றான்.
(சிந்தா. 1892)

1016. பகைவ ருள்ளமும் பாம்பின் படர்ச்சியும்
வகைசெய் மேகலை மங்கையர் நெஞ்சமும்
மிகைசெல் மேகத்து மின்னுஞ்செந் நில்லை
புகையும் வெயினீர் போற்றுபு சென்மினே.
( ,, 1816)

## அதி. 92. பெரியாரைப் பிழையாமை

1017. மன்னவ னாணைக்கீழ் மற்றையார் மீக்கூற்றம்
என்ன வகையாற் செயப்பெறுப—புன்னைப்
பரப்புநீர் தாஅம் படுகடற்றண் சேர்ப்ப
மரத்தின்கீ ழாகா மரம்.
(பழமொழி, 311)

1018. வெஞ்சின மன்னவன் வேண்டாத செய்யினும்
நெஞ்சத்துக் கொள்வ சிறிதுஞ் செயல்வேண்டா
என்செய் தகப்பட்டக் கண்ணு மெடுப்புபவோ
துஞ்சு புலியைத் துயில்.
( ,, 33)

1019. தாமேயுந் தம்மைப் புறந்தர வாற்றாதார்
வாமான்றேர் மன்னரைக் காய்வ தெவன்கொலோ
ஆமா வுகளு மணிவரை வெற்பகேள்
ஏமாரார் கோங்கேறி னார்.
( ,, 341)

1020. இடுகுடைத்தேர் மன்ன ரெமக்கமையு மென்று
கடிதவர் காதலிப்பத் தாங்காதல் கொண்டு
முடித லெனைத்து முணரா முயறல்
கடிய கனைந்து விடல்.
( ,, 309)

1021. உரைத்தவர் நாவோ பருந்தெறியா தென்று
சிலைத்தெழுந்து செம்மாப் பவரே—மலைத்தால்
இழைத்த திறவா தவரைக் கவற்றிப்
பலிப்புறத் துண்ப ருணா.
( ,, 176)

1022. எல்லாத் திறத்து மிறப்பப் பெரியாரைக்
கல்லாத் துணையார் கயப்பித்தல்—சொல்லின்
நிறைந்தார் வளையினா யஃதா லெருக்கு
மறைந்தியானை காய்த்தி விடல். ( ,, 376)

---

**1016.** 9 மிமைசெல், மிகைசெய்; 11 மின்னலு; 11-12 மின்னுஞ் சென்னீணிலாப்; 15 போற்றுவ. **1017.** 10 தாவும், காஅம். **1018.** 3 வேண்டாது; 5 நெஞ்சகத்துக்; 12 மெழுப்புபவோ. **1019.** 8 தெவன் கொலாம்; 13 எமாறார். **1020.** 4 மென்றுங்; 5 கடிதவர்க்; 7 தாங்கை தல்; 10 லனைத்து; 11 முணரார்; 13 கடிப, கடிவை; 14 களைந்து. **1021.** 4 தொன்று; 11 திவரைக்; 13 புலிப்புறத். **1022.** 9 அறைந்தார்; 12 லெருக்க; 13 மிறைந்தியாலை; 14 காய்து.

1023. தீயன வல்ல செயினுந் திறல்வேந்தன்
காய்வன செய்தொழுகார் கற்றறிந்தார்—காயும்
புலிமுன்னர்ப் புல்வாய்க்குப் போக்கி லதுவே
வலிமுன்னர் வைப்பார மில்.

(பழமொழி, 234)

1024. முன்னு மொருகாற் பிழைப்பான்ற னாற்றவும்
பின்னும் பிழைப்பப் பொறுப்பவோ—இன்னிசை
யாழின்வண் டார்க்கும் புனலூர ஈனுமோ
வாழை யிருகாற் குலை.

( „ 221)

1025. மெய்ம்மையே நின்று மிகநோக்கப் பட்டவர்
கைம்மேலே நின்று கறப்பன செய்தொழுகிப்
பொய்ம்மேலே கொள்ளி னிறைவற்கொண் டூர்குறைப்பார்
தம்மேலே வீழ்ப் பனை.

( „ 201)

1026. உறாஅ வகையது செய்தாரை வேந்தன்
பொறாஅன் போலப் பொறுத்தால்—பொறாஅமை
மென்மேலுஞ் செய்து விடுத லதுவன்றே
கூன்மே லெழுந்த குரு.

( „ 305)

1027. நெறியா லுணராது நீர்மையு மின்றிச்
சிறியா னெளியானென் று—பெரியானைத்
தங்கணேர் வைத்துத் தகவல்ல கூறுதல்
திங்களை நாய்குரைத் தற்று.

( „ 149)

1028. சீர்த்தகு மன்னர் சிறந்தனைத்துங் கெட்டாலும்
நேர்த்துரைத் தெள்ளார் நிலைநோக்கிச்—சீர்த்த
கிளையின்றிப் போஒய்த் தனித்தாயக் கண்ணும்
இளைதென்று பாம்பிகழ்வா ரில்.

( „ 383)

1029. வென்றடு கிற்பாரை வேர்ப்பித் தவர்காய்வ
தொன்றொடு நின்ற சிறியார் பலசெய்தல்
குன்றொடு தேங்குளாம் வெற்ப வதுபெரிது
நன்றொடு வந்ததொன் றன்று.

( „ 65)

1030. பொறுப்பரென் றெண்ணிப் புரைதீர்ந்தார் மாட்டும்
வெறுப்பன செய்யாமை வேண்டும்—வெறுத்தபின்

---

**1023.** இது சில பிரதிகளில் இல்லை; ஆனால் இதற்குரிய எண்ணும் காணப்பெறவில்லை. 15 யில். **1024**. 1 முன்ன; 4 னாற்றவும், னாற்றவும்; 6 பிழைப்ப; 14 பலகாற். **1025**. 11 னிறையவர்கொன்; 11-12 னிறைவர்கொன் டூர்க்குறைப்பர்; 13 தம்யாவே. **1026**. 2 வகைசெய்து. **1027**. 6 னெளியரா; 9 தங்கண்மேல். **1028**. 3 சிறந்தனைத்தங்; 5 நேர்த்துறைத்; 6 தெள்ளா; 7 நிலநோக்கிச்; 10-11 போஒ யணித்தாயக். **1029**. 4 தவர் காப்ப. **1030**. 13 பேர்த்தலால்.

ஆர்க்கு மருவி யணிமலை நன்னாட
பேர்த்தரல் யார்க்கு மரிது.

(நாலடி, 161)

1031. விரிநிற நாகம் விடருள தேனும்
உருமின் கடுஞ்சினம் சேணின்று முட்கும்
அருமை யுடைய வரண்சேர்ந்து முய்யார்
பெருமை யுடையார் செறின்.

( ,, 164)

1032. அவமதிப்பு மான்ற மதிப்பு மிரண்டு
மிகன்மக்க ளான்மதிக்கற் பால—நயமுணராக்
கையறியா மாக்க ளிழிப்பு மெடுத்தேத்தும்
வையார் வடித்தநூ லார்.

( ,, 163)

1033. எம்மை யறிந்திலி ரெம்போல்வா ரில்லென்று
தம்மைத்தாங் கொள்வது கோளன்று—தம்மை
அரியரா நோக்கி யறனறியுஞ் சான்றோர்
பெரியராக் கொள்வது கோள்.

( ,, 165)

1034. பொன்னே கொடுத்தும் புணர்தற் கரியாரைக்
கொன்னே தலைக்கூடப் பெற்றிருந்தும்—அன்னோ
பயமில் பொழுதாகக் கழிப்பரே நல்ல
நயமி லறிவி னவர்.

( ,, 162)

1035. அருளு மேலர சாக்குமன் காயுமேல்
வெருளச் சுட்டிடும் வேந்தனு மாதெய்வம்
அருளி மற்றவை வாழ்த்தினும் வையினும்
அருளி யாக்க லழித்தலங் காபவோ.

(சிந்நா. 247)

1036. தன்னை யாக்கிய தார்ப்பொலி வேந்தனைப்
பின்னை வௌவிற் பிறழ்ந்திடும் பூமகள்
அன்ன வன்வழிச் செல்லினிம் மண்மிசைப்
பின்னைத் தன்குலம் பேர்க்குந ரில்லையே.

( ,, 245)

1037. பிறையது வளரத் தானும் வளர்ந்துடன் பெருகிப் பின்னாட்
குறைபடு மதியந் தேயக் குறுமுயல் தேய்வ தேபோல்
இறைவனைத் தன்னை யாக்கி யவன்வழி யொழுகி னென்று
நிறைமதி யிருளைப் போழு நெடும்புகழ் விளக்கு மன்றே.

( ,, 254)

---

**1031**. 1 விரிசில. **1032**. 5 மிகைமக்க; 10 மக்க. **1033**. 9 அறியாரை. **1034**. 11 கழிப்பவே; 15 லனார். **1035**. 7 வேந்தனு; 9-10 அருளின் மற்றது; 9-12 இருளி மற்றவை வையினும் வாழ்த்தினும்; 12 வைகினும்; 16 காபவே, காப்பவோ. **1036**. 9 மன்ன; 10-11 வவ்வழிச் சேறலிம்; 11 செல்லினு. **1037**. 6 பின்னைக்; 17-18 யொழுக லென்று; 18 னின்று.

1038. யாவ ராயினும் நால்வரைப் பின்னிடின்
தேவ ரென்பது தேறுமிவ் வையகம்
காவல் மன்னவர் காய்வன சிந்தியார்
நாவி னும்முரை யார்நவை யஞ்சுவார்.

(சிந்நா. 249)

1039. தீண்டி னார்தமைத் தீச்சுடு மன்னர்தீ
ஈண்டு தங்கிளை யோடு மெரித்திடும்
வேண்டி னின்னமு தாநஞ்சு மாதலான்
மாண்ட தன்றுநின் வாய்மொழித் தெய்வமே.

( ,, 250)

## அதி. 93. பொதுமகளிர்*

1040. அங்கண் விசும்பி னமரர் தொழப்படுஞ்
செங்கண்மா லாயினு மாகமன்—றங்கைக்
கொடுப்பதொன் றில்லாரைக் கொய்தளி ரன்னார்
விடுப்பர்தங் கையாற் றொழுது.

(நாலடி, 373)

1041. உள்ள மொருவ னுழையதா வொண்ணுதலார்
கள்ளத்தாற் செய்யுங் கருத்தெல்லாம்—தெள்ளி
அறிந்த விடத்து மறியாராம் பாவஞ்
செறிந்த வுடம்பி னவர்.

( ,, 380)

1042. ஏமாந்த போழ்தி னினியார்போ னின்றாய்த்
தாமார்ந்த போழ்தே தகர்க்கோடா மாணேக்கிற்
றங்நெறிப் பெண்டிர் தடமுலை சேராரே
செந்நெறிச் சேர்துமென் பார்.

( ,, 378)

1043. ஊறுசெய் நெஞ்சந்தம் முள்ளடக்கி யொண்ணுதலார்
தேற மொழிந்த மொழிகேட்டுத்—தேறி
எமரென்று கொள்வாருங் கொள்பவே யார்க்குந்
தமரல்லர் தம்முடம்பி னார்.

( ,, 379)

1044. யாரொடு யாழ்நெலி கோனில வார்கொடிப்
பாரொடு பத்தினி மார்போ லொழுகென்று
கூறினள் கூத்தி முதிர்ந்தாள் மகட்கிவை
வேறோ ரிடத்து வெளிப்பட நன்றாம்.

(வளையா.)

1045. ஆய்குராங் கஞ்சிறை வண்டினம் போல்கென்று
பாயிர மின்றிப் பயிற்றி மொழிந்தனள்
மேவரும் வான்பொருள் தந்துநின் தோணம்பி
யாவ ரடைந்தவர்க் கவையும் புரைப. ( ,, )

---

1038. 7 தேறினிவ். 1039. 11 தஞ்சுடு. * வரைவின் மகளிர். 1040. 7 மாகமற்; 13 விடுப்பதாங். 1041. 3 னுழைதா. 1042. 4 றின்னராய்த்; 7 தகாததோ; 8 மாநோக்கிற். 1043. 3 மூள்ளட (வொ); 9 யமரென்று; 13 தமரல்ல. 1044. 7 யாம்போ, மார்போ; 8 லெழுமென்று; 9 கூறினன்; 10 கூத்தின்; 12 மகட்கவை; 15 வெளிப்படல்; 16 நன்றும். 1045. 1 நாய்குராங்; 4 போல்கென்றும்; 6 மன்றிப்; 14-16 ரொருவ ரடைந்தவ ரெல்லாம்.

1046. வாரி பெருகப் பெருகிய காதலை
வாரி சுருங்கச் சுருங்கி விடுதலின்
மாரி பெருகப் பெருகி யறவறாம்
வார்புன லாற்றின் வகையும் புரைய.

(வளையா.)

1047. எங்ஙன மாகிய திப்பொரு ளப்பொருட்
கங்ஙன மாகிய வன்பின னாதலின்
எங்ஙனம் பட்டனன் பாண்மகன் பாண்மகற்
கங்ஙன மாகிய யாழும் புரைய.

( ,, )

1048. கரணம் பலசெய்து கையுற் றவர்கட்
கரண மெனுமில மாற்றிற் கலந்து
திரணி யுபாயத்திற் றிண்பொருள் கோடற்
கரணி ஞெலிகோ லமைவர வொப்ப.

( ,, )

1049. நாடொறு நாடொறு நந்திய காதலை
நாடொறு நாடொறு நைய வொழுகலின்
நாடொறு நாடொறு நந்தி யுயர்வெய்தி
நாடொறுந் தேயும் நகைமதி யொப்ப.

( ,, )

1050. வனப்பில ராயினும் வன்மையி லோரை
நினைத்தவர் மேவா நிற்பமைக் காவர்தாங்
கனைத்துடன் வண்டொடு தேனின மார்ப்பப்
புனத்திடைப் பூத்த பூங்கொடி யொப்ப.

( ,, )

1051. தங்கட் பிறந்த கழியன்பி னோர்களை
வன்கண்மை செய்து வலிய விடுதலின்
இன்பொரு ளேற்றி யொழுகின்ற வாணிகர்க்
கங்கட் பரப்பகத் தாழ்கல மொப்ப.

( ,, )

1052. ஒத்த பொருளா னுறுதிசெய் வார்களை
யொத்திறத் தானும் வழிபட் டொழுகலிற்
பைத்தகல் வல்குற்பொற் பாவையி னல்லவர்
பத்தினிப் பெண்டிர் படியும் புரைய.

( ,, )

1053. வீபொரு ளானை யகன்று பிறனுமோர்
மாபொரு ளான்பக்கம் மாண நயத்தலின்
மேய்புலம் புல்லற மற்றோர் புலம்புகு
மாவும் புரைய மனையன்ன கண்ணார்.

( ,, )

---

**1046.** 12 யறலறும். **1047.** 2-3 மாதிப் பொரு. **1048.** 3 கைகற்; 4 றவர்கண்ட; 6-8 மெனுமில்ல ராறுதிறறகறகு, மெனுமில ராற்றிறகாது; 10 யும் பாயத்திற். **1049.** 12 யுளைவெய்தி. **1050.** இது சில பிரதிகளில் இல்லை. 1 வனப்பின; 3 வண்மையி; 7-8 நிலைமைக் கவர்நங்; 8 காவாதா; 9 கனைத்துடன்; 14 பூத்ததோர். **1051.** 7 வழிய; 9-10 பொங்கு பொருளேற்றி; 16 மெறிப்ப. **1052.** 10 வல்குற்; 11 பாவையி; 15 படிவம். **1053.** இதன்பின் 'நாயும் போல்வர்' (1057). 9 மேய்புறம்.

1054. நுண்பொரு ளானை நுகர்ந்திட்டு வான்பொருள்
நன்குடை யானை நயந்தனர் கோடலின்
வம்பிள மென்முலை வாணெடுங் கண்ணவர்
கொம்பிடை வாழுங் குரங்கும் புரைப.

(வளையா.)

1055. முருக்கலர் போற்சிவந் தொள்ளிய ரேனும்
பருக்காடில்லவர் பக்க நினையார்
அருப்பிள மென்முலை யஞ்சொ லவர்தாம்
வரிச்சிறை வண்டின் வகையும் புரைப.

( ,, )

1056. மக்கட் பயந்து மனையற மாற்றுதல்
தக்க தறிந்தார் தலைமைக் குணமென்ப
வைத்தா வல்குற் படிற்றுரை யாரொடு
துய்த்துக் கழிப்பது தோற்றமொன் றின்றே.

( ,, )

1057. நாயும் போல்வர்பல் லெச்சிலு நச்சலால்
ஈயும் போல்வர்செய் நன்றி சிதைத்தலால்
நோயும் போல்வர் நுகர்தற் கருமையால்
வேயும் போல்வரிவ் வேனெடுங் கண்ணினார்.

(சாந்தி.)

1058. தோளு மென்முலை யும்மல்குற் பாரமும்
நாளு நாளு நலின்று பருகிய
கேள்வன் மார்க்கும் பகைஞர்க்கு மொத்தலால்
வாளும் போல்வரிவ் வாணெடுங் கண்ணினார்.

( ,, )

1059. அன்பு நூலாக வின்சொ லலர்தொடுத் தமைந்த காதல்
இன்பஞ்செய் காமச் சாந்திற் கைபுனைந் தேற்ற மாலை
நன்பகற் சூட்டி விள்ளா தொழுகினும் நங்கை மார்க்குப்
பின்செலும் பிறர்க ணுள்ளம் பிணையனார்க் கடிய தொன்றே.

(சிந்தா. 1596)

1060. ஆசை யல்குற் பெரியாரை யருளு மிடையுஞ் சிறியாரைக்
கூட மொழியும் புருவமுங் குழல மாகி யிருப்பாரை
வாசக் குழலு மலர்க்கண்ணு மனமுங் கரிய மடவாரைப்
பூசல் பெருக்க வல்லாரைப் பொருந்தல் வாழி மடநெஞ்சே.

(நாரத.)

## அதி. 94. கள்ளுண்ணாமை

1061. மாணாப் பகைவரை மாறொறாக் கல்லாதார்
பேணு துரைக்கு முரைகேட் டுவந்ததுபோல்

---

**1054.** 1 நொய்ம்; 7 நயத்துனர், நயந்தன; 9 வம்பின; 12 கண்ணியர். **1055.** 5 பருக்காட்; 6 டிலவவர்; 7 மதக; 13 வகைச்சிறை. **1056.** 11 படித்துறை; 14 களிப்பது; 15 தோற்றமின். **1057.** 2-3 போல்வர் பலரெச்சில்; 6 போல்வர்நெய்; 10-12 போல்வர்கை நுண்பொருள் கொள்கலால்; 13 வீயும்; 14 போல்வரவ். **1058.** 2-3 மென்முலையு மலர்க்குழற்; 8 பரிகிலாக்; 14 போல்வரவ். **1059.** 11 தியற்றி; 20 பிறர்கா; 22 பிணையனார்; 23 குடைய. **1060.** சாந்திபுராணம். 9 புரூரமுமே. **1061.** 1 மாணப்; 6 துரைக்கு; 9 ஊனுநர்த்; 12 கண்ணினைக்.

ஊணார்ந் துதவுவதொன் றில்லெனினுங் கள்ளினைக்
காணாக் களிக்குங் களி.

(பழமொழி, 256)

1062. கிளைஞர்க் குதவாதான் செல்வமும் பைங்கூழ்
விளைவின்கட் போற்றா னுழவும்—இளையனாய்க்
கள்ளுண்டு வாழ்வான் குடிமையு மிம்மூன்றும்
உள்ளபோன் றில்லாப் பொருள்.

(திரிகடு. 59)

1063. ஒளியு மொளிசான்ற செய்கையுஞ் சான்றோர்
தெளிவுடைய னென்றுரைக்குந் தேசுங்—களியென்னுங்
கட்டுரையாற் கோதா படுமே லிவையெல்லாம்
விட்டொழியும் வேறாய் விரைந்து.

(அறநெறி. 145)

1064. உள்ளமொழி செய்கைகளி னொன்றியுல கேத்துந்
தள்ளரிய தன்மைவழி நிற்றலுறு நல்லீர்
எள்ளுநர்கள் தன்மையிது நிற்கவிடர் செய்யுங்
கள்ளுமுணல் குற்றங் கடைப்பிடிமி னென்றான்.

(சிந்தா. ?)

1065. மாலைப் பந்து மாலையு மேந்தி மதுவார்பூஞ்
சோலை மஞ்ஞைச் சூழ்வளை யார்தோள் விளையாடி
ஞாலங் காக்கு மன்னவ ராவார் நறவுண்ணாச்
சீலங் காக்குஞ் சிற்றுப கார முடையாரே.

( ,, 2928)

1066. தன்னைத்தா னுணர்ந்தி ருந்த தகையது பிறவி யென்ப
தென்னத்தா மறையு மற்றைத் துறைகளு மிசைப்ப தெல்லா
முன்னைத்தான் றன்னை யோரான் முடையெழு மழுக்கின் மேலே
பின்னைத்தான் பெறுவ தம்மா நறவுண்டு திகைக்கும் பித்தே.

(இராமாவ. கிட்கிந்தைப். 92)

1067. செற்றதும் பகைஞர் நட்டார் செய்தபே ருதவி தானுங்
கற்றதுங் கண்கூ டாகக் கண்டதுங் கரையி லாவிற்
சொற்றதும் பாவம் வந்து தொடர்ந்ததும் படர்ந்த துன்ப
முற்றது முணரா ராயி னுறுதிவே றிதனி னுண்டோ.

( ,, 94)

1068. வஞ்சமுங் களவும் பொய்யு மயக்கமும் வரம்பில் கொட்புந்
தஞ்சமென் றோரை நீக்குந் தன்மையுங் களிப்புந் தாங்கும்
வஞ்சமும் நன்குந் நீங்குங் கள்ளினால் மயக்கல் போல
நஞ்சமுங் கொல்வ தல்லால் நரகினை நல்கா தன்றே.

( ,, 95)

## அதி. 95. சூது

1069. பாரதத் துள்ளும் பணையந்தந் தாயமா
ஈரைம் பதின்மரும் போரெதிர்ந் தைவரொ

---

**1062.** 1 கிளைகட்; 8 இளையானாய்க். **1063.** 5 தெளிவுடையா; 6 ரென் றுரைக்குந், னின்றுரைக்குந்; 10. கோதப், கோதுப். **1064.** 3 னொன் றமுல; 4 கத்துங்; 6 தண்மைவிழி. **1065.** 7 மஞ்ஞை; 18-19 சிற்றுக ராய. **1066.** 16 முறையெழு; 19 பின்னைத்தாம்; 24 மாதோ, பித்தோ. **1067.** 8-9 கண்கொ ளாத. **1068.** 10 தண்மையுங்; 12 தாக்கும்; 13-14 வஞ்சமே நணுகுங்; 24 தன்றோ. **1069.** 4 தாரமா; 13 காதலொ.

டேதில ராகி யிடைவிண்டா ராதலாற்
காதலரொ டாடார் கவறு.

(பழமொழி, 52)

1070. நட்டா ரிடுக்கண் தனிகாண்டல் நற்கின்னா
ஒட்டார் பெருமிதங் காண்டல் பெரிதின்னா
கட்டிலா மூதூ ருறையின்னா வாங்கின்னா
நட்ட கவற்றினாற் சூது.

(இன்னா. 26)

1071. புலைமயக்கம் வேண்டிற் பொருட்பெண்டிர்த் தோயல்
கலமயக்கங் கள்ளுண்டு வாழ்தல்—சொலைமுனிந்து
பொய்மயக்கஞ் சூதின்கட் டங்குத லிம்மூன்றும்
நன்மையி லாளர் தொழில்.

(திரிகடு. 39)

1072. உருவழிக்கு முண்மை நலனழிக்கும் வண்மைத்
திருவழிக்கு மானஞ் சிதைக்கும்—ஒருவ
ரொருவரோ டன்பழிக்கு மொன்றலாச் சூது
பொருவரோ தக்கார் புரிந்து.

(பாரதம்.)

1073. முன்னர் விளையாடி முட்டுவார் முட்டினால்
தன்மை திரிந்து சலந்தோன் றும்—பின்னர்
மிகாதோ வெகுளி வெகுண்டாலச் சூது
தகாதோ தருவதோ தான்.

( ” )

1074. பிறன்றாரம் வேட்டல் பிழைப்பிலார்ச் சீறல்
அறன்கெட ஞயமே சூழ்தல்—மறந்தேயுந்
தீநிலத்தார் சொற்கேட்டல் தீச்சூ திவைகண்டாய்
மேனிலத்தார் கேட்டுக்கு வித்து.

( ” )

1075. ஓதலு மோதி யுணர்தலுஞ் சான்றோரால்
மேதை யெனப்படு மேன்மையுஞ்—சூது
பொருமென் னுஞ் சொல்லினாற் புல்லப் படுமேல்
இருளா மொருங்கே யிவை.

(அறநெறி. 148)

1076. சூதர் கழக மரவ மறுக்களம்
பேதைக ளல்லார் புகாஅர் புகுபவேல்
ஏதம் பலவுந் தரும்.

(ஆசார. 98)

1077. பொய்யொடு மிடைந்தபொரு ளாசையுரு ளாய
மைபடு வினைத்துகள் வழங்குநெறி மாயஞ்

---

**1070.** 3 நனிகாண்டல், நனிகண்டல்; 7 கண்டல்; 11 ருறையின்னா. **1071.** 4 தோய்தல்; 5 கலைமயக்கம்; 8 தொலைமுனிந்து, கொலைமுனிந்து. **1072.** 2 முன்னை; 11 மொன்றலாற்; 14 தக்கோர். **1073.** 7 சலத்தொன்றும்; 8 பின்னை; 11 வெண்டாலச். **1074.** 6 ஞய்மேய; 8 மறந்தோயுந். **1075.** 7 மேதையுஞ்; 12 படுமே. **1076.** 3-4 மரவமா ருக்களம்; 4 மருள்களம்; 8 புகுவவேல். **1077.** 3 ளானகையு; 6-7 வினைக்கண மயங்குநெறி; 8 யாயஞ்; 14 நுனித்தல்கவ.

செய்தபொருள் பெய்தகலஞ் செம்மைசுடு செந்தீக்
கைதவ நுனித்தகவ ருடலொழி கென்றான்.

(சிந்தா. 2873)

## அதி. 96. குடிப்பிறப்பு*

1078. சென்ற புகழ்செல்வ மீக்கூற்றஞ் செவ்வினை
நின்ற நெறிகல்வி வள்ளன்மை—ஒன்றாம்
அளிவந்தார் பூங்கோதா யாறு மறையின்
வழிவந்தார் கண்ணே வனப்பு.

(ஏலாதி, 1)

1079. ஈட்டிய வொண்பொரு ளில்லெனினு மொப்புர
வாற்றாங் குடிப்பிறந்த சான்றவர்—ஆற்றவும்
போற்றப் படாதாகிப் புல்லின்றி மேயினும்
ஏற்றாக்கன் றேறாய் விடும்.

(பழமொழி, 217)

1080. ஒருமொருவ ரொருவர்தம் முள்ளத்தைத்
தேருந் திறமரிதாற் றேமொழி இ—ஆருங்
குலக்குல வண்ணத்த ராகுப வாங்கே
புலப்புல வண்ணத்த புள்.

( ,, 340)

1081. கழகத்தான் வந்த பொருள்கா முறாமை
பழகினும் பார்ப்பாரைத் தீப்போ லொழுகல்
உழவின்கட் காமுற்று வாழ்தலிம் மூன்றும்
அழகென்ப வேளாண் குடிக்கு.

(திரிகடு. 42)

1082. கயவரைக் கையிகந்து வாழ்தல் நயவரை
நள்ளிருளுங் கைவிடார் நட்டொழுகல் தெள்ளி
வடுவான வாராமற் காத்தலிம் மூன்றுங்
குடிமாசி லார்க்கே யுள.

( ,, 77)

1083. அலந்தார்க்கொன் றீந்த புகழுந் துளங்கினுந்
தங்குடிமை குன்றாத் தகைமையும் அன்போடி
நாணுளும் நட்டார்ப் பெருக்கமு மிம்மூன்றுங்
கேள்வியு ளெல்லாந் தலை.

( ,, 41)

1084. இருக்கை யெழலு மெதிர்செலவு மேனை
விடுப்ப வொழிதலோ டின்ன—குடிப்பிறந்தார்
குன்றா வொழுக்கமாக் கொண்டார் கயவரோ
டொன்றா வுணரற்பாற் றன்று.

(நாலடி, 143)

---

* குடிமை. **1078**. 4 சேவகம்; 6 நிறைகல்வி; 8 என்றும். **1079**. 4 மேற்புற; 5-6 வாற்று மனைப்பிறந்த; 10 படரொகிப். **1080**. 7 றேமொழி. **1081**. 10 காமுற; 11 வாழ்தலிவை. **1082**. 2 கையிகழ்ந்து; 8 எள்ளி. **1083**. 1 அலந்தாற்கொன்.

1085. நல்லவை செய்யி னியல்பாகுந் தீயவை
பல்லவர் தூற்றும் பழியாகும்—எல்லாம்
உணருங் குடிப்பிறப்பி னூதிய மென்னோ
புணரு மொருவற் கெனின்.

(நாலடி, 144)

1086. ஒருபுடை பாம்பு கொளினு மொருபுடை
அங்கண்மா ஞாலம் விளக்குறூஉந்—திங்கள்போற்
செல்லாமை செவ்வனேர் நிற்பினு மொப்புரவிற்
கொல்கார் குடிப்பிறந் தார்.

( ,, 148)

1087. இனநன்மை யின்சொலொன் றீதன்மற் றேனை
மனநன்மை யென்றிவை யெல்லாங்—கனமணி
முத்தோ டிமைக்கு முழங்குவரித் தண்சேர்ப்ப
இற்பிறந்தார் கண்ணே யுள.

( ,, 146)

1088. கடித்துக் கரும்பினைக் கண்டகர நூறி
இடித்துநீர் கொள்ளினு மின்சுவைத்தே யாகும்
வடுப்பட வைதிறந்தக் கண்ணுங் குடிப்பிறந்தார்
கூறார்தம் வாயிற் சிதைந்து.

( ,, 156)

1089. கல்லாமை யச்சங் கயவர் தொழிலச்சஞ்
சொல்லாமை யுள்ளுமோர் சோர்வச்சம்—எல்லாம்
இரப்பார்க்கொன் றீயாமை யச்ச மரத்தாரிம்
மாணாக் குடிப்பிறந் தார்.

( ,, 145)

## அதி. 97. மானம்

1090. இம்மையு நன்றா மியனெறியுங் கைவிடா
தும்மையும் நல்ல பயத்தலால்—செம்மையின்
நானங் கமழுங் கதுப்பினாய் நன்றேகாண்
மான முடையார் மதிப்பு.

(நாலடி, 294)

1091. திருமதுகை யாகத் திறனில்லார் செய்யும்
பெருமிதங் கண்டக் கடைத்தும்—எரிமண்டிக்
கானந் தலைக்கொண்ட தீப்போற் கனலுமே
மான முடையார் மனம்.

( ,, 291)

1092. யாமாயி னெம்மில்லங் காட்டுதுந் தாமாயிற்
காணவே கற்பழியு மென்பார்போல்—நாணிப்
புறங்கடை வைத்தீவர் சோறு மதனான்
மறந்தீக செல்வர் தொடர்பு. ( ,, 293)

**1085.** 5 பல்லவை. **1086.** 10 செவ்வனே; 12 மொப்புரவுக். **1087.** 2 யின்சொன்மற்; 11 முழங்கருவித். **1088.** 9 வடுப்பட்ட; 13 சொல்லார்தம். **1089.** 12 மரத்தாரீ. **1090.** 1-2 இம்மையுநன் றாய. **1091.** 7 கடைத்தே; 12 கனலுமோ. **1092.** 2 னம்மில்லம்; 4 தம்மாயிற்; 10 வைத்தீவார்; 13 மறைந்தீக.

1093. நல்லர் பெரிதளியர் நல்கூர்ந்தா ரென்றெள்ளிச்
செல்வர் சிறுநோக்கு நோக்குங்காற்—கொல்லன்
உலையூதுந் தீயேபோ லுள்கன லுங் கொல்லோ
தலையாய சான்றோர் மனம்.

(நாலடி, 298)

1094. என்பா யுகினு மியல்பில்லார் பின்சென்று
தம்பா டுரைப்பரோ தம்முடையார்—தம்பா
டுரையாமை முன்னுணரு மொண்மை யுடையார்க்
குரையாரோ தாமுற்ற நோய்.

( ,, 292)

1095. இழித்தக்க செய்தொருவ னார வுணலிற்
பழித்தக்க செய்யான் பசித்தல் தவறன்று
விழித்திமைக்கு மாத்திரை யன்றோ வொருவற்
கழித்துப் பிறக்கும் பிறப்பு.

( ,, 302)

1096. கடமா தொலைச்சியர் கானுறை வேங்கை
இடம்வீழ்ந்த துண்ணா திறக்கும்—இடனுடை
வானகங் கையுறினும் வேண்டார் விழுமியோர்
மான மழுங்க வரின்.

( ,, 300)

1097. தம்மை யிகழ்வாரைத் தாமவரின் முன்னிகழ்க
என்னை யவரொடு பட்டது—புன்னை
விறற்பூங் கமழ்கானல் வீங்குநீர்ச் சேர்ப்ப
உறற்பால யார்க்கு முறும்.

( ,, 117)

1098. பறைபட வாழா வசுணமா வுள்ளங்
குறைபட வாழா ரூரவோர்—நிறைவனத்து
நெற்பட்ட கண்ணே வெதிர்சாந் தனக்கொவ்வாச்
சொற்பட்டாற் சாவதாஞ் சால்பு.

(நான்மணி. 2)

1099. கண்டறியார் போல்வர் கெழீஇயின்மை செய்வாரைப்
பண்டறிவார் போலாது தாமு மவரேயாய்
விண்டொரீஇ மாற்றி விடுத லதுவன்றே
விண்டற்கு விண்டல் மருந்து.

(பழமொழி, 251)

1100. நல்ல வெளிப்படுத்துத் தீய மறந்தொழிந்
தொல்லை யுயிர்க்கூற்றுக் கோலாகி—ஒல்லுமென
மாயம் பிறர்பொருட்கண் மாற்றிய மானத்தான்
ஆயி னொழித லறிவு. (சிறுபஞ்ச. 56)

---

**1093.** 1 நல்ல; 2 பெரிதெளியார்; 9 உலையூது. **1094.** 3 மியலலார்; 6 டுரைப்பரே; 9 டுரையாமன்; 13 குரையாரே; 14 தம்முற்ற. **1095.** 1 இளைத்தக்க; 12-13 வொருவ னழித்துப். **1096.** 1 கடாமா, கடிமா; 2 தொலைச்சிய; 8 இடனுடைய; 14 மழிய. **1097.** 2 யிகழ்ந்தவரைத். **1098.** 8 நிறையகத்து; 12 தமக்கொல்லாச்; 14 சாவது. **1099.** 1 கண்டறிவார்; 3 கழியிளமை, கழிகிழமை, கழிமடமை; 5 பண்டறியார்; 6 போலாவ: 14 விண்டான். **1100.** 2 வெளிப்படுத்துந்; 3-4 தீயவையெல் லாமறந்; 7 கோலாதி; 9 வாயம்; 11-12 மாற்றியாமா மானத்தான்.

## அதி. 98. பெருமை

1101. பரந்த திறலாரைப் பாசிமே லிட்டுக்
கரந்து மறைக்கலு மாமோ—நிரந்தெழுந்த
வேயிற் றிரண்டதோள் வேற்கண்ணாய் விண்ணியங்கு
ஞாயிற்றைக் கைம்மறைப்பா ரில்.
(பழமொழி, 34)

1102. பொற்பவும் பொல்லா தனவும் புணர்ந்திருந்தார்
சொற்பெய் துணர்த்துதல் வேண்டுமோ—விற்கீழ்
அரிதாய்ப் பரந்தகன்ற கண்ணா யறியும்
பெரிதாள் பவனே பெரிது.
( ,, 82)

1103. நாடறியப் பட்ட பெருஞ்செல்வர் நல்கூர்ந்து
வாடிய காலத்தும் வட்குபவோ—வாடி
வலித்துத் திரங்கிக் கிடந்தே விடினும்
புலித்தலை நாய்மோத்த லின்று.
( ,, 278)

1104. மாட மிடிந்தக்கால் மற்று மெடுப்பதோர்
கூடகா ரத்திற்குத் தப்பாகு மஃதேபோற்
பீடிலாக் கண்ணும் பெரியார் பெருந்தகையர்
ஈடில்ல தற்கில்லை பாடு.
( ,, 96)

1105. வாட்டிற லானை வளைத்தார்க ளஞ்ஞான்று
வீட்டிய சென்றார் விளங்கொளி—காட்டப்
பொருவறு தன்மைகண் டஃதொழிந்தா ரஃதால்
உருவு திருவூட்டு மாறு.
( ,, 106)

1106. நீறூர்ந்து மொட்டா ங்கரில் மணியேபோல்
வேறாகத் தோன்றும் விளக்க முடைத்தாகும்
தாறுப் படினுந் தலைமகன் றன்னொளி
நூறு யிரவர்க்கு நேர்.
( ,, 214)

1107. அமையப் பொருளில்லா ராற்றுநா ரென்ப
திமையத் தனையார்க ளில்லை—சிமைய
நகையே ரிலங்கருவி நல்வரை நாட
நகையேதா னாற்றி விடும்
( ,, ?)

1108. விதிப்பட்ட நூலுணர்ந்து வேற்றுமை யில்லார்
கதிப்பவர் நூலினைக் கையிகந்தா ராகிப்
பதிப்பட வாழ்வார் பழியாய செய்தல்
மதிப்புறத்துப் பட்ட மறு.
( ,, 258)

**1101.** 8 நிரக்தெழுந்து. **1102.** 9 அரியாய்ப்; 10 பரிதகன்ற. **1103.** 9-10 லித்திரங்கி மாழ்கிக்; 14 நாய்மோக்க, நாய்மெய்த்த. **1104.** 2 மடிந் தக்கால்; 6-7 ரத்திற்கு மாகு; 13 ஈடல்ல; 14 ளர்க்கில்லை. **1105.** 3 வளைந்தார்க; 4 ளந்நான்று; 7 விளக்கொளி; 8 காட்டிப். **1107.** 3-4 ராற் றூரா லென்ப. **1108.** 5 கதிப்பட்ட; 7 கையிகழ்ந்தா; 9 பதிப்பட்ட; 11 பதி யாய.

1109. நிரைதொடி தாங்கிய நீடோள்மாற் கேயும்
உரையொழியா வாகு முயர்ந்தோர்கட் குற்றம்
மரையாகன் றாட்டு மலைநாட மாயா
நரையான் புறத்திட்ட சூடு.

(பழமொழி, 48)

1110. தொல்லவையுட் டோன்றுங் குடிமையுந் தொக்கிருந்த
நல்லவையுள் மேம்பட்ட கல்வியும்—வெல்சமத்து
வேந்துவப்ப வட்டார்த்த வென்றியு மிம்மூன்றுந்
தாந்தம்மைக் கூறாப் பொருள்.

(திரிகடு. 8)

1111. வருவாயுட் கால்வழங்கி வாழ்தல் செருவாய்ப்பச்
செய்தமை நாடாச் சிறப்புடைமை—எய்தப்
பலநாடி நல்லவை கற்றலிம் மூன்றும்
நலமாட்சி நல்லவர் கோள்.

( ,, 21)

1112. ஊனுண் டுழுவை நிறம்பெறூஉம் நீர்நிலைத்துப்
புல்லினு ளின்புறூஉங் காலேசம்—நெல்லின்
அரிசியா னின்புறூஉங் கீழெல்லாந் தத்தம்
வரிசையா னின்புறூஉ மேல்.

(நான்மணி. 65)

1113. பகைவர் பணிவிடம் நோக்கித் தகவுடையார்
தாமேயும் நாணித் தலைச்செல்லார் காணாய்
இளம்பிறை யாயக்கால் திங்களைச் சாரா
தணங்கருந் துப்பி னரா.

(நாலடி, 241)

1114. கடையெல்லாங் காய்பசி யஞ்சுமற் றேனை
இடையெல்லா மின்னாதை யஞ்சும்—புடைபரந்த
விற்புருவ வேனெடுங் கண்ணாய் தலையெல்லாஞ்
சொற்பழி யஞ்சி விடும்.

( ,, 297)

1115. கருங்கடற் பிறப்பி னல்லால் வலம்புரி காணுங் காலைப்
பெருங்குளத் தென்றுந் தோன்றா பிறைநுதற் பிணைய னீரே
அருங்கொடைத் தான மாய்ந்த வருந்தவந் தெரியின் மண்மேல்
மருங்குடை யவர்கட் கல்லால் மற்றையார்க் காவ துண்டோ.

(சிந்தா. 2924)

## அதி. 99. சான்றாண்மை

1116. உறையார் விசும்பி னுவவு மதிபோல்
நிறையா நிலவுத லன்றிக்—குறையாத

**1109.** 6 வாக்கு. **1110.** 9-10 வேந்துவப்பப் பட்டார்த்த. **1111.** 5 செய்தவை; 6 நாடச். **1112.** 3 நலம்பெறும்; 4 நீணிறப்; 6 னிற்பநிறங்; 7 காலேகம், காலீகள். **1113.** 1 பகைவாய்; 7 தலைச்சொல்லார்; 8 காணு; 12 சேரா. **1114.** 8 புடைசேர்ந்த, புடையுலாம். **1115.** 2 பரப்பி; 8 தொன்றுங்; 10-12 பிரிநுதற் பிணைய சீரே; 13-14 அருங்கொடை விசும்பி னுன; 16 வருந்தவர். **1116.** 3 னுலவு; 5 நிறையால்; 5-8 நிலவுத லின்றிக் குறையா தறைதரு; 7 லின்றிக்; 9 வங்கப்போல்; 14 வாய்மையர்.

வங்கம்போழ் முந்நீர் வளம்பெறினும் வேறாமோ
சங்கம்போல் வாய்மையார் சால்பு.

(வெண்பா. 185)

1117. அடர்ந்து வறியரா யாற்றாத போழ்தும்
இடங்கண் டறிவாமென் றெண்ணி யிராஅர்
மடங்கொண்ட சாயல் மயிலன்னாய் சான்றோர்
கடன்கொண்டுஞ் செய்வார் கடன்.

(பழமொழி, 216)

1118. பரியப் படுமவர் பண்பில ரேனுந்
திரியப் பெறுபவோ சான்றோர்—விரிதிரைப்
பாரெறியு முந்நீர்த் துறைவ கடனன்றோ
ஊரறிய நட்டார்க் குணா.

( ,, 101)

1119. பூந்தண் புனற்புகார்ப் பூமிகுறி காண்டற்கு
வேந்தன் வினாயினான் மாந்தனைச்—சான்றவன்
கொண்டதனை நாணி மறைத்தலாற் றன்கண்ணிற்
கண்டதூஉ மெண்ணிச் சொலல்.

( ,, 153)

1120. செல்வழிக் கண்ணொருநாள் காணினுஞ் சான்றவர்
தொல்வழிக் கேண்மையிற் றோன்றப் புரிந்தியாப்பர்
நல்வரை நாட சிலநா ளடிப்படிற்
கல்வரையு முண்டாம் நெறி.

(நாலடி, 154)

1121. பிறர்மறை யின்கட் செவிடாய்த் திறனறிந்
தேதிலா ரிற்கட் குருடனாய்த் தீய
புறங்கூற்றின் மூங்கையாய் நிற்பானேல் யாதும்
அறங்கூற வேண்டா வவற்கு.

( ,, 158)

1122. பாவமு மேனைப் பழியும் படவருப
சாவினுஞ் சான்றவர் செய்கல்லார் சாதல்
ஒருநா ளொருபொழுதைத் துன்ப மதுபோல்
அருநவை யாற்றுத லின்று.

( ,, 295)

1123. ஒல்வ தறியும் விருந்தினனு மாருயிரைக்
கொல்வ திடைநீக்கி வாழ்வானும்—வல்லிதிற்
சீல மினிதுடைய வாசானு மிம்மூவர்
ஞால மெனப்படு வார்.

(திரிகடு. 26)

1124. இல்லார்க்கொன் றீயு முடைமையு மிவ்வுலகின்
நில்லாமை கண்ட நெறிப்பாடும்—எவ்வுயிர்க்கும்

---

**1117.** 1 அடர்ந்த; 2 பழியரா; 5 இடங்கொண்; 13 கடன்கொண்டு. **1118.** 2 படுபவர்; 6 பொறுப்பவோ, பொறுப்பரோ; 13 பாரறியு; 14 நாட்டார்க்கு; 14-15 நட்டார்க்கு நன்கு. **1119.** 4 கண்டார்க்கு; 8 சான்றவர். **1120.** 1 செல்வுழி; 7 றோன்றிப். **1121.** 1 பிறர்மனை; 9 புறங்கூறின்; 10-11 மூங்கையா கிற்பானேல். **1122.** 4 படவருவ; 5 சாயினுஞ்; 8 சாய்தல். **1124.** 13 நன்றறி.

துன்புறுவ செய்யாத தூய்மையு மிம்மூன்றும்
நன்றறியு மாந்தர்க் குள.

(திரிகடு. 68)

1125. சான்றாருட் சான்றா னெனப்படுத லெஞ்ஞான்றும்
தோய்ந்தாருட் டோய்ந்தா னெனப்படுதல்—வாய்ந்தெழுந்த
கொள்ளாருட் கொள்ளாத கூறாமை யிம்மூன்றும்
நல்லாள் வழங்கு நெறி.

( ,, 82)

1126. பொன்னுந் துகிரு முத்து மன்னிய
மாமலை பயந்த காமரு மணியும்
இடைபடச் சேய வாயினுந் தொடைபுணர்ந்
தருவிலை நன்கல மமைக்குங் காலை
ஒருவழித் தோன்றியாங் கென்றுஞ் சான்றோர்
சான்றோர் பால ராப
சாலார் சாலார் பாலரா குபவே.

(புறம், 218)

1127. நாடா கொன்றோ காடா கொன்றோ
அவலா கொன்றோ மிசையா கொன்றோ
எவ்வழி நல்லவ ராடவர்
அவ்வழி நல்லை வாழிய நிலனே.

( ,, 187)

## அதி. 100. பண்புடைமை

1128. பெரிய குடிப்பிறந் தாருந் தமக்குச்
சிறியா ரினமா வொழுகல்—வெறியிலை
வேலொடு நேரொக்குங் கண்ணா யஃதன்றோ
பூவொடு நாரியைக்கு மாறு.

(பழமொழி, 356)

1129. நல்கூர்ந் தவர்க்கு நனிபெரிய ராயினார்
செல்விருந் தாகிச் செலல்வேண்டா—ஒல்வ
திறந்தவர் செய்யும் வருத்தங் குருவி
குறங்கறுப்பச் சோருங் குடர்.

( ,, 100)

1130. சாக்காடு கேடு பகைதுன்ப மின்பமே
நோக்காடு நாட்டறை போக்கின்ன—நாக்காட்டார்
நட்டோர்க் கியைபிற் றமக்கியைந்த நாளுடம்
பட்டார்வாய்ப் பட்டது பண்பு.

(ஏலாதி, 79)

**1125.** 5-6 தோய்ந்தாரிற் றோய்ந்தா; 13 நல்லார். **1126.** 1,2 திருவு; 2,2 பயந்தீ; 3,2 செய்த; 3, 2-4 செய்வ ராயினுந் தொடைபுரைந்; 3,4 தொடைபுனைந்; 4,1 தொருவிலை; 5, 2—6, 3 தோன்றி யாஅங் கென்றுஞ் சான்றோர் சான்றோர் பாலர். **1127.** 3, 2 நல்ல; 4, 4 நலனே. **1128.** 11 கண்ணினா; 12 யதுவன்றோ. **1129.** 3-4 நனிபெரி தாயினார்; 6 தாக்கிச், 8-9 வெல்லாஞ் சிறந்தவர்; 14 (த்) தோன்றுங். **1130.** 4 மின்பமே; 6-7 நாட்டறைபோக் கின்னன; 9 நாட்டார்க்; 11 றமக்கடைந்த; 12 நூலிடம், கூறுடம்; 13 பாட்டார்வாய்ப்.

1131. புல்லா வெழுத்திற் பொருளில் வறுங்கோட்டி
கல்லா வொருவ னுரைப்பவுங் கண்ணோடி
நல்லார் வருந்தியுங் கேட்பமே மற்றவன்
பல்லாருள் நாணல் பரிந்து.

(நாலடி, 155)

1132. கல்லாது போகிய நாளும் பெரியவர்கட்
செல்லாது வைகிய வைகலும்—ஒல்வ
கொடாஅ தொழிந்த பகலு முரைப்பிற்
படாஅவாம் பண்புடையார் கண்.

( ,, 169)

1133. பன்னாளுஞ் சென்றக்காற் பண்பிலார் தம்முழை
என்னானும் வேண்டுப வென்றிகழ்வார்—என்னானும்
வேண்டினு நன்றுமற் றென்று விழுமியோர்
காண்டொறுஞ் செய்வர் சிறப்பு.

( ,, 159)

1134. நகைநனி தீது துனிநன்றி யார்க்கும்
பகைநனி தீது பணிந்தீயா ரோடும்
இவைமிகு பொருளென் றிறத்த லிலரே
வகைமிகு வானுல கெய்திவாழ் பவரே.

(வளையா.)

1135. உண்டா லம்மவிவ் வுலக மிந்திரர்
அமிழ்த மியைவ தாயினு மினிதெனத்
தமிய ருண்டலு மிலரே முனிவிலர்
துஞ்சலு மிலர்பிற ரஞ்சுவ தஞ்சிப்
புகழெனி னுயிருங் கொடுக்குவர் பழியெனின்
உலகுடன் பெறினுங் கொள்ளல ரயர்விலர்
அன்ன மாட்சி யனைய ராகித்
தமக்கென முயலா நோன்றாட்
பிறர்க்கென முயலுந ருண்மை யானே.

(புறம், 182)

## அதி. 101. நன்றியில் செல்வம்

1136. வழங்கலுந் துய்த்தலுந் தேற்றாதான் பெற்ற
முழங்கு முரசுடைச் செல்வம்—தழங்கருவி
வேய்முற்றி முத்துதிரும் வெற்ப வதுவன்றோ
நாய்பெற்ற தெங்கம் பழம்.

(பழமொழி, 151)

1137. முழவொலி முந்நீர் முழுவது மாண்டோர்
விழவூரிற் கூத்தேபோல் வீழ்ந்தவிதல் கண்டும்
இழவென் றொருபொருளு மீயாதான் செல்வம்
அழகொடு கண்ணி னிழவு. ( ,, 343)

---

**1131**. 6 னொருவ; 8 கண்ணோட; 11 கேட்பரே; 13 பல்லாரு. **1132**. 4 பரியவர்கட். **1133**. 5 எந்நாளும்; 7 வென்றிகழ்ப. **1134**. 3 நனிநன்று; 11 திறத்தி(வி); 12 விலராம்; 15-16 கெய்திவாழ்பவே. **1135**. 1, 4 மிந்திரன்; 7, 4 ராக்கித்; 8, 2 முனமுயலா. **1136**. 12 வஃதன்றோ; 14 தெங்கின். **1137**. 7 வீந்தவிதல்; 9 இழிவென்; 15 னிழிவு.

1138. தொன்மையின் மாண்ட துணிவொன்று மில்லாதார்
நன்மையின் மாண்ட பொருள்பெறுதல்—இன்னொலிநீர்
கன்மே லிலங்கு மலைநாட மாக்காய்த்துத்
தன்மேற் குணில்கொள்ளு மாறு.

(பழமொழி, 129)

1139. அறியாமை யோடிளமை யாவதா மாங்கே
செறியப் பெறுவதாஞ் செல்வஞ்—சிறிய
பிறைபெற்ற வாணுதலாய் தானேயா மேபோய்
பறைபெற்று லாடாதோ பாய்ந்து.

( ,, ? )

1140. விரும்பி யடைந்தார்க்குஞ் சுற்றத் தவர்க்கும்
வருந்தும் பசிகளையார் வம்பர்க் குதவல்
இரும்பணைவில் வென்ற புருவத்தா யாற்றக்
கரும்பனை யன்ன துடைத்து.

( ,, 286)

1141. அருகுள தாகிப் பலபழுத்தக் கண்ணும்
பொரிதாள் விளவினை வாவல் குறுகா
பெரிதணிய ராயினும் பீடிலார் செல்வங்
கருதுங் கடப்பாட்ட தன்று.

(நாலடி, 261)

1142. அள்ளிக்கொள் வன்ன குறுமுகிழ வாயினுங்
கள்ளிமேற் கைந்நீட்டார் சூடும்பூ வன்மையாற்
செல்வம் பெரிதுடைய ராயினுங் கீழ்களை
நள்ளா ரறிவுடை யார்.

( ,, 262)

1143. கொடுத்தலுந் துய்த்தலுந் தேற்று விடுக்குடை
யுள்ளத்தான் பெற்ற பெருஞ்செல்வ மில்லத்
துருவுடைக் கன்னியரைப் போலப் பருவத்தால்
எதிலன் துய்க்கப் படும்.

( ,, 274)

1144. மல்கு திரைய கடற்கோட் டிருப்பினும்
வல்லூற் றுவரிற் கிணற்றின்கீழ்ச் சென்றுண்பர்
செல்வம் பெரிதுடைய ராயினுஞ் சேட்சென்று
நல்குவார் கட்டே நசை.

( ,, 263)

1145. பொன்னிறச் செந்நெற் பொதியொடு பீள்வாட
மின்னொளிர் வானங் கடலுள்ளுங் கான்றுகுக்கும்
வெண்மை யுடையார் விழுச்செல்வ மெய்தியக்கால்
வண்மையு மன்ன தகைத்து.

( ,, 269)

---

**1138.** 3 துனிவொன்று; 12 மாக்காய்த்த. **1139.** 3 கூடுவதா; 6 படுவதாஞ்; **1140.** 9 இரும்பன; 9-10 இரும்பனை வில்வேற்; 14-15 பன்னு றுடைத்து, யன்னு றுடைத்து. **1141.** 1 அருகல; 10 தாயினும். **1143.** இதுவும் அடுத்த செய்யுளும் தம்முள் மாறியுள்ளன. 3 தோற்று; 12 பருவத்தில; 13 எதிலான். **1145.** 5 மின்னொளி; 8 கான்றுகும்.

1146. ஓதியு மோதா ருணர்வில்லா ரோதாதும்
ஓதி யனைய ருணர்வுடையார் — தூய்தாக
நல்கூர்ந்துஞ் செல்வ ரிரவாதார் செல்வரும்
நல்கூர்ந்தா ரீயா ரெனின்.

(நாலடி, 270)

1147. ஈட்டலுந் துன்பமற் றீட்டிய வொண்பொருளைக்
காத்தலு மாங்கே கடுந்துன்பங் — காத்த
குறைபடிற் றுன்பங் கெடிற்றுன்பந் துன்பக்
குறைபதி மற்றைப் பொருள்.

( ,, 280)

1148. தீயாலோ நீராலோ தேர்வேந்தர் தம்மாலோ
மாயாத தெவ்வர் வலியாலோ — யாதாலோ
இப்பொருள்போய் மாய்கின்ற தென்றுபொருள் வைத்தார்கள்
எப்பொழுதும் நீங்கா ரிடர்.

(பாரதம்)

## அதி. 102. நாணுடைமை

1149. தமரேயுந் தம்மைப் புகழ்ந்துரைக்கும் போழ்தின்
அமரா ததனை யகற்றலே வேண்டும்
அமையாரும் வெற்ப வணியாரே தம்மைத்
தமவேயுங் கொள்ளாக் கலம்.

(பழமொழி, 232)

1150. நச்சியார்க் கீயாமை நாணன்று நாளும்
அச்சத்தால் நாணுதல் நாணன்றாம் — எச்சத்தின்
மெல்லிய ராகித்தம் மேலாயார் செய்தது
சொல்லா திருப்பது நாண்.

(நாலடி, 299)

## அதி. 103. குடிமரபு *

1151. ஓதங் கரைதவழ்நீர் வேலி யுலகினுள்
வேதங் கரைகண்டான் வீற்றிருக்கும் — ஏதஞ்
சுடுசுடர் தானாகிச் சொல்லவே வீழ்ந்த
விடுசுடர் வேள்வி யகத்து.

(வெண்பா. 163)

1152. செயிர்க்க ணிகழாது செங்கோ லுயரி
மயிர்க்கண் முரச முழங்க — உயிர்க்கெல்லாம்
நாவ லகலிடத்து ஞாயி றனையனாய்க்
காவலன் சேறல் கடன்.

( ,, 171)

**1146**. 3 துணர்விலா; 12 செல்வரின். **1147**. 8 காத்தல்; 12 துன்புக்; 13 குறுபதி, குறைமதி; 14 மற்றப். **1148**. இது சில பிரதிகளில் இல்லை. 7 வகையாலோ. **1149**. 7 யகற்றவே; 11-15 வதுபணியா ரெறதமை யெயுங்கொளளக காலா; 13 தமரேயுங். **1150**. 7 நாணன்றால்; 8 அச்சத்தின்; 9-10 மெல்லியார்க் கீந்தது; 12 செய்ததும். * குடிசெயல்வகை. **1151**. 1 ஓதுங்; 10 தானோக்கிச். **1152**. 4 லுயரின்; 6 முரசு; 8 உயிர்த்தகலா; 11 ஞாயிற்.

1153. உழுது பயன்கொண் டொலிநிரை யோம்பிப்
பழுதிலாப் பண்டம் பகர்ந்து—முழுதுணர
ஓதி யழல்வழிபட் டோம்பாத ஈகையான்
ஆதி வணிகர்க் கரசு.

(வெண்பா. 164)

1154. காடுங் கடுந்திரை நீர்ச்சுழியுங் கண்ணஞ்சான்
ஓடுங் கலனும் பலவியக்கி—நீடும்
பலிசையாற் பண்டம் பகர்வான் பரியான்
கலிகையால் நீக்கல் கடன்.

( ,, 344)

1155. மூவரு நெஞ்சமா முற்றி யவரவர்
ஏவ லெதிர்கொண்டு மீண்டுரையான்—ஏவல்
வழுவான் வழிநின்று வண்டார் வயலுள்
உழுவா னுலகுக் குயிர்.

( ,, 165)

1156. மண்பதம் நோக்கி மலிவயலும் புன்செய்யுங்
கண்பட வேர்பூட்டிக் காலத்தால்—எண்பதனுந்
தந்துநீ ரார்க்குங் கடல்வேலித் தாயர்போல்
வித்தித் தருவான் விளைவு.

( ,, 346)

1157. பொச்சாப்புக் கேடு பொருட்செருக்குத் தான்கேடு
முற்றாமை கேடு முரண்கேடு—தெற்றத்
தொழின்மகன் றன்னொடு மாறாயி னென்றும்
உழுமகற்குக் கேடென் றரை.

(சிறுபஞ்ச. 49)

1158. நன்புலத்து வையடக்கி நாளுநா ளேர்போற்றிப்
புன்புலத்தைச் செய்கெருப் போற்றியபின்—இன்புலத்துப்
பண்கலப்பைப் பாற்படுத்து வானுழவை னென்பவே
நுண்கலப்பை நூலோது வார்.

( ,, 59)

1159. யானை நிரையுடைய தேரோ ரினுஞ்சிறந்தார்
ஏனை நிரையுடைய ஏர்வாழ்நர்—யானைப்
படையோர்க்கும் வென்றி பயக்கும் பகட்டே
ருடையோர்க் கரசரோ வொப்பு.

(பெரும்பொருள்.)

1160. நிலம்பொறை யாற்று நிதிபல கொண்டுங்
குலம்பெறுதீங் கந்தணர் கொள்ளார்—நலங்கிளர்
தீவா யவிசொரியத் தீவிளங்கு மாறுபோல்
தாவா தொளிசிறந்த தாம்.

( ,, )

---

**1153.** 13-14 ஆகி யவணிற்; 14 வணிகற். **1154.** 12 பரிவான்; 13 கவிகையால். **1155.** 7 மீட்டுரையான்; 14 னுலகிற். **1156.** 4 பண்செய்யுங்; 8 எண்பதங். **1157.** 8 பெற்ற; 13 உழுமகட்குக், உழுமகட். **1158.** 3-4 நாளுநா ளேர்போற்றிப்; 5-6 புன்புலத்துக் கைசெய்தெருப்; 7 போற்றியன்பின்; 8 இன்புலத்தைப்; 9 பண்கலத்தைப். **1159.** 1 சேனை; 3-4 தேரெனினுஞ்சிறந்தார்; 7 எர்வாழ்வார்; 8 யானை; 9 படையோற்கு; 10 நன்றி; 13 ருடையோற். **1160.** 4 கொண்டு; 8 நலங்கிளரத்; 9-11 தீவாய் சொரியத் திரிவிளங்கு; 14 தொளிசிறந்தார்; 14-15 தொளிசிறப் பாம்.

1161. ஈட்டிய வெல்லா மிதன்பொருட் டென்பது
காட்டிய கைவண்மை காட்டினார்—வேட்டொறுங்
காமருதார்ச் சென்னி கடல்சூழ் புகார்வணிகர்
தாமரையுஞ் சங்கும்போற் றந்து.

(பெரும்பொருள்.)

## அதி. 104. நல்குரவு

1162. கொண்டொழுகு மூன்றற் குதவாப் பசித்தோற்றம்
பண்டொழுகி வந்த வளமைத்தங்—குண்டது
கும்பியெற் றிச்சென் றடுதலாற் றன்னுசை
அம்பாயுள் புக்கு விடும்.

(பழமொழி, 363)

1163. பேயப் பிறப்பிற் பெரும்பசியும் பாவும்
விலங்கின் பிறப்பின் வெரூஉம் புலந்தெரியா
மக்கட் பிறப்பி னிரப்பிடும்பை யிம்மூன்றுந்
துக்கப் பிறப்பாய் விடும்.

(திரிகடு. 60)

1164. கல்லோங் குயர்வரைமேற் காந்தள் மலராக்காற்
செல்லாவாஞ் செம்பொறி வண்டினங்—கொல்லைக்
கலாஅற் கிளிகடியுங் கானக நாட
இலாஅஅற் கில்லைத் தமர்.

(நாலடி, 283)

1165. பிறந்த குலமாயும் பேராண்மை மாயுஞ்
சிறந்ததங் கல்வியு மாயுங்—கறங்கருவி
கன்மேற் றவழுங் கனமலை நன்னாட
இன்மை தழுவப்பட் டார்க்கு.

( ,, 285)

1166. உள்கூர் பசியா லுழைநசைஇச் சென்றார்க்
குள்ளூ ரிருந்துமொன் றாற்றாதான்—உள்ளூர்
இருந்துயிர் கொன்னே கழியாது தான்போய்
விருந்தின னாதலே நன்று.

( ,, 286)

1167. ஆர்த்த பொறிய வணிகிளர் வண்டினம்
பூத்தொழி கொம்பின்மேற் செல்லாவாம்—நீத்தருவி
தாழா வுயர்சிறப்பிற் றண்குன்ற நன்னாட
வாழாதார்க் கில்லைத் தமர்.

( ,, 290)

---

**1161.** 2 தெல்லா; 5 நாட்டிய; 6 கைவன்மை. **1162.** 2 முற்றூர்க்; 7 வழுவன்மைக்; 9-10 கும்பியிற் றீச்சென், கும்பியீற் றிற்சென்; 9-11 கும்பி னிடையியற்றிச் சென்ற தெல்லாற்; 9...கும்பியிடையியற்றிச் செல்...;10-11 றீறச்சென் றுடுதலாற். **1163.** 7 வெருவும்; 8 குலந்தெரியா. **1164.** 4 மலர்ந் தக்காற்; 8 கொல்லையே; 9 கல்லாற்; 12 நாடகேள், நாடபொருள்; 13 இல் லாதார்க். **1165.** 10 கழூஉங், றழூஉங்; 11 கனமலை; 15 டாற்கு. **1166.** 3 லுழைநசைச், லுளைந்தசைஇச்; 4 சென்றார்கட். **1167.** 2-3 பொறியி னணிகிளர்; 5 பூத்தொளிர்.

1168. காலாடு போழ்திற் கழிகிளைஞர் வானத்து
மேலாடு மீனிற் பலராவர்—ஏலா
இடரொருவ ருற்றக்கா லீர்ங்குன்ற நாட
தொடர்புடையோ மென்பார் சிலர்.

(நாலடி, 113)

1169. நல்லாவின் கன்றாயி னாகும் விலைபெறூஉம்
கல்லாரே யாயினுஞ் செல்வர்வாய்ச் சொற்செல்லும்
புல்லீரப் போழ்தி னுழவேபோல் மீதாடிச்
செல்லாவாம் நல்கூர்ந்தார் சொல்.

( ,, 115)

1170. பெண்டிர் மதியார் பெருங்கிளை தானது
கொண்ட விரகர் குறிப்பினி னஃகுப
வெண்டறை நின்று வெறுக்கை யிலராயின்
மண்டினர் போவர்தம் மக்களு மொட்டார்.

(வளையா.)

1171. சொல்லவை சொல்லார் சுருங்குபு சூழ்ந்துணர்
நல்லவை யாரும் நனிமதிப் பாரல்லர்
கல்வியுங் கைப்பொரு ளில்லார் பயிற்றிய
புல்லென்று போதலை மெய்யென்று கொண்ணீ.

( ,, )

1172. தொழுமக னாயினுந் துற்றுடை யானைப்
பழுமரஞ் சூழ்ந்த பறவையிற் சூழ்ப
விழுமிய ரேனும் வெறுக்கை யுலந்தாற்
பழுமரம் வீழ்ந்த பறவையிற் போப.

( ,, )

1173. பொருளில் குலனும் பொறைமையில் நோன்பும்
அருளி லறனு மமைச்சி லரசும்
இருளினு ளிட்ட விருண்மையி தென்றே
மருளில் புலவர் மனங்கொண் டுரைப்ப.

( ,, )

## அதி. 105. இரவு

1174. இல்லாமை கந்தா விரவு துணிந்தொருவர்
செல்லாரு மல்லர் சிறுநெறி—புல்லா
அகம்புகுமி னுண்ணுமி னென்பவர் மாட் டல்லால்
முகம்புகுத லாற்றுமோ மேல்.

(நாலடி, 303)

---

**1168**. 13 தொடர்புடைய; 14 மென்பர். **1169**. 4 விலைபெறும்; 12 மீதாடச். **1170**. 6 வீறாகா; 9 வெண்டுறை; 14 போல்வர்தம், போவரா; 16 மொட்டா. **1171**. 2 சொல்லா; 7-8 நனிமதிப்பா ரல்லாத; 11 ளில்ல ராய்ப்; 16 கொண்ணீர். **1172**. 1 தொழின்மக; 6 (ங்) கொண்ட; 12 யுலந் தார்; 16 போவ. **1173**. 3 பொறுமையில்; 6 லவனு; 8 லவாகும்; 11-12 விருண்மயி ரென்றே. **1174**. 9-10 அகம்புகுது முண்ணுமி; 13 முகம்புக.

1175. மறாஅ தவனும் பலரொன் றிரந்தாற்
பெறாஅதவன் பேதுறுத லெண்ணிப்—பொறாஅன்
கரந்துள்ள தூஉ மறைக்கு மதனால்
இரந்தூட்டும் பன்மையோ தீது.

(பழமொழி, 240)

1176. மரம்போல் வலிய மனத்தினார் பின்சென்
றிரந்தார் பெறுவதொன் றில்லை—குரங்கூசல்
வள்ளியி னூடு மலைநாட வஃதன்றோ
பள்ளியு ளையம் புகல்.

( ,, 140)

1177. செருக்கினால் வாழுஞ் சிறியவரும் பைத்தகன்ற
அல்குல் விலைபகரு மாய்தொடியும் நல்லவர்க்கு
வைத்த வறப்புறங் கொண்டானு மிம்மூவர்
கைத்துண்ணார் கற்றறிந் தார்.

(திரிகடு. 25)

1178. விசையி னோடுவெண் டேர்செலக் கண்டுநீர்
நசையி னோடிய நவ்வி யிருங்குழாம்
இசையில் கிழமகன் கண்ணிரந் தெய்திய
வசையில் மேன்மகன் போல வருந்துமே.

(சூளா. சீய. 212)

1179. ஆடுநனி மறந்த கோடுய ரடுப்பின்
ஆம்பி பூப்பத் தேம்புபசி யுழவாப்
பாஅ லின்மையிற் றோலொடு திரங்கி
இல்லி தூர்ந்த பொல்லா வறுமுலை
சுவைத்தொ றழூஉந்தன் மகத்துமுக நோக்கி
நீரொடு நிறைந்த வீரிதழ் மழைக்கணென்
மனையோ ளெவ்வ நோக்கி நினைஇ
நிற்படர்ந் திசினே நற்போர்க் குமண
என்னிலை யறிந்தனை யாயி னிந்நிலைத்
தொடுத்துங் கொள்ளா தமையலெ னடுக்கிய
பண்ணமை நரம்பின் பச்சை நல்யாழ்
மண்ணார் முழவின் வயிரியர்
இன்மை தீர்க்குங் குடிப்பிறந் தோயே.

(புறம், 164)

1180. பயங்கெழு மாமழை பெய்யாது மாறிக்
கயங்களி முளியுங் கோடை யாயினும்

---

**1175.** 3 பிறர்சென்; 5-6 பெறாஅ தவன்பெறாத; 13 இரந்தாட்குப், இரந்தூட்டும், இரந்தூட்குப். **1176.** 2 வலியு; 3 மனத்தினாற்; 10 னோடு: 12 விஃதன்றோ; 13-14 பள்ளியுட் பாயம். **1177.** 8 பல்லவர்க்கு. **1178.** சிந்தாமணி. 8 யருங்குழாம்; 12 தேர்ந்திய. **1179.** 2,2 பூத்துத்; 3, 1-2 பாலின்மையினாற்; 6, 3 பூவிதழ்; 7,4 நினைக்கு; 9,4 னின்னிலை; 10, 1 தடுத்துக், கொடுத்துங்; 10, 3 தமையி; 12, 1 மண்ணா. **1180.** 2,2 முனியுங்; 3,3 லகத்திடை; 4,1 கதிர்க்கோடு; 5, 1 நாகிளவண்டு; 8, 3 வவையத்; 12, 1 பொறிபுண, பொறியுண.

புழற்கா லாம்ப லகலடை நீழற்
கதிர்க்கோட்டு நந்தின் சுரிமுக வேற்றை
நாகிள வளையொடு பகன்மணம் புகூஉம்
நீர்திகழ் கழனி நாடுகெழு பெருவிறல்
வான்றோய் நீள்குடை வயமான் சென்னி
சான்றோ ரிருந்த வவையகத் துற்றோன்
ஆசா னென்னும் பூசல் போல
வல்லே களைமதி யத்தை யுள்ளிய
விருந்துகண் டொளிக்குந் திருந்தா வாழ்க்கைப்
பொறிப்புண ருடம்பிற் றோன்றியென்
அறிவுகெட நின்ற நல்கூர் மையே.

(புறம், 266)

## அதி. 106. இரவச்சம்

1181. கரவாத திண்ணன்பிற் கண்ணன்னார் கண்ணும்
இரவாது வாழ்வதாம் வாழ்க்கை—இரவினை
உள்ளுங்கா லுள்ள முருகுமா லென்கொலோ
கொள்ளுங்காற் கொள்வார் குறிப்பு.

(நாலடி, 305)

1182. இன்னா வியைக வினிய வொழிகென்று
தன்னையே தானிரப்பத் தீர்வதற்—கென்னைகொல்
காதல் கவற்று மனத்தினாற் கண்பாழ்பட்
டேதி லவரை யிரவு.

( ,, 306)

1183. என்றும் புதியார் பிறப்பினு மிவ்வுலகத்
தென்று மவனே பிறக்கலான்—குன்றின்
பரப்பெலாம் பொன்னொழுகும் பாயருவி நாட
இரப்பாரை யெள்ளா மகன்.

( ,, 307)

1184. ஒருவ ரொருவரைச் சார்ந்தொழுக லாற்றி
வழிபடுதல் வல்லுத லல்லாற்—பரிசழிந்து
செய்யீரோ வென்னானு மென்னுஞ்சொற் கின்னாதே
பையத்தாஞ் செல்லு நெறி.

( ,, 309)

1185. திருத்தன்னை நீப்பினுந் தெய்வஞ் செறினும்
உருத்த மனத்தோ டுயர்வுள்ளி னல்லால்
அருத்தஞ் செறிக்கு மறிவிலார் பின்சென்
றெருத்திறைஞ்சி நில்லாதா மேல்.

( ,, 304)

1186. மல்லல்மா ஞாலத்து வாழ்ப வருளெல்லாஞ்
செல்வ ரெனினுங் கொடாஅதவர் நல்கூர்ந்தார்

---

**1181.** 11 முருக்குமா; 14 கொள்வ. **1182.** 2 விசைக, விசைய; 14 லவனை. **1184.** 5 வடுப்படுதல்; 10 வென்னாது. **1185.** 7 டுயர்புள்ளி; 11 மறிவினார்; 14 நில்லாதார்.

நல்கூர்ந்தக் கண்ணும் பெருமுத் தரையபரே
செல்வரைச் சென்றிரவா தார்.

(நாலடி, 296)

1187. மான வருங்கலம் நீக்கி யிரவென்னும்
ஈன விளிவினால் வாழ்வேன்மன்—ஈனத்தால்
ஊட்டியக் கண்ணு முறுதிசேர்க் திவ்வுடம்பு
நீட்டித்து நிற்கு மெனின்.

( ,, 40)

1188. மறுமையு மிம்மையும் நோக்கி யொருவற்
குறுமா றியைவ கொடுத்தல்—வறுமையால்
ஈத லிசையா தெனினு மிரவாமை
ஈத லிரட்டி யுறும்.

( ,, 95)

1189. வற்றிமற் றற்றப் பசிப்பினும் பண்பிலார்க்
கற்ற மறிய வுரையற்க—அற்றம்
மறைக்குந் துணையார்க் குரைப்பவே தம்மைத்
திறக்குந் துணிவிலா தார்.

( ,, 78)

## அதி. 107. கயமை

1190. நிரந்து வழிவந்த நீசரு ளெல்லாம்
பரந்தொருவர் நாடுங்காற் பண்புடையார் தோன்றார்
மரம்பயில் சோலை மலைநாட வென்றுங்
குரங்கினுள் நன்முகத்த தில்.

(பழமொழி, 58)

1191. பெருமலை நாட பிறரறிய லாகா
அருமறையை யான்றோரே காப்பர்—அருமறையை
நெஞ்சிற் சிறியார்க் குரைத்தல் பனையின்மேற்
பஞ்சிவைத் தெஃகிவிட் டற்று.

( ,, 91)

1192. அல்லவை செய்குப வல்லாப்பி னல்லாக்காற்
செய்வ தறிகில ராகிச் சிதைத்தெழுவர்
கல்லாக் கயவ ரியற்கை நரியிற்கு
நல்யாண்டுந் தீயாண்டு மில்.

( ,, 290)

1193. கருந்தொழில ராய கடையாயார் தம்மேற்
பெரும்பழி யேறுவ பேணார்—இரும்புன்னை
புன்புலால் தீர்க்குந் துறைவமற் றஞ்சாதே
தின்ப தழுவதன் கண்.

( ,, 262)

---

**1187.** 6 விழிவினால்; 7 வாழ்வெண்மின். **1188.** 6 விசைவ, திசைவ. **1189.** 1 வற்றிமுற். **1190.** 2 வழிவந்து; 3 நீரரு; 5 பரந்தொருவன். **1191.** 5 அருமறை; 6 யான்றாரோ; 13 பஞ்சைவைத்; 14 தெஃகைவிட், தெஃகுவிட். **1192.** இது சில பிரதிகளில் இல்லை. 3 வல்லாயி; 3-4 வல்லன வல்லாக்காற்; 6-7 தறிகில்ல ராகைச்; 7 ராகச்; 8 சிதைந்தெழுவர்; 10-11 கயவர்தம் யாக்கை; 11 ரியாக்கை; 12 நரியற்கு. **1193.** 3 கடையாவார்; 7-8 பேணு திரும்புன்னை.

1194. உரிஞ்சி நடப்பாரை யுள்ளடி நோவ
நெருஞ்சியுஞ் செய்வதொன் றில்லை—செருந்தி
இருங்கழித் தாழு மெறிகடற்றண் சேர்ப்ப
பெரும்பழியும் பேணாதார்க் கில்.

(பழமொழி, 170)

1195. மிக்குப் பெருகி மிகுபுனல் சேர்ந்தாலும்
உப்பொழிதல் செல்லா வொலிகடல்போல்—மிக்க
இனநலம் நன்குடைய வாயினு மென்றும்
மனநல வாகாவாங் கீழ்.

( ,, 11)

1196. நேர்ந்துகண் ணோடாது தீவினையு மஞ்சலராய்ச்
சேர்ந்தாரை யெல்லாஞ் சிறிதுரைத்துத்—தீர்ந்த
விரகர்கட் கெல்லாம் வெறுப்பனவே செய்யும்
நரகர்கட் கில்லையோ நஞ்சு.

( ,, 27)

1197. யாந்தீய செய்தல் மலைமறைத்த லென்றெண்ணித்
தாந்தீயார் தந்தீமை தேற்றாரால்—ஆம்பல்
மணவில் கமழு மலிதிரைச் சேர்ப்ப
கணையிலுங் கூரியவாங் கண்.

( ,, 174)

1198. பெருநடை தாம்பெறினும் பெற்றி பிழையா
தொருநடைய ராகுவர் சான்றோர்—பெருநடை
பெற்றக் கடைத்தும் பிறங்கருவி நன்னாட
வற்றா மொருநடை கீழ்.

(நாலடி, 343)

1199. சக்கரச் செல்வம் பெறினும் விழுமியோர்
எக்காலுஞ் சொல்லார் மிகுதிச்சொல்—எக்காலும்
முந்திரிமேற் காணி மிகுவதேற் கீழ்தன்னை
இந்திரனா வெண்ணி விடும்.

( ,, 346)

1200. மைதீர் பசும்பொன்மேல் மாண்ட மணியழுத்திச்
செய்த தெனினுஞ் செருப்புத்தன் காற்கேயாம்
எய்திய செல்வத்த ராயினுங் கீழ்களைச்
செய்தொழிலாற் காணப் படும்.

( ,, 347)

1201. கடுக்கெனச் சொல்வற்றாங் கண்ணோட்ட மின்றாம்
இடுக்கண் பிறர்மாட் டுவக்கும்—அடுத்தடுத்து
வேக முடைத்தாம் விறன்மலை நன்னாட
ஏகுமா மெள்ளுமாங் கீழ்.

( ,, 348)

---

**1194.** 11 மிருங்கடற்றண். **1195.** 6 இல்லா; 9 வினைநலம்; 11 ராயினு; 14 மாகாவாங். **1196.** 7 சிறிதுரைத்துந்; 14 கில்லையே. **1197.** 1 யாந்தீமை; 3 மலைமறைத்தா, மலைமறைத; 5 தாந்தீயோர்; 9 மணமில்; 11 மலிகடற்றண், மலிதிரைநீர்ச். **1198.** 4 வினையா. **1199.** 8 அக்காலே; 9 முந்திரைமேற், முந்தையிற், முந்தைமேற். **1200.** 6 வெனினுஞ். **1201.** 2 சொல்லவற்றாங்; 13 வெஃகுமா.

1202. கணமலை நன்னாட கண்ணின் றொருவன்
குணமேயுங் கூறற் கரிதாற்—குணனழுங்கக்
குற்ற முழைநின்று கூறுஞ் சிறியவர்கட்
கெற்றா ணியன்றதுகொல் நா.
(நாலடி, 353)

1203. தளிர்மேலே நிற்பினுந் தட்டாமற் செல்லா
உளிநீரர் மாதோ கயவர்—அளிநீரார்க்
கென்னானுஞ் செய்யா ரெனைத்தானுஞ் செய்பவே
இன்னாங்கு செய்வார்ப் பெறின்.
( ,, 355)

1204. ஒருநன்றி செய்தவர்க் கொன்றி யெழுந்த
பிழைநூறுஞ் சான்றோர் பொறுப்பர் கயவர்க்
கெழுநூறு நன்றிசெய் தொன்றுதீ தாயின்
எழுநூறுந் தீதாய் விடும்.
( ,, 357)

1205. ஐங்குரவ ராணை மறுத்தலு மார்வுற்ற
எஞ்சாத நட்பினுட் பொய்வழக்கும்—நெஞ்சமர்ந்த
கற்புடை யாளைத் துறத்தலு மிம்மூன்றும்
நற்புடையி லாளர் தொழில்.
(திரிகடு. 97)

1206. நன்றிப் பயன்றூக்கா நாணிலியுஞ் சான்றோர்முன்
மன்றிற் கொடும்பா டுரைப்பானும்—நன்றின்றி
வைத்த வடைக்கலங் கொள்வானு மிம்மூவர்
எச்ச மிழந்துவாழ் வார்.
( ,, 62)

1207. மாசு படினு மணிதன்சீர் குன்றாதாம்
பூசிக் கொளினு மிரும்பின்கண் மாசொட்டும்
பாசத்து ளிட்டு விளக்கினுங் கீழ்தன்னை
மாசுடைமை காட்டி விடும்.
(நான்மணி. 99)

1208. பாம்புண்ட நீரெல்லாம் நஞ்சாம் பசுவுண்ட
தேம்படு தெண்ணீ ரமிழ்தமாம்—ஓம்பும்
ஒளியா முயர்ந்தார்கண் ஞான மதுவே
களியாங் கடையாயார் மாட்டு.
(அறநெறி. 52)

## அதி. 108. பல்பொருள்

1209. கண்ணிற் சிறந்த வுறுப்பில்லை கொண்டானிற்
றுன்னிய கேளிர் பிறரில்லை மக்களின்
ஒண்மைவாய் சான்ற பொருளில்லை யீன்றாளின்
என்ன கடவுளு மில். (நான்மணி. 56)

---

**1202.** 8 குணனழுங்கிக்; 14 ணியன்றதோ. **1203.** 5 உளிநீரார்; 8 அளி நீராற்; 8-9 அளிநீரா ரென்னானுஞ்; 12 செய்பவை. **1204.** 2 செய்தவற்; 5 பிழைநூறு; 12 தாகில். **1205.** 3 மறுத்தாலு; 5 எஞ்சாமை; 14 லாகார்; 15 தொடர்பு. **1206.** 1 நன்றி, நன்றிற்; 5 மன்றக்; 11 கொண்டானு. **1207.** 4 குன்றாவாம்; 7 மிரும்பின்றன். **1208.** 6 தண்ணீ; 8-9 ஓம்பற் கொளியா. **1209.** 9 ஒண்மைய வாய்ச்; 9-10 ஒண்மைய வாய.

1210. நலனு மிளமையும் நல்குரவின் கீழ்ச்சாம்
குலனுங் குடிமையுங் கல்லாமைக் கீழ்ச்சாம்
வளமில் குளத்தின்கீழ் நெற்சாம் பரமல்லாப்
பண்டத்தின் கீழ்ச்சாம் பகடு.

(நான்மணி. 82)

1211. நல்லார்க்குந் தம்மூரென் றூரில்லை நன்னெறிச்
செல்வார்க்குந் தம்மூரென் றூரில்லை—கல்லாக்
கடைகட்குந் தம்மூரென் றூரில்லைத் தங்கைத்
துடையார்க்கு மெவ்வூரு மூர்.

( ,, 83)

1212. பெருக்குக நட்டாரை நன்றின்பா லுய்த்துத்
தருக்குக மாற்றாரைக் கால மறிந்தே
அருக்குக யார்மாட்டு முண்டி சுருக்குக
செல்லா விடத்துச் சினம்.

( ,, 88)

1213. எள்ளற்க வென்று மெளியரென் றென்பெறினும்
கொள்ளற்க கொள்ளார்கை மேலாக—வுள்குடியுஞ்
சீறற்க சிற்றிற் பிறந்தாரைக் கூறற்க
கூறல்ல வற்றை விரைந்து.

( ,, 3)

1214. திருவொக்குந் தீதி லொழுக்கம் பெரிய
அறனொக்கு மாற்றி னொழுகல் பிறனைக்
கொலையொக்குங் கொண்டுகண் மாறல் புலையொக்கும்
போற்றாதார் முன்னர்ச் செலவு.

( ,, 8)

1215. இன்னாத வேண்டி னிரவெழுக விந்நிலத்து
மன்னுதல் வேண்டி னிசைநடுக—தன்னொடு
செல்வது வேண்டி னறஞ்செய்க வெல்வது
வேண்டின் வெகுளி விடல்.

( ,, 17)

1216. மனைக்குப்பாழ் வாணுத லின்மைதான் செல்லுந்
திசைக்குப்பாழ் நட்டோரை யின்மை யிருந்த
அவைக்குப்பாழ் மூத்தோரை யின்மை தனக்குப்பாழ்
கற்றறி வில்லா வுடம்பு.

( ,, 22)

1217. மனைக்கு விளக்க மடவாள் மடவாள்
தனக்குத் தகைசால் புதல்வர்—மனக்கினிய
காதற் புதல்வர்க்குக் கல்வியே கல்விக்கும்
ஓதிற் புகழ்சா லுணர்வு.

( ,, 103)

---

**1210.** 1 நலமு; 5 குலமுங்; 7 கொல்லாமைக். **1211.** 1 நல்லார்க்குத்; 8 யல்லாக். **1213.** 3 மிளையாரென்; 7 மேலவா. **1215.** 1 இன்னாமை; 3 னிரவொழுக; 8 தம்மொடு. **1217.** இது ‘பொருளிலொருவற்’ (1228) என்பதன்பின். 2 விளக்கு; 5-6 தனக்கு விளக்குப்; 10 புதல்வர்க்கும்; 13 ஓதிப்.

1218. அந்தணரி னல்ல பிறப்பில்லை யென்செயினுந்
தாயிற் சிறந்த தமரில்லை யாதும்
வளமையோ டொக்கும் வனப்பில்லை யெண்ணின்
இளமையோ டொப்பது மில்.

(நான்மணி. 34)

1219. கொடுப்பி னசனங் கொடுக்க விடுப்பின்
உயிரிடை யீட்டை விடுக்க வெடுப்பிற்
கிளையு ளழிந்தா ரெடுக்க கெடுப்பின்
வெகுளி கெடுத்து விடல்.

( ,, 81)

1220. கல்லா வொருவர்க்குத் தம்வாயிற் சொற்கூற்றம்
மெல்லிய வாழைக்குத் தானீன்ற காய்கூற்றம்
அல்லவை செய்வார்க் கறங்கூற்றங் கூற்றமே
இல்லிருந்து நீங்கொழுகு வாள்.

( ,, 84)

1221. இளமைப் பருவத்துக் கல்லாமை குற்றம்
வளமிலாப் போழ்தத்து வள்ளன்மை குற்றம்
கிளைஞரில் போழ்திற் சினங்குற்றம் குற்றந்
தமரல்லார் கையகத் தூண்.

( ,, 93)

1222. கரப்பவர் கீழ்மைத்தாய் நண்பகலிற் றோன்றல்
இரப்பவர்கட் டேய்வபோற் றோன்றல்—இரப்பவர்க்கொன்
றீவார் முகம்போ லொளிவிடுத லிம்மூன்றும்
ஓவாதே திங்கட் குள.

(திரிகடு. 102)

1223. ஈதற்குச் செய்க பொருளை யறநெறி
சேர்தற்குச் செய்க பெருநூலை—யாதும்
அருள்புரிந்து சொல்லுக சொல்லையிம் மூன்றும்
இருளுலகஞ் சேராத வாறு.

( ,, 90)

1224. செந்தீ முதல்வ ரறம்நினைந்து வாழ்தலும்
வெந்திறல் வேந்தன் முறைநெறியிற் சேர்தலும்
பெண்பால் கொழுநன் வழிச்செலவு மிம்மூன்றுந்
திங்கள்மும் மாரிக்கு வித்து.

( ,, 98)

1225. கொள்பொருள் வெஃகிக் குடியலைக்கும் வேந்தனும்
உள்பொருள் சொல்லாச் சலமொழி மாந்தரும்
இல்லிருந் தெல்லை கடப்பாளு மிம்மூவர்
வல்லே மழையருக்குங் கோள்.

( ,, 50)

---

**1218**. 14 டொப்பதுவு. **1219**. 2 னினிய; 6 யிட்டு; 8 எடுக்கிற்; 9-11 கிளையுளழிந் தாரை யெடுக்க, கிளையுட் கழிந்தா ரெடுக்க. **1220**. 2 ரொரு வற்குத்; 10 செய்தாற். **1221**. 3 கில்லாமை. **1222**. 3 நண்பகற்; 5 இரப்ப வர்கேட்; 15 குணம். **1224**. 6 வேந்தர்; 8 சேறலும். **1225**. 6 சொல்லச்; 6-8 வேத நெறியொழுகா வந்தணரும்; 13 வல்லே; 14 மழைவிலக்குங்.

1226. பிறர்தன்னைப் பேணுங்கால் நாணலும் பேணார்
திறன்வேறு கூறிற் பொறையும்—அறவினையைக்
காராண்மை யாக வொழுகலு மிம்மூன்றும்
ஊராண்மை யென்னுஞ் செருக்கு.

(திரிகடு. 6)

1227. களைக்கா யில்லாத ஊரும் பிணைக்கறக்கும்
மூத்தோரை யில்லா வவைக்களனும் பாத்துண்ணுந்
தன்மையி லாள னயலிருப்பு மிம்மூன்றும்
நன்மை பயத்த லில.

( ,, 10)

1228. பொருளி லொருவற் கிளமையும் போற்றாம்
அருளி லொருவற் கறனும்—தெருளான்
அறந்தாழு நெஞ்சினன் கல்வியு மூன்றும்
பரிந்தாலுஞ் செய்யாப் பயன்.

( ,, ?)

1229. பெரியார் பெருமை சிறுதகைமை யொன்றிற்
குரியா ருரிமை யடக்கம்—தெரியுங்காற்
செல்வ முடையாருஞ் செல்வரே தற்சேர்ந்தார்
அல்லல் களைப வெனின்.

(நாலடி, 170)

1230. தெளிவிலார் நட்பிற் பகைநன்று சாதல்
விளியா வருநோயி னன்றால்—அளிய
இகழ்தலிற் கோற லினிதேமற் றில்லை
புகழ்தலின் வைதலே நன்று.

( ,, 219)

1231. அற்றவர் வருத்தம் நீக்கி யாருயிர் கொண்டு நிற்குந்
துற்றவி யீதல் செய்யிற் றுறக்கத்திற் கேணி யாகும்
உற்றுயி ரோம்பி நீந்தி னானொடு துறக்கு மாயின்
மற்றவை யில்லை விண்ணு மண்ணுநம் மடிய வன்றே.

(சிந்தா. 2927)

## அதி. 109. நிரைகோடல்

1232. மண்டு மெரியுள் மாந்தடிந் திட்டற்றால்
கொண்ட கொடுஞ்சிலையன் கோறெரியக்—கண்டே
அடையார் முனையலற வையிலைவேற் காளை
விடையாயங் கொள்கென்றான் வேந்து.*

(வெண்பா. 1)

---

**1228.** 9 அறிந்தாளு, றிரிந்தாழு; 11 கல்வியிம்; 15 பலன். **1229.** 3 சிறுதகை; 4 யொன்றற்; 14 களைய. **1230.** 1 தெளிவிலர்; 12 றல்ல, றில்லை. **1231.** 4 லாருயிர்; 13 மற்றுயி; 17-18 துறப்ப ராயின், துறப்பீ ராயின்; 19-20 மற்றுயி ரில்லை; 24 தன்றே. **1232.** 2-4 மெரியவுணர் மாற்றந் தடிந் திட்டாற்; 6 கொடுஞ்சிலையின்; 14 கொள்கின்றான்.

* இதனோடு கனகசுந்தரம் பிள்ளையவர்கள் பிரதி, தஞ்சைப்பிரதி, தேசிகரவர்கள் பிரதி இம்மூன்றும் முடிகின்றன.

1233. சூழ்ந்த நிரைபெயரச் சுற்றித் தலைக்கொண்டார்
வீழ்ந்தனர் வீழ்ந்தார் விடக்குணியத்—தாழ்ந்த
குலைவுக் கொடுஞ்சிலைக் கூற்றனையா ரெய்த
புலவுக் கணைவழியே புள்.

(வெண்பா. 10)

1234. புல்மேய்ந் தசைஇப் புணர்ந்துடன் செல்கென்னும்
வில்மே லசைஇயகை வெகழலான்—தன்மேற்
கடுவரை நீரிற் கடுத்துவரக் கண்டு
நெடுவரை நீழல் நிரை.

( ,, 11)

1235. அங்கட் கிணையன் றுடியன் விறலியான்
வெங்கட்கு வீசும் விலையாகும்—செங்கண்
செருச்சிலையா மன்னர் செருமுனையிற் சீறி
வரிச்சிலையாற் றந்த வளம்.

( ,, 16)

1236. வெவ்வாள் மறவர் மிலைச்சிய வெட்சியாற்
செவ்வானஞ் செல்வதுபோற் செல்கின்றார்—எவ்வாயும்
ஆர்க்குங் கழலொலி யாங்கட் படாலியரோ
போர்க்குந் துடியொடு புக்கு.

(பெரும்பொருள்.)

1237. வாள்வலம் பெற்ற வயவேந்த னேவலால்
தாள்வ லிளையவர் தாஞ்செல்லின்—நாளைக்
கனைகுரல் நல்லாவின் கன்றுள்ளப் பாலின்
நனைவது போலுமிவ் வூர்.

( ,, )

1238. வந்த நிரையி னிருப்பு மணியுடன்
எந்தலை நின்றலை யான்றருவன்—முந்துநீ
மற்றவை பெற்று வயவேந்தன் கோலோங்கக்
கொற்றவை கொற்றங் கொடு.

( ,, )

1239. திரைகவுள் வெள்வாய்த் திரிந்துவீழ் தாடி
நரைமுதியோ னெற்றுரைத்த நற்சொல்—நிரையன்றி
எல்லைநீர் வைய மிறையோர்க் களிக்குமால்
வல்லையே சென்மின் வழி.

( ,, )

1240. பிறர்புல மென்னார் தமர்புல மென்னார்
விறல்வெய்யோர் வீங்கிருட்கட் சென்றார்—நிறையுங்
கடாஅஞ் செருக்குங் கடுங்களி யானை
படாஅ முகம்படுத் தாங்கு.

( ,, )

‘சூழ்ந்த’ (1233), ‘புல்மேய்ந்’ (1234): இவ்விரண்டும் ‘பிறர்புல’ (1240) என்பதன்பின்; ‘அங்கட்’ (1235) என்பது ‘சிறுபுன்’ (1242) என்பதன்பின். **1234.** 9 கடுவெர; 14 நீள. **1235.** 7 விலையாரும். **1236.** 6 சென்றது போற்; 10-12 கழலொலியங் கங்கட்பா டாலியரோ; 11 யங்கட். **1237.** 5 தாள்வி, தாள்வா; 9 கனைகுரவு. **1238.** இதன்பின் ‘நாளும் புள்ளுங்’ (1241). 2-3 நிரையு ளிருப்பு; 5 என்றலை; 7 யான்றருவான். **1239.** 6 னென்றுரைத்த; 11 மிறையோற். **1240.** 5 விடல்வெய்யோர்.

1241. நாளும் புள்ளுங் கேளா வூக்கமொ
டெங்கோ னேயின னாதலின் யாமத்துச்
செங்கால் வெட்சியுந் தினையுந் தூஉய்
மறிக்குரற் குருதி மன்றுதுக ளவிப்ப
விரிச்சி யோர்த்தல் வேண்டா
எயிற்புறந் தருதும்யாம் பகைப்புல நிரையே.

(தகடூர்.)

1242. சிறுபுன் சில்லி நெடுவிளி யாலு
மரம்பயில் கானத்துப் பரற்புறங் கண்ட
வடியா நெடுநெறிச் செல்லாப் புடையது
முல்லை வருந்திற் போகிப் புல்லருந்திக்
கான்யாற்றுத் தெண்ணீர் பருகிக் காமுறுங்
கன்றுபா லருந்துபு சென்றன மாதோ
முன்ப லரும்பிய பாலுறு செவ்வாய்ப்
புன்றலை மகாஅர் தந்தை
கன்றுசூழ் கடிமனைக் கவைஇய நிரையே.

(ஆசிரிய.)

## அதி. 110. நிரைமீட்சி

1243. அழுங்குநீர் வையகத் தாருயிரைக் கூற்றம்
விழுங்கியபின் வீடுகொண் டற்றால்—செழுங்குடிகள்
தாரார் கரந்தை தலைமலைந்து தாங்கொடல்
நேரார்கைக் கொண்ட நிரை.

(வெண்பா. 22)

1244. உரைப்பி னதுவியப்போ வொன்னார்கைக் கொண்ட
நிரைப்பி னெடுந்தகை சென்றான்—புரைப்பின்
றுளப்பட்ட வாறெல்லா மொள்வாள் கவாக்
களப்பட்டான் றோன்றான் கரந்து.

( ,, 27)

1245. அடியதி ரார்ப்பின ராபெயர்த்தற் கன்றைப்
கடிய மறவர் கதழ்ந்தார்—மடிநிரை
மீளாது மீளான் விறல்வெய்யோன் யாதாங்கொல்
வாளார் துடியார் வலம்.

(பெருந்தொருள்.)

1246. கங்கை கவர்ந்தாங்குக் கானப் பெருந்தவலை
எங்கு மறவ ரிரைத்தெழுந்தார்—தங்கிளைகள்
மன்றுகாண் வேட்கை மடிசுரப்பத் தோன்றுவ
கன்றுகாண் மெய்குளிர்ப்பீர் கண்டு.

( ,, )

---

**1241**. 3, 1 செங்கோல்; 3, 4 தூவி; 4, 3 மன்றத்துக. **1242**. 1, 3 னெடுவெளி; 2, 2 தானத்துப்; 2, 4 கொண்ட; 3, 2 நெடுநாடு; 4, 2 வருந்திற்; 9, 1 குன்றுசூழ்; 9, 4 நரையே. **1243**. 11 தலைமலிந்து. **1244**. இது 'கடல் புக்கு' (1247) என்பதன்முன். 2 னிதுவியப்போ; 9-10 றுளப்பட்டனையெலா. **1245**. 4 (ல்)தன்றைற், கண்ணே; 7 (க்)கழைந்தார், கழரா. **1246**. இதன் பின் 'இருநில' (1251). 3 கானைப்; 7 ரிரைந்தெழுந்தார், ரினயந்தெழுந்தார்; 11-12 மடிசுரப்ப வேதோன்றுங்; 14 மெய்குளிப்பீர்.

1247. கடல்புக்கு மண்ணெடுத்த காரேனக் கோட்டின்
மிடல்பெரி தெய்தின மாதோ—தொடலைக்
கரந்தை மறவர் கருதாதா ருள்ளத்
துரந்து நிரைமீட்ட தோள்.

(பெரும்பொருள்.)

1248. கல்கெழு சீறூர்க் கடைகாண் விருப்பினான்
மெல்ல நடவா விரையு நிரையன்றே
தெள்ளறற் கான்யாற்றுத் தீநீர் பருகவும்
மள்ளர் நடவா வகை.

( ,, )

1249. காட்டகஞ் சென்றுயிர் போற்றான் கடுஞ்சுரையான்
மீட்ட மகனை வினவுறாள்—ஓட்டந்து
தன்னெதிர் தோன்றும் புனிற்றாத் தழீஇக்கலுழும்
என்னது பட்டாயோ வென்று.

( ,, )

1250. யாமே பகர்ந்திட வேண்டா வினநிரை
தாமே தமரை யறிந்தனகொல்—ஏமுற்
றன்றீன்ற தம்மை யறிந்துகொள் கன்றேய்ப்பச்
சென்றீயு மாங்கவர்பாற் சேர்ந்து.

( ,, )

1251. இருநில மருங்கி னெப்பிறப் பாயினும்
மருவின் மாலையோ வினிதே யிரவின்
ஆகோள் மள்ளரு மளவாக் கானத்து
நாம்புறத் திறுத்தன மாகத் தாந்தங்
கன்றுகுரல் கேட்டன போல
நின்றுசெவி யேற்றன சென்றுபடு நிரையே.

(தகடூர்.)

## அதி. 111. பகைவயிற் சேறல்

1252. செங்கண் மழவிடையிற் கெண்டிச் சிலைமறவர்
வெங்கண் மகிழ்ந்து விழவயர—அங்குழைய
வஞ்சி வணங்கார் வணக்கிய வண்டார்ப்பக்
குஞ்சி மலைந்தானெங் கோ.

(வெண்பா. 36)

1253. முன்னர் முரசியம்ப மூரிக் கடற்றானைத்
துன்னருந் துப்பிற் றொழுதெழா—மன்னர்
உடைநா ளுலந்தனவா லோதநீர் வேலிக்
குடைநா ளிறைவன் கொள.

( ,, 38)

---

**1247.** 11-12 கருதா ருளராத்; 12 ருள்ளந். **1248.** 1 கல்லெழு. **1249.** 3 பெற்றான்; 7 வினவுறான்; 11 புனிற்றான்; 12 தழீஇக்க விழும்; 13-14 என்னதுய ருற்றாயோ. **1250.** 13 சென்றறியு. **1251.** 2,1-2 அருவிமா மலையோ; 4,1-2 நாம்புற மிறுத்தன; 4, 3 மாகித்; 6, 2 யொற்றின. **1252.** 11 வணங்கிய. **1253.** 2 முரசிரங்க; 5 துன்னிருந்.

1254. அறிந்தவ ராய்ந்தநா ளாழித்தேர் மன்னர்
எறிந்திலங் கொள்வா ளியக்க—மறிந்திகலிப்
பின்பகலே யன்றியும் பேணா ரகநாட்டு
நன்பகலுங் கூகை நகும்.

(வெண்பா. 39)

1255. விண்ணசை இச் செல்கின்ற வேலிளைய ரார்ப்பெடுப்ப
மண்ணசைஇச் செல்கின்றான் வாள்வேந்தன்—எண்ணம்
ஒருபாற் படர்தாக்கண் டொன்னார்தம் முள்ளம்
இருபாற் படுவ தெவன்.

(பெரும்பொருள்.)

1256. போர்ப்படை யார்ப்பப் பொடியா யெழுமரோ
பார்ப்புர வெண்ணான்கொல் பார்வேந்தன்—ஊர்ப்புறத்து
நில்லாத தானை நிலனெளிப்ப நீளிடைப்
புல்லார்மேற் செல்லும் பொழுது.

( ,, )

1257. வேத்தமர் செய்தற்கு மேற்செல்வான் மீண்டுவந்
தேத்தினர்க் கீத்துமென் றெண்ணுமோ—பாத்திப்
புடைக்கல மான்றே றுடனீத்தா னீத்த
படைக்கலத்திற் சாலப் பல.

(ந்கடூர்.)

1258. உண்டியின் முந்தா னுடனுண்டான் றண்டேறல்
மண்டி வழங்கி வழீஇயதற்கோ—கொண்டி
மறவர் மறலிக் குயிர்நேர்ந்தார் மன்னர்க்
குறவிலர் கண்ணோடா ரோர்ந்து.

( ,, )

1259. அணங்குடை நெடுங்கோட் டளையக முனைஇ
முணங்குநிமிர் வயமான் முழுவலி பொருத்தல்
ஊனசை யுள்ளந் துரப்ப விரைகுறித்துத்
தான்வேண்டு மருங்கின் வேட்டெழுந் தாங்கு
வடபுல மன்னர் வாட வடல்குறித்
தின்னா வெம்போ ரியறேர் வழுதி
இதுநீ கண்ணிய தாயி னிருநிலத்
தியார்கொ லளியர் தாமே யூர்தொறு
மீன்சுடு புகையின் புலவுநாறு நெடுங்கொடி
வயலுழை மருதின் வாங்குசினை வலக்கும்
பெருநல் யாணரி னொரீஇ யினியே
கலிகெழு கடவுள் கந்தங் கைவிடப்
பலிகண் மாறிய பாழ்படு பொதியில்
நரைமூ தாளர் நாயிடக் குழிந்த

**1254**. 4 மன்னன். **1255**. 10 படாதார்க்கண். **1256**. 5 பார்ப்புற; 6 மெண்ணான்கொல்; 9 நில்லானத். **1257**. 3 மேற்செல்லான்; 6 கீதுமென். **1258**. 2 மூத்தா; 7 வழியதற்கோ; 13 குறவில்லார். **1259**. 2, 1 முழங்கு நிமிர்; 4, 4 தாஅங்கு; 12, 2-3 கடவுளர்தங்; 14, 3 நாயினிடக்; 14, 3-4 நாவிடை குறித்த; 15, 2 னில்லக.

வல்லி னல்லக நிறையப் பல்பொறிக்
கான வாரண மீனுங்
காடாகி விளியு நாடுடை யோரே.

(புறம், 52)

1260. இருங்கண் யானையொ டருங்கலந் தெறுத்துப்
பணிந்துகுறை மொழிவ தல்லது பகைவர்
வணங்கா ராதல் யாவதோ மற்றே
யுருமுடன் று சிலைத்தலின் விசும்பதிர்ந் தாங்குக்
கண்ணதிர்பு முழங்குங் கடுங்குரல் முரசமொடு
கால்கிளர்ந் தன்ன வூர்திக் கான்முனை
எரிநிகழ்ந் தன்ன நிறையருஞ் சீற்றத்து
நளியிரும் பரப்பின் மாக்கடல் முன்னி
நீர்துனைந் தன்ன செலவின்
நிலந்திரைப் பன்ன தானையோய் நினக்கே.

(பதிற்று.)

## அதி. 112. எதிரூன்றல்

1261. அருவரை பாய்ந்திறுது மென்பார்பண் டின்றிப்
பெருவரைச் சீறூர் கருதிச்—செருவெய்யோன்
காஞ்சி மலையக் கடைக்கணித்து நிற்பதோ
தோஞ்செய் மறவர் தொழில்.

(வெண்பா. 61)

1262. ஐயங் களைந்திட் டடல்வெங்கூற் றுலிப்ப
வையிலை யெஃக மவைபலவு—மொய்யிடை
ஆட்கடி வெல்களிற் றண்ணல் கொடுத்தளித்தான்
வாட்குடி வன்க ணவர்க்கு.

( ,, 64)

1263. உணங்கு புலவறா வொன்னார் குரம்பை
நுணங்கரில் வெம்முனை நோக்கி—அணங்கிய
குந்த மலியும் புரவியான் கூடாதார்
வந்தபின் செல்கென்றான் வாள்.

( ,, 67)

1264. பருதிசெல் வானம் பரந்துருகி யன்ன
குருதியா றுவதுகொல் குன்றார்—கருதி
மறத்திறத்து மாறா மறவருங் கொண்டார்
புறத்திறுத்த வேந்திரியப் பூ.

( ,, 70)

1265. ஒன்னு முனையோர்க் கொழிக வினித்துயில்
மன்னன் மறவர் மகிழ்தூங்கா—முன்னே
படலைக் குரம்பைப் பழங்கண் முதியாள்
விடலைக்கு வெங்கள் விடும். ( ,, 81)

---

**1260.** 2, 1 பணிந்து; 3, 3 யாவதே; 3, 4 மற்றை; 6, 4 கான்முழை; 10, 3 தானைய. **1261.** 2 யாய்ந்தடுது; 4 டன்றிப். **1262.** 6-7 யெஃகம் வைகபுலவு. **1263.** 5 நுணங்கிய, நுணங்கினும்; 6 வெம்முழை. **1264.** 11-12 மறவருங்கொண் டார்த்தார்; 13 புறத்திறத்து; 14 வேந்தியப். **1265.** 1 ஒன்னார்; 1-2 ஒன்னார்முன் னையோர்க்; 5 மன்னர்.

1266. கடிகமழ் வேரிக் கடைதொறும் செல்லக்
கொடிமலி கொல்களி றேவித்—துடிமகிழ
ஆர்த்திட் டமரு ளடையாரை வெம்முனையிற்
பேர்த்திட்டான் பெய்கழலி னான்.

(வெண்பா. 85)

1267. கார்மழை முன்பிற் கைபரந் தெழுதரும்
வான்பறைக் குருகின் நெடுவரி பொற்பக்
கொல்களி றுமிடைந்த பல்லேற்ற் றொழுதியொடு
நெடுந்தேர் நுடங்குகொடி யவிர்வரப் பொலிந்து
செலவுபெரி தினிதுநிற் காணு மோர்க்கே
இன்று நம்ம தானே பன்மாண்
நாடுகெட வெருக்கி நன்கலந் தரூஉநின்
போரருங் கடுஞ்சின மெதிர்ந்து
மாறுகொள் வேந்தர் பாசறை யோர்க்கே.

(பதிற்று. 83)

## அதி. 113. பாசறை

1268. அவிழ்மலர்க் கோதையா ராட வொருபால்
இமிழ்முழவம் பாமோ டியம்பக்—கவிழ்மணிய
காய்கடா யானை யொருபாற் களித்திரும்
ஆய்கழலான் கட்டூ ரகத்து.

(வெண்பா. 53)

1269. கரும்பொடு காய்நெற் கனையெரி யூட்டிப்
பெரும்புனல் வாய்திறந்த பின்னுஞ்—சுரும்பின்
தொகைமலிந்த தண்குவளைத் தூமலர்த் தாரான்
பகைமெலியப் பாசறையு ளான்.

( ,, 56)

1270. மடங்கலிற் சீறி மலைத்தெழுந்தார் மண்மேல்
இடங்கெடச் சென்றிறுத்த பின்னும்—நுடங்கெரிபோல்
வெல்லப் பெருகும் படையார்க்கும் வேந்தர்மேற்
செல்லப் பெருகுஞ் சினம்.

( ,, 59)

1271. மூதில்வாய்த் தங்கிய முல்லைசால் கற்புடை
மாதர்பாற் பெற்ற வலியுளவோ—கூதிரின்
வெங்கண் விறல்வேந்தன் பாசறையுள் வேனிலான்
ஐங்கணை தோற்ற வழிவு.

(பெரும்பொருள்.)

---

**1266**. 2 வேலிக்; 9 ஆர்ந்திட்; 13 பேர்ந்திட்டான். **1267**. 2,3 நெடு வெறி; 2,4 போர்ப்பக்; 4,3 விரவப்; 8, 1 போரடுங்; 8, 3 மெதிர்ந்த. **1268**. 13 பாய்கழலான். **1269**. 3 கணையெரி; 6 வாய்திறந்து; 9 தொகைமலிரத். **1270**. 11 விடையார்க்கு; 12 வேந்தன்மேற். **1271**. 4 கற்புடைய; 7 வலி யுளவே, வலியளவோ; 10 விறல்வேந்தர்.

1272. மாற்றுப் புலந்தொறுந்தேர் மண்டி யமர்க்களங்கொள்
வேற்றுப் புலவேந்தர் வெல்வேந்தர்க் — கேற்ற
படையொலியிற் பாணொலி பல்கின்று லொன்னார்
உடையன தாம்பெற் றுவந்து.

(பெருந்தேவனார்.)

1273. தழிச்சிய வாட்புண்ணோர் தம்மில்லந் தோறும்
பழிச்சியசீர்ப் பாசறை வேந்தன் — விழுச்சிறப்பிற்
சொல்லிய சொல்லே மருந்தாகத் தூர்ந்தன
புல்லணலார் வெய்துயிர்க்கும் புண்.

( ,, )

1274. குழிபல வாயினுஞ் சால்பா னாதே
முழைபடு முதுமரம் போலெவ் வாயு
மடைநுழைந் தறுத்த விடனுடை விழுப்புண்
நெய்யிடை நிற்ற லானாது பையென
மெழுகுசெய் பாவையிற் கிழிபல கொண்டு
முழுவதும் பொதியல் வேண்டும் பழிதீர்
கொடைக்கட னாற்றிய வேந்தர்க்குப்
படைக்கட னாற்றிய புகழோன் புண்ணே.

(தகடூர்.)

1275. வந்தனென் பெரும கண்டனென் செலற்கே
களிறு கலிமாத் தேரொடு சுரந்து
நன்கல னீயும் நகைசா லிருக்கை
மாரி யென்னாய் பனியென மடியாய்
பகைவெம் மையி னசையா வூக்கலை
வேறுபுலத் திறுத்த விறல்வெந் தானையொடு
மாறா மைந்தர் மாறுநிலை தேய
மைந்துமலி யூக்கத்த கந்துகால் கீழ்ந்து
கடாஅ யானை முழங்கும்
இடாஅ வேணிநின் பாசறை யானே.

(பதிற்று.)

## அதி. 114. பகைப்புலம் பழித்தல் *

1276. குரையழல் மண்டிய கோடுயர் மாடஞ்
சுரையொடு பீரஞ் சுமந்த — நிரைதிண்டேர்ப்
பல்லிசை வென்றிப் படைக்கடலான் சென்றிறுப்ப
நல்லிசை கொண்டடையார் நாடு.

(வெண்பா. 60)

1277. தாழார மார்பினான் றாமரைக்கண் சேர்ந்தனவால்
பாழாய்ப் பரிய விளிவதுகொல் — யாழாய்ப்
புடைத்தே னிமிர்கண்ணிப் பூங்கட் புதல்வர்
நடைத்தே ரொலிகறங்கு நாடு. ( ,, 43)

---

**1272.** 2 புலந்தொறும்போர்; 12 ரொன்னார். **1273.** இது 'குழிபல' (1274) என்பதன் பின். **1274.** தகடூர்மாலை. 2, 3 போலவெவ்; 4, 2 குற்ற, சுற்ற; 6, 4 படைதீர். **1275.** 2, 1-2 களிறுகலி மானத்; 4, 3 படையென, பகையென; 5, 1-2 ஆய்பகை வெம்மையி; 8, 3 கந்துசால். * பகைப் புலமழித்தல். **1276.** 3 கோடியூர்; 12 சென்றிருப்ப. **1277.** 7 விழுவதுகொல்

1278. கரிபரந் தெங்குங் கடுமுள்ளி பம்பி
நரிபரந்து நாற்றிசையுங் கூடி—எரிபரந்த
பைங்கண்மால் யானைப் பகையடுதோட் கோதையைச்
செங்கண் சிவப்பித்தார் நாடு.

(முத்தொள்.)

1279. வேரறுகை பம்பிச் சுரைபடர்ந்து வேளைபூத்
தூரறிய லாகா கிடந்தனவே—போரின்
முகையவிழ்தார்க் கோதை முசிறியார் கோமான்
நகையிலைவேல் காய்த்தினார் நாடு.

( ,, )

1280. இரியல் மகளி ரிலைஞெமலு ளீன்ற
வரியிளஞ் செங்காற் குழவி—அரையிரவின்
ஊமன்பா ராட்ட வுறங்கிற்றே செம்பியன்றன்
நாமம்பா ராட்டாதார் நாடு.

( ,, )

1281. வாகை வனமாலை சூடி யரசுறையும்
ஓகை யுயர்மாடத் துள்ளிருந்து—கூகை
படுபேய்க்குப் பாட்டயரும் பண்பிற்றே தென்னன்
விடுமாற்றங் கொள்ளாதார் நாடு.

( ,, )

1282. பறைநிறை கொல்யானைப் பஞ்சவர்க்குப் பாங்காய்த்
திறைமுறையி னுய்யாதார் தேயம்—முறைமுறையின்
ஆன்போ யரிவையர்போ யாடவர்போ யாயின்றே
ஈன்பே யுறையு மிடம்.

( ,, )

1283. தேஎர்பரந்தபுல மேஎர்பரவா
களிறுடியபுலம் நாஞ்சிலாடா
மத்துறியமனை யின்னியமிமிழா
ஆங்கப், பண்டுநற் கறியுநர் செழுவளம் நினைப்பின்
நோகோ யானே நோதக வருமே
பெயல்மழை புரவின் றாகி வெய்துற்று
வலனின் றம்ம காலையது பண்பெனக்
கண்பனி மலிர்நிறை தாங்கிக் கைபுடையூ
மெலிவுடை நெஞ்சினர் சிறுமை கூரப்
பீரிவர் வேலிப் பாழ்மனை நெருஞ்சிக்
காடுறு கடுநெறி யாக மன்னிய
முருகுடன்று கறுத்த கலியழி மூதூர்
உரும்பில் கூற்றத் தன்னநின்
திருந்துதொழில் வயவர் சீறிய நாடே.

(பதிற்று. 26)

**1279.** 5 தோரறிய. **1280.** 3 ரிலைநொமலு; 9 ஊமன்ரு. **1281.** 6 யுறைமாடத்; 15 வீடு. **1282.** 1 பறைநின்ற; 3 பஞ்சவற்குப்; 11-12 யாட வர் போயின்றே; 12 யாயீன்ற, யாயிற்றே. **1283.** 6, 4 வெய்துற்ற; 9, 1 கெலிவுடை; 10, 2 மேவி; 11, 3 யாகு.

1284. வல்லா ராயினும் வல்லுந ராயினும்
புகழ்த லுற்றோர்க்கு மாயோ னன்ன
உரைசால் சிறப்பிற் புகழ்சால் மாற
நின்னொன் றுகூறுவ துடையே னென்னெனில்
நீயே, பிறர்நாடு கொள்ளுங் காலை யவர்நாட்
டிறங்குகதிர்க் கழனிநின் னிளையருங் கவர்க
நனந்தலைப் பேரூ ரெரியுண நைகுக
மின்னுநிமிர்ந் தன்னநின் னொளிறிலங்கு நெடுவேல்
ஒன்னார்ச் செருப்பினுஞ் செருக்க வென்ன தூஉங்
கடிமரந் தடிதலோம்புநின்
நெடுநல் யானைக்குக் கந்தாற் றாவே.

(புறம், 57)

## அதி. 115. திறை

1285. பல்யானை மன்னர் படுதிறை தந்துய்மின்
மல்லை நெடுமதில் வாங்குவிற் பூட்டுமின்
வள்ளிதழ் வாடாத வானோரும் வானவன்
வில்லெழுதி வாழ்வர் விசும்பு.

(முத்தொள்.)

1286. நேமி நிமிர்தோள் நிலவுதார்த் தென்னவன்
காமர் நெடுங்குடைக் காவல னாணையால்
ஏம மணிப்பூ ணிமையார் திருந்தடி
பூமி மிதியாப் பொருள்.

( ,, )

1287. நிறைமதிபோல் யானைமேல் நீலத்தார் மாறன்
குடைதோன்ற ஞாலத் தரசர்—திறைகொள்
இறையோ வெனவந் திடம்பெறா தின்றி
முறையோ வெனநின்றார் மொய்த்து.

( ,, )

1288. நின்றன்மின் மன்னீர் நெருநற் றிறைகொணர்ந்து
முன்றந்த மன்னர் முடிதாக்க—இன்றுந்
திருந்தடி புண்ணாகிச் செவ்வி யிலனே
பெருந்தண் மாந்தையார் கோ.

( ,, )

1289. தாட்டாழ் தடக்கைத் தனிமதி வெண்குடையான்
வாட்டானை வெள்ளம் வரவஞ்சி—மீட்டான்
மலையா மறமன்னன் மால்வரையே போலுங்
கொலையானை பாய்மாக் கொடுத்து.

(வெண்பா. 52)

---

**1284.** 8, 1 மின்னுநிமர்ந்; 11, 3 கந்தொற். **1286.** 2 நிமர்தோள்; 9 தீவ. **1288.** 1 நின்றம்மின்; 8 இன்று; 13-14 பெருந்தரை மாந்தையார்; 14 ணுறந்தையார். **1289.** 10 மறமன்னர்; 11 மால்வரை.

1290. கூடி முரசியம்பக் கொய்யுளைமா முன்னுகளப்
பாடி பெயர்த்திட்டான் பல்வேலான் — கோடி
நிதியந் திறையளந்தார் நேராரு நின்கீழ்
முதியமென் றூறி முரண்.

(வெண்பா. 45)

1291. உழுதுநன் கடன்கழித் துண்டு வேந்தரை
வழிமொழிந் தின்னணம் வாழு மாந்தர்போல்
எழுதிய திறையிறுத் திருந்து வாழ்வதேல்
அழகிது பெரிதுநம் மரசு வாழ்க்கையே.

(சூளா. சீய. 112)

1292. நாளினுந் திறைநுமக் குவப்பத் தந்துநா
டாளுது மன்றெனி லழிது மேலெம
தோளினுந் தொடுகழல் வலியி னானுமிவ்
வாளினும் பயனெனோ மரீஇய மாந்தர்காள்.

( ,, 113)

1293. நீர்மிகிற் சிறையு மில்லை தீமிகின்
மன்னுயிர் நிழற்று நிழலு மில்லை
வளிமிகின் வலியு மில்லை யொளிமிக்
கவற்றோ ரன்ன சினப்போர் வழுதி
தண்டமிழ் பொதுவெனப் பொறாஅன் போரெதிர்ந்து
கொண்டி வேண்டுவ னாயிற் கொள்கெனக்
கொடுத்த மன்னர் நடுக்கற் றனரே
அளியரோ வளியரவ னளியிழந் தோரே
நுண்பல் சிதலை யரிதுமுயன் றெடுத்த
செம்புற் றீயல் போல
ஒருபகல் வாழ்க்கைக் குலம்வரு வோரே.

(புறம், 51)

1294. போர்க்குறைஇப் புகன்றுகழித்தவாள்
உடன்றவர்காப்புடை மதிலழித்தலின்
ஊனுற மூழ்கி யுருவிழந் தனவே
வேலே, குறும்படைந்த வரண்கடந்தவர்
நறுங்கள்ளி னாடுநைத்தலிற்
சுரைதழீஇய விருங்காழொடு
மடைகலங்கி நிலைதிரிந் தனவே
களிறே, எழூஉத்தாங்கிய கதவமலைத்தவர்
குழூஉக்களிற்றுக் குறும்புடைத்தலிற்

---

**1290.** 2 முரசிரங்கக்; 9 நெதியங். **1291.** இதுவும் அடுத்ததும் ஒரு பிரதியில் இல்லை; இவை ‘போர்க்குறைஇ’ (1294) என்பதன்பின். 15 மரசு. **1292.** 2 - 3 திறையினு முவப்பத்; 7 லொழிது. **1293.** சங்கத்துப்பிரதிகளி லொன்று இச்செய்யுளின் 3-ம் அடியோடு நின்று விடுகிறது; ஆனால் இதன் கணுள்ள சிதைந்த இதழ்களின் கடைசிச்செய்யுள் ‘வான்றுறக்கம்’ (1349) என்பது. 9, 4 றேன்ற; 11, 3 கலம்வரு.

பருஉப் பிணிய தொடிகழிந் தனவே
மாவே, பரந்தொருங்கு மலைந்த மறவர்
பொலம்பைந் தார் கெடப் பரிதலிற்
களனுழந் தசைஇய மறுக்குளம் பினவே
அவன்றானும், நிலந்திரைக்குங் கடற்றானைப்
பொலந்தும்பைக் கழற்பாண்டிற்
கணைபொருத துளைத்தோ லன்னே
ஆயிடை, உடன்றோ ருய்தல் யாவது தடந்தாட்
பிணிக்கதிர் நெல்லின் செம்மன் மூதார்
நுமக்குரித் தாகல் வேண்டிற் சென்றவற்
கிறுத்தல் வேண்டுந் திறையே மறுப்பின்
ஒல்வா னல்லன் வெல்போ ரானெனச்
சொல்லவுந் தேறீ ராயின் மெல்லியற்
கழற்கனி வகுத்த துணைச்சில் லோதிக்
குறுந்தொடி மகளிர் தோள்விடல்
இறும்பூ தன்றஃ தறிந்தா டுமினே.

(புறம், 97)

## அதி. 116. மகள் மறுத்தல்

1295. அளியர் கழல்வேந்த ரம்மா வரிவை
எளியளென் றெள்ளி யுரைப்பிற்—குளியாவோ
பண்போற் கிளவிப் பல்வளையாள் வாண்முகத்த
கண்போற் பகழி கடிது.

(வெண்பா. 84)

1296. ஒள்வாள் மறவ ருருத்தெழுந் தும்பர்நாட்
கள்வார் நறுங்கோதை காரணமாக்—கொள்வான்
மருங்கெண்ணி வந்தார் மழகளிற்றின் கோடிக்
கருங்கண்ணி வெண்கட்டிற் கால்.

( ,, 94)

1297. ஏர்பரந்தவயலி னீர்பரந்தசெறுவில்
நெல்மலிந்தமனையிற் பொன்மலிந்தமறுகிற்
படுவண் டார்க்குங் காவிற் பஃறுளி
நெடுவே லாதன் போந்தை யன்ன
பெருஞ்சீ ரருங்கொண் டியளே கருஞ்சினை
வேம்பு மாரும் போந்தையு மூன்று
மலைந்த சென்னியர் குனிந்த வில்லர்
கொற்ற வேந்தர் வரினுந் தற்றக
வணங்கார்க் கீகுவ னல்லன் வண்டோட்டுப்

---

**1294**. 1, 1-2 போஓர்க்குரைஇப் புகன்றுகழித்த; 2, 1-2 வாஅள், உடன்றவர்காப்புடை மதிலழித்தலின்; 3, 1 ஊனிற; 8, 3 கதவுமலைத்தவர்; 9, 1 குரூஉக்களிற்றுக்; 9, 2 குறும்படர்த்தலின்; 11, 2 பரந்தொருங்கு; 17, 3 ருய்தலை; 23, 1 கழற்கணி; 24, 3 தோள்விடில். **1295**. 1 அளிய; 10 கிளவியப். **1296**. 9-10 மருங்கெண் ணமரா.

பிணங்குகதிர்க் கழனி நாப்ப ணேமுற்
றுணங்குகல னாழியிற் றோன்றும்
ஓரெயில் மன்ன னொருமட மகளே.

(புறம்; 338)

1298. வேந்துகுறை யுறவுங் கொடாஅ னேந்துகோட்
டம்பூந் தொடலை யணித்தழை யல்குற்
செம்பொறிச் சிலம்பி னிளையோள் தந்தை
எழுவிட் டமைந்த திண்ணிலைக் கதவி
னரைமண் ணிஞ்சி நாட்கொடி நுடங்கப்
புலிக்கணத் தன்ன கடுங்கட் சுற்றமொடு
மாற்ற மாறான் மறலிய சினத்தன்
பூக்கோ ளெனவேஎய்க் கயம்புக் கனனே
விளங்கிழைப் பொலிந்த வேளா மெல்லியற்
சுணங்கணி வனமுலை யவளொடு நாளை
மணம்புகு வைக லாகுக வொன்றோ
ஆரம ருழக்கிய மறங்கிளர் முன்பி
னீரிலை யெஃக மறுத்த வுடம்பொடு
வாரா வுலகம் புகுத லொன்றெனப்
படைதொட் டனனே குரிசி லாயிடைக்
களிறுபொரக் கலங்கிய தண்கயம் போலப்
பெருங்கவி னிழப்பது கொல்லோ
மென்புல வைப்பினித் தண்பணை யூரே.

( ,, 341)

1299. நுதிவேல் கொண்டு நுதல்வெயர் துடையாக்
கடிய கூறும் வேந்தே தந்தையும்
நெடிய வல்லது பணிந்துமொழி யலனே
ஈதிவர் படிவ மாயின் வையெயிற்
றரிமதர் மழைக்க ணம்மா வரிவை
மரம்படு சிறுதீப் போல
அணங்கா யினடான் பிறந்த வூர்க்கே.

( ,, 349)

## அதி. 117. வஞ்சினம்

1300. இன்று பகலோ னிறவாமுன் னேனோரை
வென்றுகளங் கொள்ளாது வேலுயர்ப்பின்—என்றும்
அரணழியப் பாயு மடையார்முன் னிற்பென்
முரணொழிய முன்முன் மொழிந்து.

(வெண்பா. 69)

---

**1297.** 3, 4 பஃனி; 4, 2 லாந்தன்; 7, 1 மலைத்த; **7, 3** அணித்த; 11, 1-2 றுணங்க ருழியிற், றுணங்காநாழியிற். **1298.** 2, 3 யணித்தலை; 3, 4 தாதை; 8, 2-3 ளேஎ யகம்புக்; 9, 1 லயங்கிழைப்; 14, 3 புக்கதி. **1299.** தகரேர்யாத்திரை. 4, 4 நகையெயிற். **1300.** 3-4 னிறவா முகனோரை; 6 கொள்ளாத; 13 முரணொழியின், முரணழிய.

1301. செவ்விக் கடாக்களிற்றின் செம்மத் தகத்தெறிந்த
கௌவை நெடுவேல் கொணரேனேல்—எவ்வை
கடிபட்ட வில்லகத்துக் கையார்த் திருப்பன்
விடிவளவிற் சென்றா விரைந்து.

(தகடூர்.)

1302. இளையருட் பெரியவன் சொல்லு மொழிமிறைக்
குளைவன செய்தவ ருயிரை மற்றவர்
கிளையொடு மீண்டரா சாண்டு மன்றெனின்
வளையொடு தலைமுடித் திருந்து வாழ்துமே.

(சூளா. அரசி. 131)

1303. தன்பால் மனையா ளயலான்றலைக் கண்டு பின்னும்
இன்பா லடிசிற் கிவர்கின்றகைப் பேடி போலாம்
நன்பாற் பசுவே துறந்தார்பெண்டிர் பாலர் பார்ப்பார்
என்பாரை யோம்பே னெனில்யானவ னாக வென்றான்.

(சிந்தா. 443)

1304. கலிமா னோயே கலிமா னோயே
நாகத் தன்ன நன்னெடுந் தடக்கைக்
காய்சின யானைக் கலிமா னோயே
வெள்ளத் தானைநம் வேந்தொடு பான்முன்
உள்ளழித்துப் புகேன் னாயி னுள்ள
திரப்போ ரின்மை கண்டும்
கரப்போன் சிறுமை யானுறு கவ்வே.

(தகடூர்.)

1305. நகுதக் கனரே நாடுமீக் கூறுநர்
இளைய னிவனென வுளையக் கூறிப்
படுமணி யிரட்டும் பாவடிப் பணைத்தாள்
நெடுநல் யானையுந் தேரு மாவும்
படையமை மறவரு முடையம் யாமென்
றுறுதுப் பஞ்சா துடல்சினஞ் செருக்கிச்
சிறுசொற் சொல்லிய சினங்கெழு வேந்தரை
அருஞ்சமந் ததையத் தாக்கி முரசமொ
டொருங்ககப் படேஎ னாயிற் பொருந்திய
என்னிழல் வாழ்நர் சென்னிழற் காணாது
கொடியனெம் மிறையெனக் கண்ணீர் பரப்பிக்
குடிபழி தூற்றுங் கோலே னாகுக
ஓங்கிய சிறப்பி னுயர்ந்த கேள்வி
மாங்குடி மருதன் றலைவ னாக
உலகமொடு நிலைஇய பலர்புகழ் சிறப்பிற்
புலவர் பாடாது வரைகவென் னிலவரை
புரப்போர் புன்கண் கூர
இரப்போர்க் கீயா வின்மையா னுறவே. (புறம், 72)

**1301.** 2 கடைக்களிற்றின்; 4 தகத்தெறிந்து. **1302.** 10 கண்டர; 11 சாள்து; 12 மின்றெனின். **1305.** மதுரைச் சங்கத்துப் பிரதி யொன்று இதன் 8-வது அடியோடு முடிந்துவிடுகிறது. 4, 2 யானைத்; 15, 2 நிலைஇப்.

1306. மெல்ல வந்து நல்லடி பொருந்தி
ஈயென விரக்குவ ராயிற் சீருடை
முரசுகெழு தாயத் தரசோ தஞ்சம்
இன்னுயி ராயினுங் கொடுக்குவெ னிந்நிலத்
தாற்ற லுடையோ ராற்றல் போற்றாதென்
னுள்ள மெள்ளிய மடவோன் றெள்ளிதிற்
றுஞ்சுபுலி யிடறிய சிதடன் போல
உய்ந்தனன் பெயர்தலோ வரிதே மைந்துடைக்
கழைதின் யானைக் காலகப் பட்ட
வன்றிணி நீண்முளை போலச் சென்றவண்
வருந்த வொற்றே னாயிற் பொருந்திய
தீதில் நெஞ்சத்துக் காதல் கொள்ளாப்
பல்லிருங் கூந்தல் மகளிர்
ஒல்லா முயக்கிடைக் குழைகவென் றாரே.

(புறம், 73)

## அதி. 118. படைச்செருக்கு

1307. உறுசுடர் வாளோ டொருகால் விலங்கிற்
சிறுசுடர்முற் பேரிருளாங் கண்டாய்—எறிசுடர்வேற்
றேங்குலாம் பூந்தெரியற் றேர்வேந்த நின்னொடு
பாங்கலா மன்னர் படை.

(வெண்பா. 134)

1308. துன்னருந் துப்பிற் றொடிகழலார் சூழ்ந்திருப்பத்
தன்னமரு மொள்வாளென் கைத்தந்தான்—மன்னற்கு
மண்ணகமோ வைகின்று மாலை நெடுங்குடைக்கீழ்
விண்ணகமும் வேண்டுங்கொல் வேந்து.

( ,, 65)

1309. இன்னா ரெனவேண்டா வென்னோ டெதிர்சீறி
முன்னர் வருக முரணகலும்—மன்னர்
பருந்தார் படையமருட் பல்லார் புகழ
விருந்தா யடைகுறுவார் விண்.

( ,, 47)

1310. கான்படு தீயிற் கலவார்தன் மேல்வரினுந்
தான்படை தீண்டாத் தறுகண்மை—வான்படர்தல்
கண்ணியபி னன்றிக் கறுத்தார் மறந்தொலைதல்
எண்ணியபி னேக்குமோ வெஃகு.

( ,, 55)

1311. நல்வா னவர்காண நம்மை யமரகத்து
வெல்வான் விரும்பிய வேல்வேந்தைக்—கொல்வான்
உனக்கே யுரிமை யுளதெனினு மிப்போ
ரெனக்கே தருவா னிறை.

(பாரதம்)

---

**1308.** 3 றொழுகழலார்; 5-6 தன்னரு ளொள்வாளென். **1309.** 8 முன்னர்.

1312. தாரேற்ற நீள்மார்பிற் றன்னிறைவ னேக்கியக்காற்
போரேற்று மென்பார் பொதுவாகல் வேண்டுமோ
யார்மேற்றாக் கொள்ளினுங் கோடுக காணுங்கா
லூர்மேற் றமணர்க்கு மோடு.

(பழமொழி, 231)

1313. வரைபுரை வேழத்தை வன்கையென் றஞ்சிப்
புரையுடை மன்னருள் புக்காங் கவையுள்
நிரையுரைத்துப் போகாதோ னாற்றத் துணிதல்
திரையவித் தாடார் கடல்.

( ,, 317)

1314. கூற்றுறழ் முன்பி னிறைதலை வைத்தபின்
ஆற்றி யவனை யடுத லடாக் காலை
ஏற்றுக் களத்தே விளிதல் விளியாக்கால்
மாற்ற மளவுங் கொடுப்பவோ சான்றோர்தந்
தோற்றமுந் தேசு மிழந்து.

(தகடூர்.)

1315. தற்கொள் பெருவிறல் வேந்துவப்பத் தானவற்
கொற்கத் துதவினா னாகுமாற் பிற்[பிற்]
பலரேத்துஞ் செம்ம லுடைத்தாற் பலர்தொழ
வானுறை வாழ்க்கை யினியயுமா லன்னதோர்
மேன்மை யிழப்பப் பழிவருப செய்பவோ
தாமேயும் போகு முயிர்க்கு.

( ,, )

1316. நகையுள்ளு நல்லவை யெய்தார் [பகை] நம்பிய
வேற்றுக் களத்தி லொருவர்த மாறாகச்
சென்றா லொருவர்மேற்
புண்ணும் படுக்கலான் றான்படான் போந்தாரக்
கண்ணும் படுங்கொல் கவன்று.

( ,, )

1317. வேற்றானை வெள்ள நெரிதர யாற்றுக்
கடும்புனற் கற்சிறை போல நடுங்காது
நிற்பவற் கல்லா லெளியவோ பொற்பார்
முறியிலைக் கண்ணி முழவுத்தோள் மன்னர்
அறியுந ரென்னுஞ் செருக்கு.

( ,, )

1318. பிறந்த பொழுதேயும் பெய்தண்டார் மன்னர்க்
குடம்பு கொடுத்தாரே மூத்தார்—உடம்பொடு
முற்றுழிக் கண்ணு மிளையவரே தங்கோமாற்
குற்றுழிக் காவா தவர்.

( ,, )

1319. பரவைவேற் றானைப் பகலஞ்சு வேனா
இரவே யெறியென்றா யென்னை—விரைவிரைந்து
வேந்தனீ யாயினா யன்றிப் புகுவதோ
போந்தென்னைச் சொல்லிய நா. ( ,, )

---

**1316.** 8 மாறகச். **1317.** 3 நெறித . **1318.** 6 கொடுத்தாகோ; 9 மூத்துழி; 15 ழிறிகவா. **1319.** 6 பெறியென்றா, றெறியென்றா; 10 யாயிற்றே.

1320. வான்வணக்கி யன்ன வலிதரு நீள்தடக்கை
யானைக்கீ தென்கையி லெஃகமால்—தானும்
விலங்கா லொருகைத்தால் வெல்கைநன் றென்னும்
நலங்காணே னுணுத் தரும்.

(தகடூர்.)

1321. காலாளாய்க் காலா ளெறியான் களிற்றெருத்தின்
மேலா ளெறியான் மிகநாணக்—காளை
கருத்தினதே யென்று களிறெறியா னம்ம
தருக்கினனே சான்றோர் மகன்.

( ,, )

## அதி. 119. எயில் கோடல்

1322. உழிஞை முடிபுனைந் தொன்னுப்போர் மன்னர்
விழுமதில் வெல்களிறு பாயக்—கழிமகிழ்
வெய்தாரு மெய்தி யிசைநுவலுஞ் சீர்த்தியனே
கொய்தார மார்பினெங் கோ.

(வெண்பா. 95)

1323. கற்பொறியும் பாம்புங் கனலுங் கடுகுரங்கும்
விற்பொறியும் வேலும் விலங்கவும்—பொற்புடைய
பாணி நடைப்புரவிப் பல்களிற்றூர் சார்த்தினார்
ஏணி பலவு மெயில்.

( ,, 112)

1324. கதிரோடை வெல்களிறு பாயக் கலங்கி
யுதிரா மதிலு முளகொல்—அதிருமால்
பூக்கள் மலிதார்ப் புகழ்வெய்யோன் கோயிலுள்
மாக்கண் முரச மழை.

( ,, 98)

1325. பகலெறிப்ப தென்கொலோ பான்மதியென் றஞ்சி
இகலரணத் துள்ளவ ரெல்லாம்—அகலிய
விண்டஞ்ச மென்ன விரிந்த குடைநாட்கோள்
கண்டஞ்சிச் சும்பிளித்தார் கண்.

(பெரும்பொருள்.)

1326. தொழுது விழாக்குறைக்குத் தொல்கடவுட் பேணி
யழுது விழாக்கொள்வ ரன்றே—முழுதளிப்போன்
வாணுட்கோள் கேட்ட மடந்தையர் தம்மகிழ்நர்
நீணுட்கோ ளென்று நினைத்து.

( ,, )

1327. இற்றைப் பகலு ளெயிலகம் புக்கன்றிப்
பொற்றேரான் போனகங் கைக்கொள்ளான்—எற்றுங்கொல்
ஆறாத வெம்பசித் தீயா லுயிர்பருகி
மாறா மறலி வயிறு.

( ,, )

---

**1322.** 2-3 முடிபுனைந்த தொன்னார்போர். **1323.** இதுவும் அடுத்ததும் 'தொழுதுவிழாக்' (1326) என்பதன் பின். 11-12 பல்களிற் றூர்வேந்தர்; 15 மியல். **1324.** 1 கதிருடைய. **1326.** 2 விழாக்குழைக்குந்; 10 காட்ட, கொட்ட.

1328. தாய்வாங்கு கின்ற மகனைத் தனக்கென்று
பேய்வாங்கி யன்னதோர் பெற்றித்தே—வாய்வாங்கு
வெல்படை வேந்தன் விரும்பாதா ரூர்முற்றிக்
கொல்படை வீட்டுங் குறிப்பு.

(பெரும்பொருள்.)

1329. வெஞ்சின வேந்த னெயில்கோள் விரும்பியக்கால்
அஞ்சி யொதுங்காதார் யாவரவர்—மஞ்சுசூழ்
வான்றோய் புரிசைப் பொறியு மடங்கினவால்
ஆன்றோ ரடக்கம்போ லாங்கு.

( ,, )

1330. பொருவரு மூதூரிற் போர்வேட் டொருவர்க்
கொருவ ருடன்றெழுந்தா ராகில்—இருவரும்
மண்ணொடு சார்த்தி மதில்சார்த் தியவேணி
விண்ணொடு சார்த்தி விடும்.

( ,, )

1331. செருவெங் கதிர்வேற் சினவெம்போர் மாறன்
உருமி னிடிமுர சார்ப்ப—உருவுறழ்ந்
தாமா வுகளு மணிவரையி னப்புறம்போய்
வேமால் வயிறெரிய வேந்து.

(முத்தொள்.)

1332. மாமுது தாதை யேவலி னூர்துறந்து
கானுறை வாழ்க்கையிற் கலந்த விராமன்
மாஅ விரலை வேட்டம் போகித்
தலைமகட் பிரிந்த தனிமையன் றனது
சுற்றமுஞ் சேணிடை யதுவே முற்றியது
நஞ்சுகறை படுத்த புன்மிடற் றிறைவ
னுலகுபொதி யுருவமொடு தொகைஇத் தலைநாள்
வெண்கோட்டுக் குன்ற மெடுத்த மீளி
வன்றோ ளாண்டகை யூரே யன்றே
சொன்முறை மறந்தனம் வாழி
வில்லு முண்டவற் கந்நா ளாங்கே
மாதர்க் கெண்டை வரிப்புறத் தோற்றமும்
நீலக் குவளை நிறனும் பாழ்பட
இலங்கை யகழி மூன்று மாக்கியர்
கருங்கா னெடுமழைக் கண்ணும் விளிம்பழிந்து
பெருநீ ருகுத்தன மாதோ வதுவக்
குரங்குதொழி லாண்ட விராமன்
அலங்குதட றொள்வா ள[க]ன்ற ஞான்றே.

(ஆசிரிய.)

1333. இருசுடர் வழங்காப் பெருமூ திலங்கை
நெடுந்தோ ளிராமன் கடந்த ஞான்றை
எண்கிடை மிடைந்த பைங்கட் சேனையிற்

---

**1330.** 6 ருடனெழுந்தா. **1331.** இது 'இற்றைப் பகலு' (1327) என்பதன் முன். **1332.** 6, 3-4 புன்மிடற்று விரண; 7, 3 கொதையித். 9, 4 யனனிற.

பச்சை போர்த்த பல்புறத் தண்ணடை
எச்சார் மருங்கினு மெயிற்புறத் திறுத்தலிற்
கடல்சூ ழரணம் போன்ற
உடல்சின வேந்தன் முற்றிய வூரே.

(ஆசிரிய.)

## அதி. 120. எயில்காத்தல்

1334. ஆடரவம் பூண்டா னழலுண்மார் சீறிய
கூடரணங் காப்போர் குழாம்புரையச்—சூடினார்
உச்சி மதிதவழு மோங்கு மதில்காப்பான்
நொச்சி நுதிவே லவர்.

(வெண்பா. 86)

1335. அகத்தன வார்கழல் நோன்றா ளரணின்
புறத்தன போரெழிற் றிண்டோள்—உறத்தழீஇத்
தோட்குரிமை பெற்ற துணைவளையார் பாராட்ட
வாட்குரிசில் வானுலகி னான்.

( ,, 92)

1336. குன்றுயர் திங்கள்போற் கொற்றக் குடையொன்று
நின்றுயர் வாயிற் புறநிவப்ப—ஒன்றார்
விளங்குருவப் பல்குடைகள் வெண்மீன்போற் றோன்றித்
துளங்கினவே தோற்றந் தொலைந்து.

(பெரும்பொருள்.)

1337. முற்றரண மென்னு முகிற்குருமுப் போற்றோன்றக்
கொற்றவன் கொற்றவாள் நாட்கொண்டான்—புற்றிழுந்த
நாகக் குழாம்போ னடுங்கின வென்றுங்கொல்
வேகக் குழாக்களிற்று வேந்து.

( ,, )

1338. பொருசின மாறுப் புலிப்போத் தறையும்
அருவரை கண்டார்போ லஞ்சி—ஒருவருஞ்
செல்லா மதிலகத்து வீற்றிருந்தான் றேர்வேந்தன்
எல்லார்க்கு மெல்லாங் கொடுத்து.

( ,, )

1339. மழுவான் மிளைபோய் மதிலா னகழ்தூர்ந்
தெழுவாளோ னேற்றுண்ட தெல்லாம்—இழுமென
மட்டவிழ் கண்ணி மறவேந்தன் சீற்றத்தீ
விட்டெரிய விட்ட வகை.

( ,, )

1340. தாக்கற்குப் பேருந் தகர்போல் மதிலகத்
தூக்க முடையா ரொதுங்கியுங்—கார்க்கீண்
டிடிபுறப் பட்டாங் கெதிரேற்றார் மாற்றார்
அடிபுறத் தீடு மரிது.

( ,, )

---

**1334**. 3-4 அழலுண்ண மாச்சிரியக். **1335**. 1 அறத்தன; 6 பேரெழிற். **1336--1340**. இவை அரசாங்கத் தொன்னூல் நிலயத்துக் கடிதப் பிரதியிலே தகடேர்யாத்திரைச் செய்யுட்களாகக் கொள்ளும்படி யுள்ளன. **1337**. 8 புற்றழிந்த. **1339**. 1 வழுவான்; 5-6 தெழுவாளொன் றற்றுண்ட. **1340**. 8 கார்த்தீண்.

1341. பல்சான் றீரே பல்சான் றீரே
வீழ்ந்த புரிசைச் சேர்ந்த ஞாயிற்
கணையிற் றார்ந்த கன்றமேய் கிடங்கின்
மல்லன் மூதூர்ப் பல்சான் றீரே
பலநாள் வருந்தி யிளையரு முதியரும்
நன்னுதல் மகளிரு மின்னுங்கண் டுவப்ப
யா[ம]ங் கொள்பரு மொழிய மேனாட்
கொல்படை மொய்த்த குன்றயர் விழுப்புண்
நெய்யிடைப் பஞ்சு சேர்த்திப் பையெனக்
கருங்குரல் நொச்சி மிலைந்த
திருந்துவேல் விடலை காப்பமைந் தனனே.

(தகடூர்.)

1342. இவனே, பொறிவரி யன்ன பொங்குளை வயமான்
மேலோன் யாரென வினவிற் றேலா
உரனுடை யுள்ளத் தொன்னா ருட்குஞ்
சுரையமை நெடுவேற் சுடர்ப்பூ ணோனே
அவனே யெம்மிறை யிதுவன் மாவே
கறுவுகொள் நெஞ்சங் கதுவவந் தனனே
யாவருங், குறுக லோம்புமின் குறைநாண் மறவீர்
நெருந லெல்லி நரைவரு கடுந்திறற்
பருமத யானை பதைப்ப நூறி
யடுகளத் தொழிந்தோன் றம்பி தொடுகழல்
நொச்சித் தெரியல் நெடுந்தகை
அச்ச மறியா ஞாணங் கினனே.

( ,, )

1343. மேலது வானத்து மூவா நகருங்
கீழது நாகர் நாடும் புடையன
திசைகாப் பாளர் தேயக் குறும்புங்
கொள்ளை சாற்றிக் கவர்ந்துமுன் றந்த
பல்வேறு விழுநெதி யெல்லா மவ்வழிக்
கண்ணுதல் வானவன் காதலி னிருந்த
குன்றேந்து தடக்கை யனைத்துந் தொழிலுறத்
தோலாத் துப்பிற் றுணிமுழல் வாழ்க்கை
வலம்படு மள்ளர்க்கு வீசி யிலங்கையில்
வாடா நொச்சி வகுத்தனன்
மாலை வெண்குடை யரக்கர் கோவே.

(ஆசிரிய.)

## அதி. 121. அமர்

1344. கார்கருதி நின்றதிருங் கௌவை விழுப்பணையான்
சோர்குருதி சூழா நிலனனைப்பப்—போர்கருதித்
துப்புடைத் தும்பை மிலைந்தான் துகளறுசீர்
வெப்புடைத் தானையெம் வேந்து. (வெண்பா. 127)

**1342.** 1, 2 கவரி. **1343.** 9, 1 வளம்படு. **1344.** 6 குழார்.

1345. வாளை பிறழுங் கயங்கடுப்ப வந்தடையார்
ஆளமர் வென்றி யடுகளத்துத்—தோள்பெயராக்
காய்ந்தடு துப்பிற் கழல்மறவ ராடினார்
வேந்தொடு வெள்வாள் விதிர்த்து.

(வெண்பா. 147)

1346. கலிவா ழூழியின் வாழ்க்கை கடிந்து
மலிபுகழ் வேண்டு மனத்தர்—ஒலிகடல்சூழ்
மண்ணகலம் வேண்டாது வான்வேண்டி யீண்டினார்
புண்ணியமாம் போர்க்களத்துப் போந்து.

(பாரதம்)

1347. இடியா னிடிமுகிலு மேறண்ணு மென்னும்
படியாற் பகடொன்று மீட்டு—வடிவேல்
எறிந்தார்த்தார் மன்ன ரிமையாத கண்கண்
டறிந்தார்த்தார் வானோரு மாங்கு.

(பெரும்பொருள்.)

1348. ஆளுங் குரிசி லுவகைக் களவென்னாங்
கேளின்றிக் கொன்றாரே கேளாகி—வாள்வீசி
ஆடினா ரார்ந்தா ரடிதோய்ந்த மண்வாங்கிச்
சூடினார் வீழ்ந்தானைச் சூழ்ந்து.

( ,, )

1349. வான்றுறக்கம் வேட்டெழுந்தார் வாண்மறவ ரென்பதற்குச்
சான்றுரைப்ப போன்றன தங்குறை—மான்றேர்மேல்
வேந்து தலைபணிப்ப விட்ட வுயிர்விடாப்
பாய்ந்தன மேன்மேற் பல.

( ” )

1350. முடிமன ரெழுதரு பருதி மொய்களி
றுடைதிரை மரக்கல மொளிறு வாட்படை
அடுதிற லெறிசுறா வாகக் காய்ந்தன
கடலிரண் டெழுந்ததோர் கால மொத்ததே.

(சிந்தா. 2223)

1351. நிணம்பிறங் ககலமுந் தோளும் நெற்றியும்
அணங்கருஞ் சரங்களி னழுத்தி யையென
மணங்கமழ் வருபுனல் மறலு மாந்தரிற்
பிணங்கமர் மலைந்தனர் பெற்றி யின்னதே.

( ,, 2225)

1352. கடலிரண் டுளவென வெண்ணி னக்கடல்
இடைநில முடையன வெண்ணு மொப்பில
அடலரும் படையவை யிரண்டு மவ்வழி
உடலரும் படையவை யிரண்டு மொக்குமே.

(சூளா. அரசி. 138)

---

**1345.** 11-12 கழன்மடவா ராட்டினார். **1346.** 9 மண்ணகடம். **1347.** 3 மெவ்வண்ணு; 11 ரிமையாதார்; 12 கண்கொண். **1348.** இதன் தனிச்சீர் ‘வாழுங்’ எனக் கொண்டு பின்னர் ‘வான்றுறக்கம்’ (1349) என்பதன்கணுள்ள ‘தார்வாண்’ என்றதுமுதற் சேர்த்தெழுதியிருக்கிறது. 5 கோளின்றிக்; 7 கோளாகி. **1349.** 4 ரென்பறைக்குச்; 8 வந்து; 12-13 வுயிர்விட்டபைந்துகள். **1350.** 14 டெதிர்ந்ததோர்; 16 மொத்தவே. **1351.** 5 அணுங்குரு.

1353. தூவயிலின் வீசுமொரு வன்னது விலக்குங்
காவலொடு பீளுமொரு வன்னது கருத்தின்
ஆவதிது வன்றியய னின்றவர்கள் காணும்
பாவனைய ரல்லர்பல பாடியினி யென்னே.

(சூளா. அரசி. 161)

1354. குழாக்களிற் றரசர் குறித்தெழு கொலைக்களம்
விழாக்களம் போல மெய்ம்மலி யுவகை
ஆண்மை யுள்ளங் கெண்மையிற் றரத்தலின்
அழுந்துபடப் புல்லி விழுந்துகளம் படுநரும்
நீர்ப்பெயற் பிறந்த மொக்குள் போலத்
தாக்கிய விசையிற் றிரிந்துநிலம் படுநரும்
தகருந் தகருந் தாக்கிய தாக்கின்
முகமுஞ் சிதர முட்டு வோரும்
முட்டியின் முறைமுறை குத்து வோருங்
கட்டிய கையொடு காறட் டுநருஞ்
சுட்டிய கையிற் றொட்டுநிற் போருஞ்
சுட்டிய பெயரை யிட்டிழைப் போருஞ்
சக்கரம் போலச் சுக்குவிட் டெறிநருஞ்
சிலைப்புடை முரசிற் றலைப்புடைக் குநரும்
மல்லிற் பிடித்தும் வல்லிய வெற்றியும்
ஊக்கியு முரப்பியும் நோக்கியும் நுவன்றும்
போக்கியும் புழுங்கியும் நாக்கினிடை கவ்வியும்
எயிறுடன் றிருத்தியுங் கயிறுபல வீசியும்
இனைய செய்தியின் முனைமுயங் குநரும்
பிறப்பும் பெருமையுஞ் சிறப்புஞ் செய்கையும்
அரசறி பெயரு முரைசெய லாண்மையும்
உடையோ ராகிய படைகோண் மாக்கள்
சென்றடுபுகு முலக மொன்றே யாகலின்
ஒன்றுபடு மனத்தொடு கொன்றுகொன் றுவப்பச்
செஞ்சோற்று விலையுந் தீர்ந்துதம் மனைவியர்
தம்பிணந் தழீஇ நொந்துகலுழ்ந் திரங்கவும்
புதுவது புனைந்த மகளிர்க்கு
வதுவை சூட்டிய வான்படர்ந் தனரே.

( ? )

1355. அரிநறுங் கள்ளி னுண்மகிழ் செருக்கி
நெருந லெல்லைநம் பெருமகண் முன்ன[ர்]த்
திருமலி முற்றத் தோனே யின்றே
கச்சை நின்ற கதழெரி தோன்றற்
புட்டி லார்க்கும் புனைதார் மாவொடு
செருக்கிச் செய்த சிறுகட் பெரும்புண்
முருக்கிதழ் மடந்தையர் முயங்கிய மார்பே

---

**1353.** 1 தாவயிலின். **1354.** 7, 3 தகத்; 7, 3-4 தாக்கத் தாக்கிய; 11, 1 கட்டிய; 25, 4 மனையர்; 28, 4 தனனே. **1355.** 1, 4 நெருக்கி; 3, 3 தோளே; 5, 3 புனைந்தார்; 6, 2 செய்து; 9, 1 நீர்மலிபு.

ஆர்கெழு சுறமீ னடங்குங் கிடங்கு
நீர்மலி பழனத் [த]துவே யிவன்றலை
ஒளிறுவேல் விடலை யுவப்பக்
களிறுகெழு வேந்தன் பாசறை யதுவே. ( ? )

1356. ஆட்புலங் கொன்ற வாட்[கு]ரல் போக்கி
மலைகாய் வித்திய வைக லாழவன்
அழித்துப்படை பாய்தலி னணிவளோ யிழந்து
மலைப்புற மலைந்த தோளினை பலகையொடு
போர்க்களத் தொழிந்த புகழோ னீர்மை
கயமுரசு கயலிற் றோன்றியவை
னிற[மூ]ழ்கி நின்ற வெஃகலிகப் பலவே. ( ? )

1357. உன்னைய முறாதிய முயக்கொளல் பொருளென
என்னினீ மொழிந்த லென்கொலோ வின்னைப்
பன்னைமை கூர்ப்படை படவுயி ரிழந்தோர்
எண்ணிலர் நனிமிக் கனரே நமரே
இன்றா, வெபு[க்]கோடு[மடு]க்குளங் கிழிப்பப்
போழைப் பாம்பின் வரிக்குடர் துயல்வரத்
தம்பிறைக் கொந்த செம்மலொடு
செருநவி லாளன் சேர்ந்தன னிலனே. ( ? )

1358. முதூர் வாயிற் பனிக்கய மண்ணி
மன்ற வேம்பி னொண்குழை மிலைந்து
தெண்கிணை முன்னர்க் களிற்றி னியலி
வெம்போர்ச் செழியனும் வந்தன னெதிர்ந்த
வம்ப மன்னரோ பலரே
எஞ்சுவர் கொல்லோ பகறவச் சிறிதே.

(புறம், 79)

## அதி. 122. தானைமறம்

1359. கடுங்கண் மறவன் கனல்விழியாச் சீறி
நெடுங்கைப் பிணைத்திடையே நின்றான்—நடுங்கமருள்
ஆள்வெள்ளம் போகவும் போகான்கை வேலூன்றி
வாள்வெள்ளந் தன்மேல் வர.

(வெண்பா. 139)

1360. பொய்யகத்து மன்னர் முரணினி யென்னுங்கொல்
கையகத்துக் கொண்டான் கழல்விடலை—வெய்ய
விடுசுடர் சிந்தி விரையகலம் போழ்ந்த
படுசுட ரெஃகம் பறித்து.

( ,, 142)

---

**1356**. 1, 2 கொண்டு; 1, 3 வாடால்; 3, 2 யாய்தலி; 4, 3 தோழனைப்; 7, 1 னிறழிக; **1357**. 4, 1 எண்ணைலர்; 4, 4 நமரென; 5, 1-5 இன்னும் வெழ கொடுத்துளங் கழியப்; 8, 1 நெருநவி. **1358**. 3, 4 னிகலி; 4, 2-3 செழிய னுவந்தன. **1359**. 3 கனல்விழியாற்; 11 போந்தான்கை. **1360**. 3 முரணனி.

1361. கான்படு தீயிற் கலவார்தன் மேல்வரினுந்
தான்படை நீண்டாத் தறுகண்ணன் — வான்படர்தல்
கண்ணியபி னன்றிக் கறுத்தார் மறந்தொலைதல்
எண்ணியபின் னோக்குமோ வெஃகு.

(வெண்பா. 55)

1362. வெய்யோ னெழாமுன்னம் வீங்கிராக் கையகலச்
செய்யோ னொளிவழங்குஞ் செம்மற்றே — கையகன்று
போர்தாங்கு மன்னன்முன் புக்குப் புகழ்வெய்யோன்
தார்தாங்கி நின்ற தகை.

(பெரும்பொருள்.)

1363. களம்புக லோம்புமின் றெவ்விர் போரெதிர்ந்
தெம்முளு முளனொரு பொருநன் வைகல்
எண்டேர் செய்யுந் தச்சன்
திங்கள் வலித்த காலன் னோனே.

(புறம். 87)

1364. நறுவிரை துறந்த நரைவெண் கூந்தல்
இரங்குகா ழன்ன திரங்குகண் வறுமுலைச்
செம்முது பெண்டின் காதலஞ் சிறாஅன்
மடப்பா லாய்மகள் வள்ளுகிர்த் தெறித்த
குடப்பாற் சில்லுறை போலப்
படைக்குநோ யெல்லாந் தானா யினனே.

( ,, 276)

1365. வருகதில் வல்லே வருகதில் வல்லென
வேந்துவிடு விழுத்தூ தாங்காங் கிசைப்ப
நூலரி மாலை சூடிக் காதலிற்
றமியன் வந்த மூதி லாளன்
அருஞ்சமந் தாங்கி முன்னின் றெறிந்த
ஒருகை யிரும்பிணைத் தெயிறு மிறையாகத்
திரிந்த வாய்வா டிருந்தத்
தனக்கிரிந் தானைப் பெயர்புற நகுமே.

( ,, 284)

1366. கோட்டங் கண்ணியுங் கொடுந்திரை யாடையும்
வேட்டது சொல்லி வேந்தனைக் கொடுத்தலும்
ஒத்தன் றாமாதோ விவற்கே தெற்றிய
திணிநிலை யலறக் கூழை போழ்ந்துதன்
வடிமா ணெஃகங் கடிமுகத் தேந்தி
ஓம்புமி னோம்புமி னிவணென வோம்பாது
தொடர்கோள் யானையிற் குடர்கால் தட்பக்
கன்றமர் கறவை மான
முன்சமத் தொழிந்ததன் றோழற்கு வருமே.

( ,, 275)

---

**1361.** இது முன்னும் (1310) வந்துளது. 3 கலவார்தம். **1362.** இதன்பின் 'கார்த்தரும்' (1369). 15 கடை. **1364.** 6, 1-2 படைக்குநேரெல்லாந். **1365.** 5, 1 ஒருஞ்சமந்.

1367. நிறப்புட் கொள்கா யானை மேலோன்
குறும்பர்க் கெறியு மேவற் றண்ணுமை
நாணுடை மாக்கட் கிரங்கு மாயின்
எம்மினும் பேரெழி லிழந்த வினையெனப்
பிறர்மனை புகுவள் கொல்லோ
அளியள் தானே பூவிலைப் பெண்டே.

(புறம், 293)

1368. இருபாற் சேனையுந் தனிமருண்டு நோக்க
முடுகியற் பொருவிசை யுரவுக்கடுங் கொட்பின்
எண்டிசை மருங்கினு மெண்ணிறைந்து தோன்றினும்
ஒருதனி யனுமன் கையகன் று பரப்பிய
வன்மரந் துணிபட வேறுபல நோன்படை
வழங்கி யகம்பன்றோள் படையாக வோச்சி
ஆங்க, அனும னங்கையி னழுத்தலிற் றனாது
வன்றலை யுடல்புக்குக் குளிப்ப முகங்கரிந்
துயிர்போகு செந்நெறி பெறாமையிற்
பொருகளத்து நின்றன னெடுஞ்சேட் பொழுதே.

(ஆசிரிய.)

1369. கார்த்தரும் புல்லணற் கண்ணஞ்சாக் காளைதன்
தார்ப்பற்றி யேர்தருந் தோளிறைக் — கார்ப்பின்னா
நாட்பினுள் யானைக் கணைநோக்கி யானைப்பின்
தேர்க்குழாம் நோக்கித்தன் மாநோக்கிக் — கூர்த்த
கணைவரவு நோக்கித்தன் வேனோக்கிப் பின்னைக்
கிணைவனை நோக்கி நகும்.

(தகடூர்.)

1370. இகழ்த லோம்புமின் புகழ்சால் [ப]றவர்
கண்ணிமைப் பளவிற் கணைசெல் கடுவிசைப்
பண்ணமை புரவிப் பண்புபா ராட்டி
எல்லிடைப் படர்தந் தோனே கல்லென
வேந்தூர் யானைக் கல்லது
ஏந்துவன் போலான்றன் னிலங்கிலை வேலே.

( ,, )

1371. அதிரா தற்ற நோக்கு ஞாயிறுட்
கதிர்விடு சுடரின் விளங்கும் வெள்வேல்
எதிரிய திருவி னிளையோ னின்றன்றன்
குதிரை தோன்ற வந்துநின் றனனே
அவன்கை யொண்படை யிகழ்த லோம்புமின்
விழுச்சீர் விண்பொரு நெடுங்குடை வேந்தன்
கண்படை பெறாஅன் வைகின னிவன்கைத்
திண்கூ ரெஃகந் திறந்த
புண்கூர் யானை நவில்குரல் கேட்டே.

( ,, )

---

1368. 2, 3 யரவுக்கடுங்; 9, 2 செஞ்ஞெறி. 1369. 21 கிணையனை.
1371. 3 3 னிளையோ.

1372. கட்டி யன்ன காரி மேலோன்
தொட்டது கழலே கையது வேலே
சுட்டி யதுவுங் களிறே யொட்டிய
தானை முழுதுடன் விடுத்துநம்
யானை காமின வன் பிறிதெறி யலனே.

(தகடூர்.)

1373. அஞ்சுதக் கனனே யஞ்சுதக் கனனே
யாறுகா வலர் பந்த ரென்ன
வறுந்தலை முதியாள் அஞ்சுதக் கனனே
வெஞ்சமத், தென்செய் கென்னும் வேந்தர்க்
கஞ்ச லென்பதோர் களிறின் றனனே.

( ,, )

1374. வல்லோன் செய்த வகையமை வனப்பிற்
கொல்வினை முடியக் கருதிக் கூரிலை
வெல்வேல் கைவல னேந்திக் கொள்ளெனிற்
கொள்ளுங் காலு மாவேண் டாவே
மேலோன், அறிவொடு புணர்ந்த நெறியிற் புரவிக
கழற்கா லிளையோ னமுற்றிகழ் வெருளி
இகழ்த லோம்புமின் புகழ்சால் மன்னிர்
தொல்லை நான்றைச் செருவினு ளிவன்கை
வேல்வாய் வீழ்ந்தோர் பெண்டிர் கைம்மையின்
அறுத்த கூந்தற் பிறக்கஞ் சகடம்
பொறுத்தல் செல்லா பழுமரீந் தனவே, அதனால்
வல்லோர் பூழை நின்மின் கல்லென
வெஞ்சமங் குறைபடக் கூர்தலின்
அஞ்சுதக வுடைத்திவ் வாற்றலோ னிலையே.

( ,, )

1375. உண்டது, கள்ளு மன்று களிப்பட் டனனே
ஊர்ந்தது, புள்ளு மன்று பறந்தியங் கும்மே
மேலோர், தெய்வ மல்லன் மகனே நொய்தாங்குத்
தெரியலை ரெடுத்த பாசிலைக் கண்ணி
வெருவத் தக்க வேலி னென்வேல்
பைய நிமிர்ந்து பருந்தி னோடிக்
கழிந்தார்த் தன்றவ னெறிந்தனை கழுநெருட்
டேந்துவரை யிவரும் புலிபோல்
வேந்தர்வந் தாரும் வெஞ்சினக் களிறே.

( ,, )

1376. நிலையமை நெடுந்திணை யேறி நல்லோரி
னிலைபொலி புதுப்பூண் கணவனொ டேடிச்
சிந்தி யன்ன செருபடு வனப்பிற்
புள்ளிக் காரி மேலோன் தெள்ளிதின்

---

1374. 6, 3 (ன்)முற்றிகழ்; 10, 3 பிறககஞ்; 13, 3 கூர்தலின். 1375. 2, 1 ழுகர்ந்தது. 1376. 1, 1 நிலையாமை; 3,3 செடுபடு; 5,2 பிணிக்கு.

1367. நிறப்புட் கொள்கா யானை மேலோன்
குறும்பர்க் கெறியு மேவற் றண்ணுமை
நாணுடை மாக்கட் கிரங்கு மாயின்
எம்மினும் பேரெழி லிழந்த வினையெனப்
பிறர்மனை புகுவள் கொல்லோ
அளியள் தானே பூவிலைப் பெண்டே.

(புறம், 293)

1368. இருபாற் சேனையுந் தனிமருண்டு நோக்க
முடுகியற் பெருவிசை யுரவுக்கடுங் கொட்பின்
எண்டிசை மருங்கினு மெண்ணிறைந்து தோன்றினும்
ஒருதனி யனுமன் கையகன்று பரப்பிய
வன்மரந் துணிபட வேறுபல தோல்படை
வழங்கி யகம்பன் றோள் படையாக வோச்சி
ஆங்க, அனுமனங் கையி னழுத்தலிற் றதைந்து
வன்றலை யுடல்புக்குக் குளிப்ப முகங்கரிந்
துயிர்போகு செந்நெறி பெறுமையிற்
பொருகளத்து நின்றன நெடுஞ்சேட் பொழுதே.

(ஆசிரிய.)

1369. கார்த்தரும் புல்லணற் கண்ணஞ்சாக் காளைதன்
தார்ப்பற்றி யேர்தருந் தோணோக்கித்—தார்ப்பின்னை
ஞாட்பினுள் யானைக் கணநோக்கி யானைப்பின்
தேர்க்குழாம் நோக்கித்தன் மாநோக்கிக்—கூர்த்த
கணைவரவு நோக்கித்தன் வேனோக்கிப் பின்னைக்
கிணைவனை நோக்கி நகும்.

(தகடூர்.)

1370. இகழ்த லோம்புமின் புகழ்சால் [ம]றவர்
கண்ணிமைப் பளவிற் கணைசெல் கடுவிசைப்
பண்ணமை புரவிப் பண்புபா ராட்டி
எல்லிடைப் படர்தந் தோனே கல்லென
வேந்தூர் யானைக் கல்ல
தேந்துவன் போலான்றன் னிலங்கிலை வேலே.

( ,, )

1371. அதிரா தற்ற நோக்கு ஞாயிலுட்
கதிர்விடு சுடரின் விளங்கும் வெள்வேல்
எதிரிய திருவி னிளையோ னின்றாந்தன்
குதிரை தோன்ற வந்துநின் றனனே
அவன்கை யொண்படை யிகழ்த லோம்புமின்
விழுச்சீர் விண்பொரு நெடுங்குடை வேந்தன்
கண்படை பெறுஅன் வைகின னிவன்கைத்
திண்கூ ரெஃகந் திறந்த
புண்கூர் யானை நவில்குரல் கேட்டே.

( ,, )

---

**1368.** 2, 3 யாவுக்கடுங்; 9, 2 சென்னெறி. **1369.** 21 கிணையனை.
**1371.** 3 3 னிளையோ.

1372. கட்டி யன்ன காரி மேலோன்
தொட்டது கழலே கையது வேலே
சுட்டி யதுவுங் களிறே யொட்டிய
தானை முழுதுடன் விடுத்தநம்
யானை காமினவன் பிறிதெறி யலனே.

(தகடூர்.)

1373. அஞ்சுதக் கனளே யஞ்சுதக் கனளே
யறுகா லவரா பந்த ரென்ன
வறுந்தலை முதியாள் அஞ்சுதக் கனளே
வெஞ்சமத், தென்செய் கென்றும் வேந்தர்க்
கஞ்ச லென்பதோர் களிறின் றனளே.

( ,, )

1374. வல்லோன் செய்த வகைபமை வனப்பிற்
கொல்வினை முடியக் கருதிக் கூறிலை
வெல்வேல் கைவல னேந்திக் கொள்ளெனிற்
கொள்ளுங் காலு மாவேண் டாமே
மேலோன், அறிவொடு புணர்ந்த நெறியிற் புரவிக
கழற்கா லிளையோ னுழற்றிகழ் வெகுளி
இகழ்த லோம்புமின் புகழ்சான் மன்னிர்
தொல்லை நான்றைச் செருவினு ளிவன்கை
வேல்வாய் வீழ்ந்தோர் பெண்டிர் கைம்மையின்
அறுத்த கூந்தற் பிறக்கஞ் சகடம்
பொறுத்தல் செல்லா பலமுரிந் தனவே, அதனால்
வல்லோர் பூழை நின்மின் கல்லென
வெஞ்சமங் குழைப்பக் கூர்தலின்
அஞ்சுதக வுடைத்திவ் வாற்றலோ னிலையே.

( ,, )

1375. உண்டது, கள்ளு மன்று களிப்பட் டனனே
ஊர்ந்தது, புள்ளு மன்று பறந்தியங் கும்மே
மேலோர், தெய்வ மல்லன் மகனே நொய்தாங்குத்
தெரியல ரெடுத்த பாசிலைக் கண்ணி
வெருவத் தக்க வேலி னோன்வேல்
மைய நிமிர்ந்து பருந்தி னோடிக்
கழிந்தார்த் தன்றவ னெறிந்தநை கழுமுரட்
டேந்துவரை யிவரும் புலிபோல்
வேந்தர்வந் தாரும் வெஞ்சினக் களிறே.

( ,, )

1376. நிலையமை நெடுந்திணை யேறி நல்லோரி
னிலைபொலி புதுப்பூண் கணவனோ டேடிச்
சிந்தி யன்ன செருபடு வனப்பிற்
புள்ளிக் காரி மேலோன் தெள்ளிதின்

---

**1374.** 6, 3(ன்)முற்றிகழ்; 10, 3 பிறககககஞ்; 13, 3 கூந்தலின். **1375.** 2, 1 மூகந்தது. **1376.** 1, 1 நிலையாமை; 3,3 செடுபடு; 5,2 பிணிக்கு.

உள்ளினும் பனிக்கு மொருவே லோனே
குன்றுநீர்க் கிடங்கிற் கெண்டை பார்க்கும்
மணிநிறச் சிறுசிரல் போலநம்
அணிநல் யானைக் கூறளக் கும்மே.

(தகடூர்.)

1377. வருக வருக தாங்கன்மின் தாங்கன்மின்
உருவக் குதிரை யொருவே லோனே
இருகை மாக்களை யாவருஞ் சலிப்ன
நாற்கை மாக்களிந் நாட்டகத் தில்லை
ஆவனும், தாரொடு துயல்வருந் தயங்குமணிக் கொடும்பூண்
மார்புடைக் கருந்தலை யெற்குறித் தனனே
யானும், கடிகம ழுவகைக் கைவல் காட்சியென்
றடியவற் கவனரை யறவை யீந்தனனே
ஆதலால், என்னெறிந்து பெயர்த வெற்குமாங் கரிதே
அவனெறிந்து பெயர்த லெமக்குமாங் கரிதே
ஆதலால், மன்ன தாங்கு மாக முன்னீர்
நீர்கொள் பெருங்குளந் தயங்க நாளை
நோய்பொதி நெஞ்சந் துளிர்ப்ப வவன்றாய்
மூழ்குவ ளொன்றோ வன்றே லெனையாய்
மூழ்குவ ளொன்றோ வன்[றிய]வன்
றாயும் யாயு முடன்மூழ் குபவே.

( ,, )

## அதி. 123. குதிரைமறம்

1378. தாங்கன்மின் தாங்கன்மின் றானை விறன்மறவிர்
ஓங்கல் மதிலு ளொருதனிமா—ஞாங்கர்
மயிரணியப் பொங்கி மழைபோன்ற மாற்றார்
உயிருணிய வோடி வரும்.

(வெண்பா. 90)

1379. குந்தங் கொடுமிற் குருதிவேல் கூடாதார்
வந்த வகையறியா வானமருள்—வெந்திறல்
ஆர்கழல் மன்ன னலங்குளைமா வெஞ்சிலை
வார்கணையின் முந்தி வரும்.

( ,, 133)

1380. நிரைகதிர்வேல் மாறனை நேர்நின்றார் யானைப்
புரைசை யறநிமிர்ந்து பொங்கா—அரசர்தம்
முன்முன்னு வீழ்ந்தார் முடிகளுதைத்தமாப்
பொன்னுரைகற் போன்ற குளம்பு.

(முத்தொள்.)

1381. அடுதிறன் முன்பின னுற்ற முருக்கிப்
படுதலை பாறண்ண நூறி வடியிலைவேல்
வீசிப் பெயர்பவ னூர்ந்தமாத் தீதின்றி
நாண்மகிழ் தூங்குந் துடியன் துடிகொட்டும்
பாணியிற் கொட்டுங் குளம்பு.

(தகடூர்.)

---

**1377.** 8, 4 வீந்தனனே. **1381.** 1 அடுதிறன்முன்.

1382. கறங்கெனக் காலசக் கரங்கள் தாமென
மறங்கிளர் மன்னவர் மகுட நெற்றியும்
உறங்கலில் கடாக்களிற் றுச்சி மேலுமாய்த்
திறங்கிளர் புரவிகள் திரிதர் கின்றவே.

(சூளா. அரசி. 146)

1383. பருத்தி வேலிச் சீறூர் மன்னன்
உழுத்த தருண்ட வோய்நடைப் புரவி
கடல்மண்டு தோணியிற் படைமுகம் போழ
நெய்ம்மிதி யருந்திய கொய்சுவ லெருத்திற்
கோணடை மன்னர் தாருடைக் கலிமான்
அணங்குடை முருகன் கோட்டத்துக்
கலந்தொடா மகளிரி னிகந்துநின் றனவே.

(புறம், 299)

1384. நிலம்பிறக் கிடுவது போலக் குளம்புகுடையூஉ
உள்ள மொழிக்குங் கொட்பின் மான்மேல்
எள்ளுநர்ச் செகுக்குங் காளை கூர்த்த
வெந்திற லெஃகம் நெஞ்சுவடு விளைப்ப
ஆட்டிக் காணிய வருமே நெருநை
உரைசால் சிறப்பின் வேந்தர்த முன்னர்க்
கரைபொரு முந்நீர்த் திமிலிற் போழ்ந்தவர்
கயந்தலை மடப்பிடி புலம்ப
இலங்குமருப் பியானை யெறிந்த வெற்கே.

( ,, 303)

1385. கொடுங்குழை மகளிர் கோதை சூடா
நடுங்குமணி களையா நாளரி பருகி
வளிதொழி லொழிக்கும் வண்பரிப் புரவி
பண்ணற்கு விரைதி நீயே நெருநை
எம்முற் றப்பியோன் றம்பியொ டாங்கு
நாளைச் செய்குவ மமரெனக் கூறிப்
புன்மயி ருகுத்தலுஞ் செய்யான் வன்மான்
கடவு மென்ப பெரிதே யதுகேட்டு
வலம்படு முரசின் வெல்போர் வேந்தர்
இலங்கிரும் பாசறை நடுங்கின்
றிரண்டா காதவன் கூறிய தெனவே.

( ,, 304)

1386. உருவப் புள்ளியி னுட்குவரு கடுந்திறற்
குருகுபறந் தன்ன வெள்ளை மாயோன்
முருகுமா மாயனிவன் யாவன் கொல்லோ
வயவே றிருக்குங் கண்ணியுந் திருந்துந்
துணையோ தஞ்ச மில்லைக் கிணையெனக்
கண்ணூர் நடுவட் டோன்றித்தன்
பண்ணியற் புரவி யாய்தல் தகுமே.

( ? )

---

**1382.** 6 மன்னர்த. **1384.** 3, 2 செருக்குங்; 4, 3 நெஞ்சுவிடு; 5, 1 வாட்டிடக். **1385.** 2, 4 பகுதி.

## அதி. 124. யானைமறம்

1387. அடக்கருந் தானை யலங்குதார் மன்னர்
விடக்கு முயிரு முணீஇயக்—கடற்படையுட்
பேயு மெருவையுங் கூற்றுந்தன் பிற்படரக்
காயுங் கழலான் களிறு.

(வெண்பா. 132)

1388. வீறுசால் மன்னர் விரிதாம வெண்குடையைப்
பாற வெறிந்த பரிசயத்தால்—தேறாது
செங்கண்மாக் கோதை சினவெங் களியானை
திங்கள்மேல் நீட்டுந்தன் கை.

(முத்தொள்.)

1389. அயிற்கதவம் பாய்ந்துழக்கி யாற்றல்சால் மன்னர்
எயிற்கதவங் கோத்தெடுத்த கோட்டாற்—பனிக்கடலுட்
பாய்தோய்ந்த நாவாய்போற் றோன்றுமே யெங்கோமான்
காய்சினவேற் கிள்ளி களிறு.

( ,, )

1390. மருப்பூசி யாக மறங்கனல்வேல் மன்னர்
திருத்தகு மார்போலை யாகத்—திருத்தக்க
வையக மெல்லா மெமதென் றெழுதுமே
மொய்யிலைவேல் மாறன் களிறு.

( ,, )

1391. உருவத்தார்த் தென்னவ னோங்கெழில் வேழத்
திருகோடுஞ் செய்தொழில் தேரில்—ஒருகோடு
வேற்றூ ரகல முழுமே யொருகோடு
மாற்றார் மதிற்றிறக்கு மால்.

( ,, )

1392. கொடிமதில் பாய்ந்திற்ற கோடு மரசர்
முடியிடறித் தேய்ந்த நகமும்—பிடிமுன்பு
பொல்லாமை நாணிப் புறங்கடை நின்றதே
கல்லார்தோட் கிள்ளி களிறு

( ,, )

1393. கச்சி யொருகால் மிதியா வொருகாலால்
தத்துநீர்த் தண்ணுஞ்சை தான்மிதியாப்—பிற்றையும்
ஈழ மொருகால் மிதியா வருமேநங்
கோழியர்கோக் கிள்ளி களிறு.

( ,, )

1394. பாற்றின மார்ப்பப் பருந்து வழிபடர
நாற்றிசையு மோடி நரிகதிப்ப—ஆற்ற
அலங்கலம் பேய்மகளி ராட வருமே
இலங்கிலைவேற் கிள்ளி களிறு.

( ,, )

---

**1391.** 7 வேறூல்; 15 (ந்)தான். **1393.** 13 கோழியர் கோற். **1394.** 8 ஆற்றல்; 10 பொய்மகளி.

1395. தோற்ற மலைகட லோசை புயல்கடாங்
காற்றி னிமிர்ந்த செலவிற்றாய்க்—கூற்றாங்
குறியெதிர்ப்பை கொள்ளுந் தகைமைத்தே யெங்கோன்
எறிகதிர்வேல் மாறன் களிறு.

(முத்தொள்.)

1396. அடுமதில் பாய வழிந்தன கோட்டைப்
பிடிமுன் பழகழிதல் நாணி—முடியுடை
மன்னர் குடையால் மறைக்குமே செங்கனல்வேற்
றென்னவர் கோமான் களிறு.

( ,, )

1397. இ[ள]ங்களி [றொ]ன்ற மடப்பிடி சார
வி[ல]ங்கருவி நீராற் றெளி[க்குடம்]—நலங்கிளர்வேற்
றன்னரும்போர்க் கோதை தொடா [அவ்] செருக்கின
மன்னர் மதிலாய வென்று.

( ,, )

1398. மம்மர் விசும்பின் மதியு மதிப்பகையுந்
தம்மிற் றடுமாற்றம் போன்றதே—வெம்முனையிற்
போர்யானை மன்னர் புறங்கணித்த வெண்குடையைக்
கார்யானை யன்றடர்த்த கை.

(பெரும்பொருள்.)

1399. வான்றோய் கழுகினமும் வல்லூகிப் பேய்க்கணமும்
ஊன்றோய் நரியு முடன்றொக்க—மூன்றாங்
கடமா நிலநனைக்குங் கார்யானைக் கிட்ட
படமாறு நீப்பதனைப் பார்த்து.

( ,, )

1400. மாயத்தாற் றாக்கு மலையு மலையும்போற்
காயத்தா றஞ்சாக் களிற்றொடும்போய்ச்—சாயுந்
தொலைவறியா வாடவருந் தோன்றினார் வான்மேல்
மலையுறையுந் தெய்வம்போல் வந்து.

( ,, )

1401. நெறியா நடைமா வொடுதேர் களெடுத்
தெறியா வகையா றுதகலே றாசரம்
பறியா முறியா படையோர் படையுட்
செறியா மதயா னைதிரிந் தனவே.

(நளா. ஆசி. 107.)

1402. ஆர்ப்பெழு கடலினும் பெரிதவன் களிறே
கார்ப்பெய லுருமின் முழக்க லன்றே
யார்கொ லளியர் தாமே யாரார்
செறியத் தொடுத்த கண்ணி
கவிகை மள்ளன் கைப்பட் டோரே.

(புறம், 81)

---

**1396.** 3 வழிந்ததன். **1397.** 1 இருங்களி; 5 விருங்கருவி; 11-12 துடா செருக்கின. இறுதியடி 'மன்னர் புறங்கணித்த வெண் மதிலாய வென்று' எனக் காணப்படுகின்றது; 'புறங்கணித்த வெண்' என்பது அடுத்த செய்யுளில் 11,12 சீர்கள். **1399.** 14-15 (ந்) நீப்பதனைப் பத்து. **1401.** 1 தெறியா; 7 துகொலே.

## அதி. 125. மூதில் மறம்

1403. தருமமு மீதேயாந் தானமுமீ தேயாங்
கருமமுங் காணுங்கா லீதாஞ்—செருமுனையிற்
கோள்வாள் மறவ[ர்] தலைதுமிய வென்மகன்
வாள்வாய் முயங்கப் பெறின்.

(தகடூர்.)

1404. இன்ப முடம்புகொண் டெய்துவீர் காண்மினோ
அன்பி னுயிர்மறக்கு மாரணங்கு—தன்கணவன்
அல்லாமை யுட்கொள்ளு மச்சம் பயந்ததே
புல்லார்வேல் மெய்சிதைத்த புண்.

( ,, )

1405. எற்கண் டறிகோ வெற்கண் டறிகோ
என்மக னாதலெற்கண் டறிகோ
கண்ணே கணைமூழ் கினவே தலையே
வண்ண மாலை வாள்விடக் குறைந்தன
வாயே, பொருநுனைப் பகழி மூழ்கலிற் புலால்வழிந்
தாவ நாழிகை யம்புசெறித் தற்றே
நெஞ்சே வெஞ்சரங் கடந்தன குறங்கே
நிறங்கரந்து பல்சர நிறைத்தன வதனால்
அவிழ்பூ வம்பணைக் கிடந்த காளை
கவிழ்பூங் கழற்றிண் காய்போன் றனனே.

( ,, )

1406. வாதுவல் வயிறே வாதுவல் வயிறே
நோலா வதனகத் துன்னீன் றனனே
பொருந்தா மன்ன ரருஞ்சம முருக்கி
யக்களத் தொழிதல் செல்லாய் மிக்க
புகர்முகக் குஞ்சர மெறிந்த வெஃகம்
அதன்முகத் தொழிய நீபோந் தனையே
எம்மில் செய்யா வரும்பழி செய்த
கல்லாக் காளைநின் னீன்ற வயிறே.

( ,, )

1407. முலைத்தா யிரங்கப் புலைப்பறை முழங்கத்
தம்மிற் சாவார் தம்மில் லோரே
அன்ன ரல்லரென் சிறுவர் முன்னிய
வேந்துகளத் தவிய நூறி வேந்தரொடு
முளிபுற் கானத்து விளியி[னல்]லைத
யார்வலர் ை... மறித்
தீர்... வரி... வெவறியலரே.

( ? )

---

**1403, 1404, 1406, 1407, 1408, 1409**: இவை 'கெடுக சிந்தை' (1414) என்பதன் பின். **1404**. 2 முடம்புகொ; 11 மையம். **1405**. இது 'தோறு' (1412) என்பதன் பின். 5, 2 பொருநுணைப். **1406**. 2, 2-3 வலத்தை நுன்னீன்; 4, 1 யிக்களத்; 6, 1 அதனகத்; 7, 1 எம்மிறை; 7, 3 (ப்) பெரும்பழி. 3-ம் அடியிற் 'சம' என்பதிலிருந்து 7-ம் அடியில் 'வரும்' என்பதுமுடிய வொருபிரதியிற் காணப்படவில்லை. **1407**. 2, 2 சார்வார்.

1408. குரங்குமேனித் திரங்குமுகச் செதுமுலை
நரைமூ தாட்டி வினவுதி யாயின்
நும்மகன் கொல்லோ வறியே னிம்மகன்
கொற்ற வெண்குடை மன்னர்க் குதவிச்
செஞ்சோற் றருங்கடன் வெஞ்சமத் தாற்றிக்
களிறுதலை யடுத்து மாகா னீட்டிப்
பிளிறுகுரல் முரச மெத்தணை யாகப்
பருந்தின் செந்நிழற் பந்த ராக
அழிபிணக் குன்றே வேலி யாகக்
கழுகுணக் கிடந்த காளை
நும்மகன் கொல்லோ யானறி யேனே.

( ? )

1409. வாழிய துடிய வாழிய துடிய
என்மகன், ஆர்த்தெறிந் தனனோ வெறிந்தார்த் தனனோ
ஆர்த்து மெறியா னெறிந்து மாரான்
கையது வேலே காலது கழலே
மெய்யது சினமே மேற்சென் றனனே
வேந்த ரெல்லாந் தன்னோக் கினரே
நோக்கி நோக்கா முறுவலன் றூக்கித்
தமீஇந்தா மென்னத் தண்ணுமை
கழித்தா னெள்வாள் வீழ்ந்தன களிறே.

( ? )

1410. ஈன்று புறந்தருத லென்றலைக் கடனே
சான்றோ னாக்குதல் தந்தைக்குக் கடனே
வேல்வடித்துக் கொடுத்தல் கொல்லற்குக் கடனே
தண்ணடை நல்கல் வேந்தற்குக் கடனே
ஒளிறுவாள் வெஞ்சம முருக்கிக்
களிறெறிந்து பெயர்தல் காளைக்குக் கடனே.

(புறம், 312)

1411. வெள்ளை வெள்யாட்டுச் செச்சை போலத்
தன்னோ ரன்ன விளைய ரிருப்பப்
பலர்மீது நீட்டிய மண்டையென் சிறுவனைக்
காலிழி கட்டிலிற் கிடத்தித்
தூவெள் ளறுவை போர்ப்பித் திலதே.

( ,, 286)

1412. தோறா தோறா வென்றி தோலொடு
துறுகல் மறையினு முய்குவை போலாய்
நெருந லெல்லீ யெறிந்தோன் றம்பி
அகற்பெய் குன்றியிற் சுழலுங் கண்ணன்
பேரூ ரட்ட கள்ளிற்
கோரிற் கோரிற் றேருமால் நின்னே,

( ,, 300)

---

**1408.** 3, 4 னம்மகன்; 7, 3 (ம்) வெத்தணை; 8, 2 சென்னிழற், செருநிழற்; 11, 2-4 கொல்லோயா னறியேனிய் மகனே. **1409.** 8, 2 மெண்ணத். **1411.** 5, 4 திலவே. **1412.** 6, 1 கோறரிற்.

1413. சிற்றில் நற்றூண் பற்றி நின்மகன்
யாண்டுள னோவென வினவுதி யென்மகன்
யாண்டுள னாயினு மறியே னோரும்
புலிசேர்ந்து போகிய கல்லளை போல
ஈன்ற வயிறோ விதுவே
தோன்றுவன் மாதோ போர்க்களத் தானே.

(புறம், 86)

1414. கெடுக சிந்தை கடிதிவள் துணிவே
முதிரா மகளி ராகற்க யாமே
மேனா ளுற்ற செருவிற்கிவள் தன்னை
யானை யெறிந்து களத்தொழிந் தனனே
நெருந லுற்ற செருவிற்கிவள் கொழுநன்
பொருநரை விலங்கி யாண்டுப்பட் டனனே
இன்றும், செருப்பறை கேட்டு விருப்புற்று மயங்கி
வேல்கைக் கொடுத்து வெளிதுவிரித் துடீஇ
பாறுமயிர்க் குடுமி யெண்ணெய் நீவி
ஒருமக னல்ல தில்லோள்
செருமுகம் நோக்கிச் செல்கென விடுமே.

( ,, 279)

1415. மாவா ராதே மாவா ராதே
எல்லார் மாவும் வந்தன வெம்மிற்
புல்லுளைக் குடுமிப் புதல்வற் றந்த
செல்வ னூரு மாவா ராதே
இருபே ரியாற்ற வொருபெருங் கூடல்
விலங்கிடு பெருமரம் போல
உலந்தன்று கொல்லவன் மலைந்த மாவே.

( ,, 273)

1416. வேம்புசினை யொடிப்பவுங் காஞ்சி பாடவும்
நெய்யுடைக் கைய ரையவி புகைப்பவும்
எல்லா மனையுங் கல்லென் றவ்வே
வேந்துடன் றெறிவான் கொல்லென
நெடிதுவந் தன்று னெடுந்தகை தேரே.

( ,, 296)

1417. கடல்கிளர்ந் தன்ன கட்டூர் நாப்பண்
வெந்துவாய் மடித்து வேறலைப் பெயரித்
தோறுவைத் தெழுதரூஉத் துரந்தெறி ஞாட்பின்
வருபடை போழ்ந்து வாய்ப்படை விலக்கி
இடைப்படை யழுவத்துச் சிதைந்து வேறாகிய
சிறப்புடை யாளன் மாண்புகண் டருளி
வாடுமுலை யூறிச் சுரந்தன
ஓடாப் பூட்கை விடலை தாய்க்கே.

( ,, 295)

---

**1415.** 5, 2 யாற்றூர்; 7, 2 செல்வன். **1417.** 6, 3 மாண்டுகண்.

## அதி. 126. களம்

1418. கவளங்கொள் யானைதன் கைதுமியப் பட்டுப்
பவளஞ் சொரிதரு பைபோல்—திவளொளிய
ஒண்செங் குருதி யுமிழும் புனனாடன்
கொங்கரை யட்ட களத்து.

(களவழி, 14)

1419. உருவக் கடுந்தேர் முருக்கிமற் றத்தேர்ப்
பருதி சுமந்தெழுந்த யானை—இருவிசும்பிற்
செல்சுடர் சேர்ந்த மலைபோன்ற செங்கண்மால்
புல்லாரை யட்ட களத்து.

( ,, 4)

1420. கொல்யானை பாயக் குடைமுருக்கி யெவ்வாயும்
புக்கவா யெல்லாம் பிணம்பிறங்கத் தச்சன்
வினைபடு பள்ளியிற் றோன்றுமே செங்கட்
சினமால் பொருத களம்.

( ,, 15)

1421. திண்டோள் மறவ ரெறியத் திசைதோறும்
பைந்தலை பாறிப் புரள்பவை—நன்கெனைத்தும்
பெண்ணையந் தோட்டம் பெருவளி புக்கற்றே
கண்ணார் கமழ்தெரியற் காவிரி நீர்நாடன்
எண்ணாரை யட்ட களத்து.

( ,, 24)

1422. எவ்வாயு மோடி வயவர் துணித்திட்ட
கைவாயிற் கொண்டெழுந்த செஞ்செவிப் புன்சேவல்
ஐவாய் விடநாகங் கவ்வி விசும்பிவருஞ்
செவ்வா யுவணத்திற் றோன்றும் புனனாடன்
தெவ்வரை யட்ட களத்து.

( ,, 26)

1423. செவ்வரைச் சென்னி யரிமானோ டவ்வரை
ஒல்கி யுருமிற் குடைந்தன்றால்—மல்கிக்
கரைகொன் றிழிதருங் காவிரி நாடன்
உரைசா லுடம்பிடி மூழ்க வரசோ
டரசுவா வீழ்ந்த களத்து.

( ,, 35)

1424. ஓஒ உவமை யுறழ்வின்றி யொத்ததே
காவிரி நாடன் கழுமலங் கொண்டநாள்
மாவுதைப்ப மாற்றார் குடையெலாங் கீழ்மேலாய்
ஆவுதைக்கு மாம்பி நிகர்த்த புனனாடன்
மேவாரை யட்ட களத்து.

( ,, 36)

---

**1418.** 1-2 கவளங் கொளயானை; 3 கைதுணியப்; 6-11 சொரி கருப் பைபோன்று தவளவள வொண்சங் கினங்க ளுகளும்; 8 திகழொளிய. **1421.** 16 நன்னாடன்; 17 ஒன்னாரை. **1422.** 2 மோட்டி. **1423.** 7 குடைந் தன்ன. **1424.** 13-15 ஆவுதைத் தாரம்பி போன்ற.

1425. இருநிலஞ் சேர்ந்த குடைக்கீழ் வரிநுதல்
ஆடியல் யானைத் தடக்கை யொளிறுவாள்
ஓடா மறவர் துணிப்பத் துணிந்தவை
கோடுகொ ளொண்மதிய நக்குபாம் பொக்குமே
பாடா ரிடிமுரசிற் பாய்புன னீர்நாடன்
கூடாரை யட்ட களத்து.

(களவழி, 22)

1426. ஞாட்பினு ளெஞ்சிய ஞாலஞ்சேர் யானைக்கீழ்ப்
போர்ப்பி லிடிமுரசி னூடுபோ மொண்குருதி
கார்ப்பெயல் பெய்தபிற் செங்குளக் கோட்டுக்கீழ்
நீர்த்தூம்பு நீருமிழ்வ போன்ற புனனாடன்
ஆர்த்தம ரட்ட களத்து.

( ,, 2)

1427. படைப்பொலிதார் மன்னர் பரூஉக்குடர் மாந்திக்
குடைப்புறத்துத் துஞ்சு மிகலன் — இடைப்பொலிந்த
திங்களிற் றோன்று முயல்போலுஞ் செம்பியன்
செங்கண் சிவந்த களத்து.

( ,, )

1428. கைபொருத வோசையாற் கண்ணுமிழ்ந்த செந்தீயான்
மெய்பொருது தோய்ந்தெழுந்த வெம்புகையான்—ஐயோ
வெதிர்வேங் கடுங்கானம் போன்றதே வெம்போர்
எதிர்வேந்தர் செய்த விடம்.

(பாரதம்)

1429. வென்று களங்கொண்ட வேந்தன்றேர் சென்றதற்பின்
கொன்ற பிணநிணக்கூழ் கொற்றவை—நின்றளிப்ப
உண்டாடு பேய்கண் டுவந்தனவே போர்ப்பரிசில்
கொண்டா டினகுரவைக் கூத்து.

(பெரும்பொருள்.)

1430. வெருவரு வெஞ்சமத்து வேலிலங்க வீழ்ந்தார்
புருவ முரிவுகண் டஞ்சி—நரிவெரீஇச்
சேய்த்தணித்தாய் நின்றழைக்குஞ் செம்மற்றே தென்னவன்
வாட்கணித்தாய் வீழ்ந்தார் களம்.

(முத்தொள்.)

1431. மரகதப்பூண் மன்னவர் தோள்வளை கீழா
வயிரக் கடகக்கை வாங்கித்—துயருழந்து
புண்ணுற் றழைக்குங் குறுநரித்தே பூழியனைக்
கண்ணுற்று வீழ்ந்தார் களம்.

( ,, )

1432. முடித்தலை வெள்ளோட்டு மூளைநெய் யாகத்
தடித்த குடர்திரியா மாட்டி—எடுத்தெடுத்துப்
பேஎய் விளக்கயரும் பெற்றித்தே செம்பியன்
சேஎய் பொருத களம்.

( ,, )

---

**1425.** 14 ளொண்மதியை; 15 நக்கும்பாம். **1426.** 10 பெய்தலிற்; 12 கோட்டக்கீழ். **1428.** 6 தேய்த்தெழுந்த. **1429.** 9 உண்டாடும். **1431.** 4 கிழற்ற; 7 வீக்கித்; 13-14 கண்ணுற்றூர் வீழ்ந்த. **1432.** 15 களத்து.

1433. ஏனைய பெண்டி ரெரிமூழ்கக் கண்டுதன்
தானையாற் கண்புதைத்தான் தார்வழுதி—யானையும்
புல்லார் பிடிபுலம்பத் தன்கண் புதைத்ததே
பல்யானை யட்ட களத்து.

(முத்தொள்.)

1434. பெருகிய குருதியுட் பிறக்குஞ் செந்தடி
யருகுடை யளற்றினு ளழுந்திப் பாகமோர்
சொரிகதிர்க் கோடக முடிகள் தோன்றலாற்
பொருகளம் புற்றெடுக் கின்ற போன்றவே.

(சூளா. அரசி. 267)

## அதி. 127. இரங்கல்

1435. போர்க்குப் புணைமன் புரையோர்க்குத் தாணுமன்
ஊர்க்கு முலகிற்கு மோருயிர்மன்—யார்க்கு
மறந்திறந்த வாயி லடைத்ததே யண்ணல்
நிறந்திறந்த நீணிலைய வேல்.

(வெண்பா. 80)

1436. முன்புறந் தான்காணு மிவ்வுலக மிவ்வுலகிற்
றன்புறங் கண்டறிவார் தாமில்லை—அன்பின்
அழுதார்க ணீர்விடுத்த வாரூடிக் கூகை
கழுதார்ந் திரவழங்குங் காடு.

( ,, 274)

1437. இரவலர் வம்மி னெனவிசைத்த லின்றிப்
புரவலன் மாய்ந்துழியும் பொங்கும்—உரையழுங்க
வேற்கண் ணியரழுத வெம்பூசல் கேட்டடங்கா
தோற்கண்ண போலுந் துடி.

(தகடூர்.)

1438. உலகு பொதியுருவந் தன்னுருவ மாகப்
பலர்பரவத் தக்க பறந்தலை நன்காடு
புலவுங்கொ லென்போல் புலவுக் களத்தோ
டிலைநெடுவே லோனை யிழந்து.

( ? )

1439. அரச ரேறே யடலாழி
வலவா யார்க்குந் தோலாதாய்
புரிசை நகர்நூற் றொருபதுடைப்
பூமி முழுதுந் தாளுண்டோய்
உரைசெய் துலகம் பாராட்டு
மொளியா யோடை யானையாய்
வரைசெய் தனைய திரடோளாய்
மறைதல் பொருளோ வயவேந்தே.

(சூளா. அரசி. 343)

---

**1433.** 1 ஏனையார்; 11 தான்கண்; 13 பல்வாயா(ர). **1434.** இது 'வென்று களங்' (1429) என்பதன்பின். **1435.** 4 தானுவமன்; 14 நீளிலே. **1436, 1438:** இவை 'பல்சான்றீரே' (1452) என்பதன்பின். **1436.** 11 வாரூேடிக். **1437.** 13-14 தோற்கண்போ லுந்தம். **1439, 1440:** இவை 'இரவலர் வம்மி' (1437) என்பதன்பின். **1439.** 7-9 புரிசையைத் தானூற் றிருபதுடை.

1440. மூரி முந்நீ ருலகங்கள்
முழுதுங் காவல் முனிந்தாயோ
ஆரு மில்லா வடியோங்கள்
வழிபா டாற்ற மாட்டாயோ
சீரின் மன்னும் வளநாடுந்
தெய்வப் படையுஞ் செல்வமுமிப்
பாரின் மன்னர் பிறர்கொள்ளப்
பணித்த தென்னோ படைவேந்தே.

(சூளா. அரசி. 351)

1441. வெள்ளெருக்கஞ் சடைமுடியான் வெற்பெடுத்த திரடோளான் மேலுங் கீழும்
எள்ளிருக்கு மிடமின்றி யுயிரிருக்கு மெனநாடி யிழைத்த தாலே[ா]
கள்ளிருக்கு மலர்க்கூந்தற் சானகியை வன்சிறையில் வைத்த காதல்
உள்ளிருக்கு மெனக்கருதி யுடல்பிளந்து தடவியதோ வொருவன் வாளி.

(இராமாவ. இராவணன்வதை. 239)

1442. செற்றன் றாயினுஞ் செயிர்த்தன் றாயினும்
உற்றன் றாயினு முய்வின்று மாதோ
பாடுநர் போலக் கைதொழு தேத்தி
இரந்தன் றாகல் வேண்டும் பொலந்தார்
மண்டமர் கடந்த தானைத்
திண்டோள் வளவற் கொண்ட கூற்றே.

(புறம், 226)

1443. எறிபுனக் குறவன் குறைய லன்ன
கரிபுற விறகி னீம வொள்ளழற்
குறுகினுங் குறுகுக குறுகாது சென்று
விசும்புற நீளினும் நீள்க பசுங்கதிர்த்
திங்க ளன்ன வெண்குடை
ஞாயிற் றன்னோன் புகழ்மா யலவே.

( ,, 231)

1444. பாடுநர்க் கீத்த பல்புக ழன்னே
ஆடுநர்க் கீத்த பேரன் பினனே
அறவோர் புகழ்ந்த வாய்கோ லன்னே
திறவோர் புகழ்ந்த திண்ணன் பினனே
மகளிர் சாயல் மைந்தர்க்கு மைந்து
துகளறு கேள்வி யுயர்ந்தோர் புக்கில்
அனைய னென்னா தத்தக் கோனை
நினையாக் கூற்ற மின்னுயி ருய்த்தன்று
பைதற் சுற்றங் கெடீஇ யதனை

---

**1440.** 10-11 அடிபா ராட்ட; 19 பாரு. **1441.** இது 'அளியதாமே' (1451) என்பதன் பின். **1442.** 4, 2 றாதல்; 5, 2 கடக்குங்; 5, 3 தானையத்; 6, 1 திண்டோர்; 6, 2 வலவற்.

வைகம் வம்மோ வாய்மொழிப் புலவீர்
நனந்தலை யுலக மரந்தை தூங்கக்
கேடி னல்லிசை யுயர்ந்தோர் சூடி
நடுக லாயினன் புரவல னெனவே.

(புறம். 221)

1445. நோகோ யானே தேய்கமா காலை
பிடியடி யன்ன சிறுவழி மெழுகித்
தன்னமர் காதலி புன்மேல் வைத்த
இன்சிறு பிண்டம் யாங்குண் டனன்கொல்
உலகுபுகத் திறந்த வாயிற்
பலரோ டுண்டல் மரீஇ யோனே.

( ,, 234)

1446. தொடியுடைய தோண்மணந்தனன்
கடிகாவிற் பூச்சூடினன்
தண்கமழுஞ் சாந்துநீவினன்
செற்றோரை வழிதபுத்தனன்
நட்டோரை யுயர்வுகூறினன்
வலியரென வழிமொழியலன்
மெலியரென மீக்கூறலன்
பிறரைத்தா னிரப்பறியலன்
இரந்தோர்க்கு மறுப்பறியலன்
வேந்துடை யவையகத் தோங்குபுகழ் தோற்றினன்
வருபடை யெதிர்தாங்கினன்
பொருபடை புறங்கண்டனன்
கடும்பரிய மாக்கடவினன்
நெடுந்தெருவிற் றேர்வழங்கினன்
ஓங்கியற் களிறூர்ந்தனன்
தீஞ்சேற்ற [த]சும்புதொலைச்சினன்
பாணுவப்பப் பசிதீர்த்தனன்
மயக்குடைய மொழிவிடுத்தனன், ஆங்குச்
செய்ப வெல்லாஞ் செய்தன னாகலின்
இடுக வொன்றோ சுடுக வொன்றோ
படுவழிப் படுகவிப் புகழ்வெய்யோன் றலையே.

( ,, 239)

1447. நனிபே தையே நயமில் கூற்றம்
விரகின் மையின் வித்தட் டுண்டனை
இன்னுங் காண்குவை நன்வா யாகுதல்
ஒளிறுவாள் மறவருங் களிறு மாவும்
குருதியங் குரூஉப்புனற் பொருதுகளத் தொழிய
நாளு மானான் கடந்தட் டென்றுநின்
வாடுபசி யருத்திய வசைதீ ராற்றல்

**1446.** 4, 2 வழிசெகுத்தனன்; 5, 2 புரவுகூறினன்; 15, 1 ஓங்கிய; 16, 1-2 தீஞ்சொற் றசும்புதொலைச்சினன்; 18, 1 மயக்குடை; 21, 1 படுவழிப். **1447.** 5, 3 பொருதகளத்; 6, 3 கடிந்தட்; 6, 4 டுண்டிசின்; 7, 1 வாயுபசி; 9, 3-4 வண்டு மூசுதார்.

நின்னோ ரன்ன பொன்னியற் பெரும்பூண்
வளவ னென்னும் வண்டுமூசு கண்ணி
அனையோற் கொண்டனை யாயின்
இனியார் மற்றுநின் பசிதீர்ப் போரே.

(புறம், 227)

1448. ஐயோ வெனின்யான் புலியஞ் சுவலே
உய்த்தனனென் கொளினே மார்பெடுக் கல்லேன்
என்போற் பெருவிதிர்ப் புறுக நின்னை
இன்னா துற்ற வறனில் கூற்றே
நிரைவளை முன்கை பற்றி
வரைநிழற் சேர்கம் நடத்திசிற் சிறிதே.

( ,, 255)

1449. இளையோர் சூடார் வளையோர் கொய்யார்
நல்யாழ் மருப்பின் மெல்ல வாங்கிப்
பாணன் கொள்ளான் பாடினி யணியாள்
ஆண்மை தோன்ற வாடவர்க் கடந்த
வல்வேற் சாத்தன் மாய்ந்த பின்றை
முல்லையும் பூத்தியோ வொல்லையூர் நாட்டே.

( ,, 242)

1450. பெருஞ்சோறு பயந்து பல்யாண்டு புரந்த
இருங்களி றிழந்த பைதற் பாகன்
அதுசேர்ந் தல்கிய வழுங்க லாலை
வெளில்பா ழாகக் கண்டு கலிழ்ந்தாங்குக்
கலங்கினெ னல்லனோ யானே பொலந்தார்த்
தேர்வண் கிள்ளி போகிய
பேரிசை மூதூர் மன்றங் கண்டே.

( ,, 220)

1451. அளிய தாமே சிறுவெள் ளாம்பல்
இளைய மாகத் தழையா யினவே, இனியே
பெருவளக் கொழுநன் மாய்ந்தெனப் பொழுதுமறுத்
தின்னா வைக லுண்ணும்
அல்லிப் படூஉம் புல்லா யினவே.

( ,, 248)

1452. பல்சான் றீரே பல்சான் றீரே
செல்கெனச் செல்லா தொழிகென விலக்கும்
பொல்லாச் சூழ்ச்சிப் பல்சான் றீரே
அணில்வரிக் கொடுங்காய் வாள்போழ்ந் தட்ட
காழ்போ கல்விளர் நறுநெய் தீண்டா
தடகிடை மிடைந்த கைபிழி பிண்டம்
வெள்ளெட் சாந்தொடு புளிப்பெய் தட்ட
வேளை வெந்தை வல்சி யாகப்
பரற்பெய் பள்ளிப் பாயின்று வதியும்

---

**1449.** 4, 2 கொன்ற, சென்ற; 4, 4 கணிந்த; 5, 1 பல்வேற்; 5, 3-4 மாய்ந்தபின். **1450.** 1, 2 பயந்த. **1452.** 2, 2 சொல்லா.

உயவற் பெண்டிரே மல்ல மாதோ
பெருங்காட்டுப் பண்ணிய கருங்கோட் டீமம்
நுமக்கரி தாகுக தில்ல வெமக்கெம்
பெருந்தோட் கணவன் மாய்ந்தென வரும்பற
வள்ளித ழவிழ்ந்த தாமரை
நள்ளிரும் பொய்கையுந் தீயுமோ ரற்றே.

(புறம், 246)

1453. இழுமென முழங்கு முரசமொடு குழீஇய
ஒன்னார் மள்ளர்த் தந்த முன்னார்ச்
சிறையில் விலங்கிச் செவ்வே லேந்தி
யாண்டுப்பட் டனனே நெடுந்தகை
ஈண்டுநின் றம்ம வணியில்பெரும் புகழே.

(தகடூர்.)

1454. நாய்ப்பிணை வொடுங்கிய கிழநரி யேற்றை
கிளைக்கு மிறும்பிற் றெறுவரக் கடிய
கூற்றுயிர் கொண்ட வுடம்புகரி பறந்தலைப்
ப[ா]ற்றிய சுடலைப் பல்குர றெழீத்தே
பார்பெ[ா]ரு பனிக்கடல் போல
வார்தர வறியா வஞ்சுவரு காடே.

( ? )

## அதி. 128. வென்றி

1455. சூடினன் வாகைச் சுடர்த்தெரியல் சூடுதலும்
பாடினர் தொல்புகழ் பல்புலவர்—கூடார்
உடல்வே லழுவத் தொளிதிகழும் பைம்பூண்
அடல்வேந்த னட்டார்த் தரசு.

(வெண்பா. 155)

1456. கொடித்தலைத்தார்த் தென்னவன் தோற்றான்போல் நின்றான்
மடித்தவாய் சுட்டிய கையாற்—பிடித்தவேற்
கண்ணோரா வோச்சிக் களிறணையாக் கண்படுத்த
மண்ணோரா மன்னரைக் கண்டு.

(முத்தொள்.)

1457. தொழில்தேற்றாப் பாலகனை முன்னிறீஇப் பின்னின்
றழலிலைவேல் காய்த்தினார் பெண்டிர்—கழலடைந்து
மண்ணிரத்த லென்ப வயங்குதார் மாமாறன்
கண்ணிரத்தந் தீர்க்கு மருந்து.

( ,, )

1458. நளிகட லிருங்குட்டத்து
வளிபுடைத்த கலம்போலக்
களிறுசென்று களனகற்றவுங்
களனகற்றிய வியலாங்கண்
ஒளிறிலைய வெஃகேந்தி

---

**1453**. இது 'பெருஞ்சோறு' (1450) என்பதன்பின். **1454**. 2, 1 யிளைக்கு; 2, 4 கடியக்; 4, 1-4 பெற்றிய சுடலைப பஃகுறெழிதகே; 5, 1 யார்பெரு. **1455**. 4 சூடுதலைப். **1456**. 1 கொடுத்தலத்தார்த்; 3 தேற்றான் போல்; 11 களிறனையாற்.

அரசுபட வமருழக்கி
உரைசெல முரைசுவௌவி
முடித்தலை யடுப்பாகப்
புனற்குருதி யறக்கொளீஇத்
தொடித்தோட் டுடுப்பிற் றுழந்த வல்சியின்
அடுகளம் வேட்ட வடுபோர்ச் செழிய
ஆன்ற கேள்வி யடங்கிய கொள்கை
நான்மறை முதல்வர் சுற்ற மாக
மன்னர் செய்தொழி லயர மன்னிய
வேள்வி முற்றிய வாய்வாள் வேந்தே
நோற்றார் மன்றநின் பகைவர் நின்னொடு
மாற்றா ரென்னும் பெயர்பெற்
றாற்றா ராயினு மாண்டுவாழ் வோரே.

(புறம், 26)

1459. சிறப்புடை மரபிற் பொருளு மின்பமும்
அறத்து வழிப்படூஉந் தோற்றம் போல
இருகுடை பின்பட வோங்கி யொருகுடை
உருகெழு மதியி னிவந்துசேண் விளங்க
நல்லிசை வேட்டம் வேண்டி வெல்போர்ப்
பாசறை யல்லது நீபொல் லாயே
நுதிமுக மழுங்க மண்டி யொன்னார்
கடிமதில் பாயுநின் களிறடங் கலவே
போரெனிற் புகலும் நீள்கழல் மறவர்
காடிடைக் கிடந்த நாடுநனி சேய
செல்வே மல்லே மென்னார் கல்லென்
விழவுடை யாங்கண் வேற்றுப்புலத் திறுத்துக்
குணகடல் பின்ன தாகக் குடகடல்
வெண்டலைப் புணரிநின் மான்குளம் பலைப்ப
வலமுறை வருதலு முண்டென வலம்வந்து
நெஞ்சுநடுங் கவலம் பாயத்
துஞ்சாக் கண்ண வடபுலத் தரசே.

( „ 31)

1460. உழுதூர் காளை யூழ்கோ டன்ன
கவைமுட் கள்ளிப் பொரியரைப் பொருந்திப்
புதுவர கரிகாற் கருப்பை பார்க்கும்
புன்றலைச் சிறாஅர் வில்லெடுத் தார்ப்பிற்
பெருங்கட் குறுமுயல் கருங்கல னுடைய
மன்றிற் பாயும் வன்புலத் ததுவே
கரும்பி னெந்திரஞ் சிலைப்பி னயல
திருஞ்சுவல் வாளை பிறழு மாங்கட்
டண்பணை யாளும் வேந்தர்க்குக்
கண்படை யீயா வேலோ னூரே.

( „ 322)

**1459.** 4, 1 வருகெழு. **1460.** 1, 3 யூழ்கொண்.

1461. மீன்றிகழ் விசும்பிற் பாயிரு ளகல
ஈண்டுசெலன் மரபிற் றன்னியல் வழாஅ
துரவுச்சினந் திருகிய வுருகெழு ஞாயிறு
நிலவுத்திகழ் மதியமொடு நிலஞ்சேர்ந் தாஅங்
குடலருந் துப்பி னொன்றுமொழி வேந்தரை
அணங்கரும் பறந்தலை யுணங்கப் பண்ணிப்
பிணியுறு முரசங் கொண்ட காலை
நிலைதிரி பெறியத் திண்மடை கலங்கிச்
சிதைதலுய்ந் தன்றோ நின்வேல் செழிய
முலைபொலி யாக முருப்ப நூறி
மெய்ம்மறந்து பட்ட வரையாப் பூசல்
ஒண்ணுதல் மகளிர் கைம்மை கூர
அவிரறல் கடுக்கு மம்மென் சாயற்
குவையிருங் கூந்தல் கொய்தல் கண்டே.

(புறம், 25)

1462. ஒருவனை யொருவ னடுதலுந் தொலைதலும்
புதுவ தன்றிவ் வுலகத் தியற்கை
இன்றி னூங்கோ கேளலந் திரளரை
மன்ற வேம்பின் மாச்சினை யொண்டளிர்
நெடுங்கொடி யுழிஞைப் பவரொடு மிடைந்து
செறியத் தொடுத்த தேம்பாய் தெரியல்
கவின மாலையொடு பொலியச் சூடிப்
பாடின் றெண்கிணை கறங்கக் காண்டக
நாடுகெழு திருவிற் பசும்பூட் செழியன்
பீடுஞ் செம்மலு மறியார் கூடிப்
பொருது மென்று தன்றலை வந்த
புனைகழ லெழுவர் நல்வல மடங்க
ஒருதா னாகிப் பொருதுகளத் தடலே.

( ,, 76)

1463. கிண்கிணி களைந்தகா லொண்கழல் தொட்டுக்
குடுமி களைந்தநுதல் வேம்பி னொண்டளிர்
நெடுங்கொடி யுழிஞைப் பவரொடு மலைந்து
குறுந்தொடி கழித்தகைச் சாபம் பற்றி
நெடுந்தேர்க் கொடிஞ்சி பொலிய நின்றோன்
யார்கொல் வாழ்கவன் கண்ணி தார்பூண்டு
தாலி களைந்தன்று மிலனே பால்விட்
டயினியு மின்றயின் றனனே வயின்வயின்
உடன்றுமேல் வந்த வம்ப மள்ளரை
வியந்தன்று மிழித்தன்று மிலனே யவரை
அழுங்கப் பற்றி யகல்விசும் பார்ப்பெழக்
கவிழ்ந்து நிலஞ்சேர வட்டதை
மகிழ்ந்தன்று மிகழ்ந்தன்று மதனினு மிலனே.

( „ 77)

---

**1462.** 13, 1-3 ஒருவ னாகிப் பொருதகளத்.

## அதி. 129. புகழ்

1464. மடங்கா மயிலூர்தி மைந்தனை நாளுங்
கடம்பம்பூக் கொண்டேத்தி யற்றால்—தொடங்கமருள்
நின்றிலங்கு வென்றி நிரைகதிர்வேல் மாறனை
இன்றமிழால் யாம்பாடும் பாட்டு.

(முத்தொள்.)

1465. செங்க ணெடியான்மேற் றேர்விசைய னேற்றியபூப்
பைங்கண்வெள் ளேற்றான்பாற் கண்டற்றால்—எங்கு
முடிமன்னர் சூடியபூ மொய்ம்மலர்த்தார் மாறன்
அடிமிசையே காணப் படும்.

( ,, )

1466. கூந்தன்மா கொன்று குடமாடிக் கோவலனாய்ப்
பூந்தொடியைப் புல்கிய ஞான்றுண்டால்—யாங்கொளித்தாய்
தென்னவனே தேர்வேந்தே தேறுநீர்க் கூடலார்
மன்னவனே மார்பின் மறு.

( ,, )

1467. வானிற்கு வையகம் வென்றது வானத்து
மீனிற் கனையார் மறமன்னர்—வானத்து
மீன்சேர் மதியனையன் விண்ணுயர் கொல்லியார்
கோன்சேரன் கோதையென் பான்.

( ,, )

1468. மந்தரங் காம்பா மணிவிசும்பு போலையாத்
திங்க ளதற்கோர் திலதமா—எங்கணும்
முற்றுநீர் வைய முழுது நிழற்றுமே
கொற்றப்போர்க் கிள்ளி குடை.

( ,, )

1469. பார்படுப செம்பொன் பதிபடுப முத்தமிழ்நூ
னீர்படுப வெண்சங்கும் நித்திலமும்—சாரல்
மலைபடுப யானை வயமாறன் கூர்வேற்
றலைபடுப தார்வேந்தர் மார்பு.

( ,, )

1470. அருமணி யைந்தலை யாடரவம் வானத்
துருமேற்றை யஞ்சி யொளிக்கும்—செருமிகுதோட்
செங்கண்மா மாறன் சினவேல் கனவுமே
அங்கண்மா ஞாலத் தரசு.

( ,, )

1471. அரும்பவிழ்தார்க் கோதை யரசெறிந்த வெள்வேல்
பெரும்புலவுஞ் செஞ்சாந்தும் நாறிச்—சுரும்பொடு
வண்டாடும் பக்கமு முண்டு குறுநரி
கொண்டாடும் பக்கமு முண்டு.

( ,, )

---

**1466**. 5 பூந்தொடையைப். **1467**. 5-7 மீனிற்கு மின்னனைய ராகு மறமன்னர். **1468**. 13 கொற்றப்பேர்க். **1470**. 2 யந்தலை; 11-12 சினவே லகவுமேல்.

1472. கண்ணார் கதவந் திறமின் களிறொடுதேர்
பண்ணார் நடைப்புரவி பண்விடுமின்—நண்ணார்தந்
தேர்வேந்தன் றென்னன் திருவுத்தி ராடநாட்
போர்வேந்தன் பூச லிலன்.

(முத்தொள்.)

1473. அந்தண ராவொடு பொன்பெற்றார் நாவலர்
மந்தரம்போல் மாண்ட களிறூர்ந்தார்—எந்தை
இலங்கிலைவேற் கிள்ளி யிரேவதிநா ளென்னோ
சிலம்பிதன் கூடிழந்த வாறு.

( ,, )

1474. திறலொடு தீதுருநதிப பூழிய னல்லன்
மறலொடு மைந்து தருக்கிப்—பிறரொருவர்
தென்ன னிளங்கோத் திருமால் வழுதிமுன்
மன்னர்யார் மாறேற் பவர்.

( ? )

1475. கருங்கலி முந்நீரின் மூழ்காத முன்னம்
இருங்கடி மண்மகளை யேந்தினவே யாயிற்
பெரும்பெய ரேனத் தெயிறனைய வன்றே
சுரும்பறை தொண்டையான் தோள்.

(இரும்பல்.)

1476. எங்கோ னிருந்த கம்பலை மூதூர்
உடையோர் போல விடையின்று குறுகிச்
செம்மல் நாளவை யண்ணாந்து புகுதற்
கெம்மன வாழ்க்கை யிரவலர்க் கெளிதே
இரவலர்க் கெண்மை யல்லது புரவெதிர்ந்து
வானம் நாண வரையாது சென்றோர்க்
கானா தீயுங் கவிகை வண்மைக்
கடுமான் கோதை துப்பெதிர்ந் தெழுந்த
நெடுமொழி மன்னர் நினைக்குங் காலைப்
பாசிலைத் தொடுத்த வுவலைக் கண்ணி
மாசு ணுடுக்கை மடிவா யிடையன்
சிறுதலை யாயமொடு குறுகல் செல்லாப்
புலிதுஞ்சு வியன்புலத் தற்றே
வலிதுஞ்சு தடக்கை யவனுடை நாடே.

(புறம், 54)

1477. வையங் காவலர் வழிமொழிந் தொழுகப்
போகம் வேண்டிப் பொதுச்சொற் பொறாஅ
திடஞ்சிறி தென்னு மூக்கந் துரப்ப
ஒடுங்கா வுள்ளத் தோம்பா வீகைக்
கடுந்தடு தானைச் சேர லாதனை
யாங்கன மொத்தியோ வீங்குசெலல் மண்டிலம்
பொழுதென வரைதி புறக்கொடுத் திறத்தி

---

**1472.** 8 நண்ணுத. **1473.** 12 ளென்னு. **1474.** 3 பூமிய. **1476.** 5, 1-2 இரவலர் கேண்மை; 7, 4 வண்மைக்.

மாறி வரைதி மலைமறைந் தொளித்தி
அகலிரு விசும்பி னானும்
பகல்விளங் குதியாற் பல்கதிர் விரித்தே.

(புறம், 8)

1478. நாட னென்கோ வூர னென்கோ
பாடிமிழ் பனிக்கடற் சேர்ப்ப னென்கோ
யாங்கன மொழிகோ வோங்குவாட் கோதையைப்
புனவர் தட்டை புடைப்பி னயல
திறங்குகதி ரலமருங் கழனியும்
பிறங்குநீர்ச் சேர்ப்பினும் புள்ளொருங் கெழுமே.

( ,, 49)

1479. ஆரந் தாழ்ந்த வணிகிளர் மார்பிற்
றாடோய் தடக்கைத் தகைமாண் வழுதி
வல்லை மன்ற நீநயந் தளித்தல்
தேற்றாய் பெரும பொய்யே யென்றுங்
காய்சினந் தவிராது கடலூர் பெழுதரும்
ஞாயி றனையைநின் பகைவர்க்குத்
திங்க ளனையை யெம்ம னோர்க்கே.

( ,, 59)

1480. பாணர் தாமரை மலையவும் புலவர்
பூநுதல் யானையொடு புனைதேர் பண்ணவும்
அறனோ மற்றிது விறல்மாண் குடுமி
இன்னா வாகப் பிறர்மண்கொண்
டினிய செய்திநின் னார்வலர் முகத்தே.

( ,, 12)

1481. வழிபடு வோரை வல்லறி தீயே
பிறர்பழி கூறுவோர் மொழிதே றலையே
நீமெய் கண்ட தீமை காணின்
ஒப்ப நாடி யத்தக வொறுத்தி
வந்தடி பணிந்து முந்தை நிற்பின்
தண்டமுந் தணிதிநீ பண்டையிற் பெரிதே.

( ,, 10)

1482. களங்கனி யன்ன கருங்கோட்டுச் சீறியாழ்
பாடின் பனுவற் பாண ருய்த்தெனக்
களிறில வாகிய புல்லரை நெடுவெளிற்
கான மஞ்ஞை கணனொடு சேப்ப
ஈகை யரிய விழையணி மகளிரொடு
சாயின் றென்ப வாஅய் கோயில்
சுவைக்கினி தாகிய குய்யுடை யடிசில்
பிறர்க்கீ வின்றித் தம்வயி றருத்தி
உரைசா லோங்குபுக ழொரீஇய
முரசுகெழு செல்வர் நகர்போ லாதே.

( ,, 127)

---

**1478.** இதன்பின் 'பாரி பாரி' (புறம், 107), 'ஊர்க்குறு மாக்கள்' (புறம், 94), 'அறுகுளத் துகுத்து' (புறம், 142) என்பன புறத்திரட்டுச் சுருக்கம். **1482.** 9, 1-3 உரைசா லோங்கு புகழோ ராகிய.

1483. மழைக்கணஞ் சேக்கு மாமலைக் கிழவன்
வழைப்பூங் கண்ணியன் வாய்வா ளண்டிரன்
குன்றம் பாடின கொல்லோ
களிறுமிக வுடையவிக் கவின்பெறு காடே.
(புறம், 131)

1484. மெல்லியல் விறலிநீ நல்லிசை செவியிற்
கேட்பி னல்லது காண்பறி யலையே
காண்டல் சால வேண்டினை யாயின்
மாண்ட கூந்தல் வரைவளி யுளரக்
கலவ மஞ்ஞையிற் காண்வர வியலி
மாரி யன்ன வண்மைத்
தேர்வே ளாயைக் காணிய சென்மே.
( ,, 133)

1485. இம்மைச் செய்தது மறுமைக் காமெனும்
அறவிலை வணிக னாஅ யல்லன்
பிறரும், சான்றோர் சென்ற நெறியென
வாங்குப்பட் டன்றவன் கைவண் மையே.
( ,, 134)

1486. தடவுநிலைப் பலவி னாஞ்சிற் பொருநன்
மடவன் மன்ற செந்நாப் புலவீர்
வளைக்கை விறலியர் படப்பைக் கொய்த
அடகின் கண்ணுறை யாக யாஞ்சில
அரிசி வேண்டினெ மாகத் தான்பிற
வரிசை யறிதலாற் றன்னுந் தூக்கி
இருங்கடறு வளைஇய குன்றத் தன்ன
பெருங்களிறு நல்கி யோனே யன்னதோர்
தேற்றா வீகையு முளதுகொல்
போற்றா ரம்ம பெரியோர்தங் கடனே.
( ,, 140)

1487. நீயே, இகலவர்க் காணி னமர்கடந் துதவியவர்
படைவிலக்கி யெதிர்நிற்றலின்
வாஅள் வாய்த்த வடுவாழ் யாக்கையொடு
கேள்விக் கினியை கட்கின் னாயே
அவரே, நிற்காணிற் புறங்கொடுத்தலின்
ஊறறி யாமெய் யாக்கை தன்னொடு
கண்ணுக் கினியர் செவிக்கின் னாரே
அதனால், நீயுமொன் றினியை யவருமொன் றினியர்
ஒவ்வா யாவுள மற்றே வெல்போர்க்
கழல்புனை திருந்தடிக் கடுமான் கிள்ளி
நின்னை வியக்குமிவ் வுலகமஃ
தென்னோ பெரும வுரைத்திசி னெமக்கே.
( ,, 167)

---

**1483.** 2, 3-4 வாய வாமான்; 4, 4 நாடே. **1485.** 3, 3 சென்று; 4, 1 பாங்குப்பட். **1486.** 5, 4 தான் பிறர்; 6,2 யடுதலாற். **1487.** இதன்பின் 'அளிதோ தானே பாரி' (புறம், 109) என்பது புறத்திரட்டுச் சுருக்கம். 1, 2-3 அமர்காணினமர்கடந்தவர்; 6, 4 யதோடு; 9, 1 ஒவ்வா; 9, 4 செவ்வேற்.

1488. ஓரை யாயத் தொண்டொடி மகளிர்
கேழ லுழுத வருஞ்சே றிளைப்பின்
யாமை யீன்ற புலவுநாறு முட்டை
தேனா றாம்பற் கிழங்கொடு பெறூஉம்
இழுமென வொலிக்கும் புனலம் புதவிற்
பெருமா விலங்கைக் கிழவன் சீறியாழ்
இல்லோர் சொன்மலை நல்லியக் கோடனை
உடையை வாழியெற் புணர்ந்த பாலே
பாரி பறம்பிற் பனிச்சுனைத் தெண்ணீர்
ஓரூ ருண்மையி னிழந்தோர் போலக்
காணாது கழிந்த வைகல் காணா
வழிநாட் கிரங்குமென் னெஞ்சமவன்
கழிமென் சாயல் காண்டொறு நினைந்தே.

(புறம், 176)

1489. நிரப்பாது கொடுக்குஞ் செல்வமு மிலனே
இல்லென மறுக்குஞ் சிறுமையு மிலனே
இறையுறு விழுமந் தாங்கி யமரகத்
திரும்புசுவைக் கொண்ட விழுப்புண்ணோய் தீர்ந்து
மருந்துகொள் மரத்தின் வாள்வடு மயங்கி
வடுவின்றி வடிந்த யாக்கையன் கொடையெதிர்ந்
தீர்ந்தை யோனே பாண்பசிப் பகைஞன்
இன்மை தீர வேண்டி னெம்மொடு
நீயும் வம்மோ முதுவா யிரவல
யாந்தன் னிரக்குங் காலைத் தானெம்
உண்ணா மருங்குல் காட்டித் தன்னூர்க்
கருங்கைக் கொல்லனை யிரக்குந்
திருந்திலை நெடுவேல் வடித்திசி னெனவே.

( ,, 180)

1490. உடைய ளாயி னுண்ணவும் வல்லன்
கடவர் மீது மிரப்போர்க் கீயும்
வடவர் மகிழ்துணை நெடுமா னஞ்சி
இல்லிறைச் செரீஇய ஞெலிகோல் போலத்
தோன்றா திருக்கவும் வல்லன் மற்றதன்
கான்றுபடு கனையெரி போலத்
தோன்றவும் வல்லன்றான் தோன்றுங் காலே.

( ,, 315)

1491. பெ[ா]ருபோர்க் கிரிவ தவனெதிர் [ே]வ[ா]ே[ன], அவனே
தமிழ்ச்சிறு கெண்டை யிமையத்து வைத்து
வடதிசை யாண்ட தென்னவன் கடிகொள
முனிந்த கூற்றத்துப் புருவம் போல
வாங்கிருங் கொழுங்கடை வளைந்த
வேம்பி னிலையவன் சூடும் பூவே.

( ? )

---

**1490.** 3, 1 மடவர்.

1492. சில்செவி யன்னே பெருங்கேள்வி யன்னே
குறுங்கண் ணினனே நெடுங்காட்சி யன்னே
இளைய னாயினு மறிவின்மூத் தனனே
மகளி ரூடினும் பொய்யறி யலனே
கீழோர் கீழ்மை செய்யினுந் தான்றன்
வாய்மை வழுக்க மறுத்த லஞ்சி
மேனெறி படரும் பேரா ளன்னே
ஈண்டுநலந் தருதல் வேண்டிப் பாண்டியர்
பாடுதமிழ் வளர்த்த கூடலின் வடாஅது
பல்குடி துவன்றிய களரியம் பெரும்பதிச்
சால்புமேந் தோன்றிய தாழி காதலின்
மேவலன் பிறர்பிறர்க் கீந்து
தானு முண்ணும் விருந்துண்டு மிகினே.

(ஆசிரிய.)

## அதி. 130. பரிசில்

1493. வளிநடந் தன்ன விரைசெல லிவுளியொடு
கொடிநுடங்கு மிசைய தேரினி ரெனாஅக்
கடல்கண் டன்ன வொண்படைத் தானையொடு
மலைமாறு மலைக்குங் களிற்றினி ரெனாஅ
உருமுடன் றன்ன வுட்குவரு முரசமொடு
செருமேம் படூஉம் வென்றியி ரெனாஅ
மண்கெழு தானை யொண்பூண் வேந்தர்
வெண்குடைச் செல்வம் வியத்தலோ விலமே
எம்மால் வியக்கப் படூஉ மோரே
இடுமுட் படப்பை மறிமேய்ந் தொழிந்த
குறுநறு முஞ்ஞைக் கொழுங்குற் றடகு
புன்புல வரகின் சொன்றியொடு பெறாஉஞ்
சீறூர் மன்ன ராயினு மெம்வயிற்
பாடறிந் தொழுகும் பண்பி னோரே
மிகப்பே ரெவ்வ முறினு மெனைத்தும்
உணர்ச்சி யில்லோ ருடைமை யுள்ளே
நல்லறி வுடையோர் நல்குரவு
உள்ளுதும் பெருமயா முவந்துநனி பெரிதே.

(புறம், 197)

1494. ஒருநாட் செல்லலெ மிருநாட் செல்லலெம்
பன்னா ளடுத்துப் பலரொடு செலினும்
தலைநா ளன்ன பேணலன் மாதோ
இழையணி யானை யியறே ரஞ்சி
[யதியமான் பரிசில் பெறாஉங் காலம்]
நீட்டினும் நீட்டா தாயினுங் களிறுதன்
கோட்டிடை வைத்த கவளம் போலக்

**1492**. 1, 1 சிறுசெவி; 11, 2-3 (ன்) மேற்றோன்றிய; 12, 2-3 பிறா றெ பிறர்க் கீழ்க். **1493**. 1, 3 வாச்செ, விரைச்செ; 2, 1 கொடிநடுங்கு, கொடிநடு; 9, 1 எம்பால்; 12, 1 புன்புன. **1494**. 4, 3-4 யியறேர் வஞ்சி.

கையகத் ததுவே பொய்யா காதே
அருந்தே மாந்த நெஞ்சம்
வருந்தல் வேண்டா வாழ்கவன் றாளே.

(புறம், 101)

1495. கடவு ளாலத்துத் தடவுச்சினைப் பல்பழம்
நெருந லுண்டு மமையாது பின்னுஞ்
செலவா னாவே கலிகொள் புள்ளினம்
அனையர் வாழியோ விரவல ரவரைப்
புரவெதிர் கொள்ளும் பெருஞ்செய் யாடவர்
உடைமை யாகுமவ ருடைமை
இன்மை யாகு மவரின் மையே.

( „ 199)

1496. ஈயென விரத்த லிழிந்தன் றதனெதிர்
ஈயே னென்ற லதனினு மிழிந்தன்று
கொள்ளெனக் கொடுத்த லுயர்ந்தன் றதனெதிர்
கொள்ளே னென்ற லதனினு முயர்ந்தன்று
தெண்ணீர்ப் பரப்பி னிமிழ்திரைப் பெருங்கடல்
உண்ணா ராகுவர் நீர்வேட் டோரே
ஆவு மாவுஞ் சென்றுணக் கலங்கிச்
சேற்றொடு பட்ட சிறுமைத் தாயினும்
உண்ணீர் மருங்கி னதர்பல வாகும்
புள்ளும் பொழுதும் பழிப்பி னல்லதை
உள்ளிச் சென்றோர்ப் பழியல ரதனாற்
புலவேன் வாழிய வோரி விசும்பிற்
கருவி வானம் போல
வரையாது சுரக்கும் வள்ளியோய் நின்னே.

( „ 204)

1497. நல்லவுந் தீயவு மல்ல குவியிணர்ப்
புல்லிலை யெருக்க மாயினு முடையவை
கடவுள் பேணே மென்னா வாங்கு
மடவர் மெல்லியர் செலினுங்
கடவன் பாரி கைவண் மையே.

( „ 106)

1498. நாளன்று போகிப் புள்ளிடை தட்பப்
பதனன்று புக்குத் திறனன்று மொழியினும்
வறிது பெயர்குவ ரல்லர் நெறிகொளப்
பாடான் றிரங்கு மருவிப்
பீடுகெழு மலையற் பாடி யோரே.

( „ 124)

---

**1496.** 2, 2 மென்ற; 3, 1 கொள்கெனக்; 4, 2 மென்ற; 7, 4 கலக்கிச்; 10, 3-4 பழித்த லல்லதை; 12, 3 வொரீஇ; 14, 2 காக்கும். **1498.** 3, 4 வெறிகொளப்.

## அதி. 131. வாழ்த்து

1499. கொடிவிடு முத்தலைவேற் கூற்றக் கணிச்சிக்
கடிவிடு கொன்றையோன் காக்க—நெடிதுலகிற்
பூமலி நாவற் பொழிலகத்துப் போய்நின்ற
மாமலைபோல் மன்னுக நீ.

(வெண்பா. 226)

1500. கண்ணுதலோன் காக்க கடிநேமி யோன்காக்க
எண்ணிருந்தோ ளேந்திழையாள் தான்காக்கப்—பண்ணியனூற்
சென்னியர்க் களிக்குஞ் செல்வனீ
மன்னுக நாளுமிம் மண்மிசை யானே.

(பெரும்பொருள்.)

1501. ஓங்குமலைப் பெருவிற் பாம்புஞாண் கொளீஇ
ஒருகணை கொண்டு மூவெயி லுடற்றிப்
பெருவிற லமரர்க்கு வென்றி தந்த
கறைமிடற் றண்ணல் காமர் சென்னிப்
பிறைநுதல் விளங்கு மொருகண் போல
வேந்துமேம் பட்ட பூந்தார் மாற
கடுஞ்சினத்த கொல்களிறுங் கதழ்பரிய பரிமாவும்
நெடுங்கொடிய நிமிர்தேரும் நெஞ்சுடைய புகல்மறவரு மெனு
நான்குடன் மாண்ட தாயினு மாண்ட
அறநெறி முதற்றே யரசின் கொற்றம்
அதனால், நமரெனக் கோல்கோடாது
பிறரெனக் குணங்கொல்லாது
ஞாயிற் றன்ன வெந்திற லாண்மையுந்
திங்க ளன்ன தண்பெருஞ் சாயலும்
வானத் தன்ன வண்மையு மூன்றும்
உடையை யாதலி னில்லோ ரறநீ
நீடுவா ழியவிவ ணெடுந்தகை தாழ்நீர்
வெண்டலைப் புணரி யலைக்குஞ் செந்தில்
நெடுவேள் நிலைஇய காமர் வியன்றுறைக்
கடுவளி தொகுப்ப வீண்டிய
வடுவா ழெக்கர் மணலினும் பலவே.

(புறம், 55)

1502. நாகத் தன்ன பாகார் மண்டிலந்
தமவே யாயினுந் தம்மொடு செல்லா
வேற்றோ ராயினும் நோற்றோர்க் கொழியும்
ஏற்ற பார்ப்பார்க் கீர்ங்கை நிறையப்
பூவும் பொன்னும் புனல்படச் சொரிந்து
பாசிழை மகளிர் பொலங்கலத் தேந்திய
நாரரி தேறல் தவாது நன்மகிழ்ந்
திரவலர்க் கருங்கல மருகாது வீசி
வாழ்தல் வேண்டுமிவண் வரைந்த வைகல்

---

**1500.** 8 பண்ணியநூற். **1502.** 1, 3 பாகா.

வாழச் செய்த நல்வினை யல்ல
தாழுங் காலைத் துணைபிறி தில்லை
ஒன்றுபுரிந் தடங்கிய விருபிறப் பாளர்
முத்தீப் புரையக் காண்டக விருந்த
கொற்ற நீள்குடைக் கொடித்தேர் வேந்திர்
யானறி யளவையோ விவ்வே வானத்து
வயங்கித் தோன்று மீனினு மிம்மெனப்
பரந்தியங்கு மாமழை யுறையினும்
உயர்ந்துமேந் தோன்றிப் பொலிகநுந் நாளே.

(புறம், 367)

1503. வலம்படு வாய்வா ளேந்தி யொன்னார்
களம்படக் கடந்த கழறொடித் தடக்கை
ஆர்கலி நறவி னதியர் கோமான்
போரடு திருவிற் பொலந்தா ரஞ்சி
பால்புரை பிறைநுதற் பொலிந்த சென்னி
நீல மணிமிடற் றொருவன் போல
மன்னுக பெரும நீயே தொன்னிலைப்
பெருமலை விடரகத் தருமிசைக் கொண்ட
சிறியிலை நெல்லித் தீங்கனி குறியாது
காதல் நின்னகத் தடக்கிச்
சாதல் நீங்க வெமக்கீத் தோயே.

( ,, 91)

1504. ஆவு மானியற் பார்ப்பன மாக்களும்
பெண்டிரும் பிணியுடை யீரும் பேணித்
தென்புல வாழ்நர்க் கருங்கட னிறுக்கும்
பொன்போற் புதல்வர்ப் பெறாஅ தீரும்
எம்மம்பு கடிவிடுதும் நும்மரண் சேர்மினென
அறத்தா றுநுவலும் பூட்கை மறத்திற்
கொல்களிற்று மீமிசைக் கொடிவிசும்பு நிழற்றும்
எங்கோ வாழிய குடுமி தங்கோச்
செந்நீர்ப் பசும்பொன் வயிரியர்க் கீத்த
முந்நீர் விழவி னெடியோன்
நன்னீர்ப் பஃறுளி மணலினும் பலவே.

( ,, 9)

1505. பார்ப்பார்க் கல்லது பணிபறி யலையே
பணியா வுள்ளமொ டணிவரக் கெழீஇ
நட்டோர்க் கல்லது கண்ணஞ் சலையே
வணங்குசிலை பொருதநின் மணங்கம ழகலம்
மகளிர்க் கல்லது மலைப்பறி யலையே
நிலந்திறம் பெயருங் காலை யாயினும்
கிளந்த சொன்னீ பொய்ப்பறி யலையே

---

**1503.** 1, 1 வளம்படு; 11, 3 வெனக்கியாத். **1505.** 2, 3 டனிவரக்; 10, 1 குன்றினிலை; 15, 1-4 நுன்னுங் கொண்டினுங் கொண்டி நுவன்றேய்.

சிறியிலை யுழிஞைத் தெரியல் சூடிக்
கொண்டமை மிகைபடத் தண்டமிழ் செறித்துக்
குன்றுநிலை தளர்க்கு முருமிற் சீறி
ஒருமுற் றிருவ ரோட்டிய வொள்வாட்
செருமிகு தானை வெல்போ ரோயே
ஆடுபெற் றழிந்த மள்ளர் மாறி
நீகண் டனையே மென்றனர் நீயும்
நுந்நுகங் கொண்டினும் வென்றோ யதனாற்
செல்வக் கோவே சேரலர் மருக
கனந்தலை யெடுத்த முழங்குகடல் வேலி
நனந்தலை யுலகஞ் செய்தநன் றுண்டெனின்
அடையெடுப் பறியா வருவி யாம்பல்
ஆயிர வெள்ள வூழி
வாழி யாத வாழிய பலவே.

(பதிற்று. 63)

பொருட்பால் முற்றும்.

# காமத்துப் பால்*

## அதி. 132. கைக்கிளை

1506. செய்யா ரெனினுந் தமர்செய்வ ரென்னுஞ்சொல்
மெய்யாதல் கண்டேன் விளங்கிழாய்—கையார்
வரிவளை நின்றன வையையார் கோமான்
புரிவளை போர்ந்தியம்பக் கேட்டு.

(முத்தொள்.)

1507. திறந்திடுமின் தீயவை பிற்காண்டு மாதர்
இறந்து படிற்பெரிதா மேதம்—உறந்தையர்கோன்
தண்ணார மார்பிற் றமிழ்நர் பெருமானைக்
கண்ணாரக் காணக் கதவு.

( ,, )

1508. தாய ரடைப்ப மகளிர் திறந்திடத்
தேயத் திரிந்த குடுமியவே—யாய்மலர்
வண்டுலாஅங் கண்ணி வயமான்றேர்க் கோதையைக்
கண்டுலாஅம் வீதிக் கதவு.

( ,, )

1509. காப்படங்கென் றன்னை கடிமனை யிற்செறித்
தியாப்படங்க வோடி யடைத்தபின்—மாக்கடுங்கோன்
நன்னலங் காணக் கதவந் துளைதொட்டார்க்
கென்னைகொல் கைம்மா றினி.

( ,, )

1510. துடியடித் தோற்செவித் தூங்குகைந் நால்வாய்ப்
பிடியேயா னின்னை யிரப்பல்—கடிகமழ்தார்ச்
சேலேக வண்ணனொடு சேரி புகுதலுமெஞ்
சாலேகஞ் சார நட.

( ,, )

1511. எலாஅ மடப்பிடியே யெங்கூடற் கோமான்
புலாஅ னெடுநல்வேல் மாறன்—உலாஅங்காற்
பைய நடக்கவுந் தேற்றாயா னின்பெண்மை
ஐயப் படுவ துடைத்து.

( ,, )

1512. நீணீலத் தார்வளவ னின்மேலா னாகவு
நாணின்மை யின்றி நடத்தியால்—நீணீலங்
கண்டன்ன கொண்டல் வருங்கா விரிநாட்டுப்
பெண்டன்மை யில்லை பிடி.

( ,, )

---

* இப்பகுதி புறத்திரட்டுச் சுருக்கப் பிரதிகளில் மட்டும் உள்ளது.

**1506.** 11 வையத்தார். **1508.** 9 வண்டுலாங்; 13 கண்டுலாம். **1509.** 2 றென்னை. **1510.** 7 யிரப்பன்; 12 புகுதலுமே. **1512.** 1 நீணிலத்; 5 நாணிமை; 9-12 கண்டன்மை கொண்டலருங் காவிரி நீர்நாட்டுப்.

1513. சுடரிலைவேற் சோழன்றன் பாடல மேறிப்
படர்தந்தான் பைந்தொடியார் காணத்—தொடர்புடைய
நீல வலையிற் கயல்போற் பிறழுமே
சாலேக வாயிறொறுங் கண்.

(முத்தொள்.)

1514. போரகத்துப் பாயுமா பாயா துபாயமா
ஊரகத்து மெல்ல நடவாயோ—கூர்வேல்
மதிவெங் களியானை மாறன்றன் மார்பங்
கதவங்கொண் டியாமுந் தொழ.

( ,, )

1515. ஆடுகோ சூடுகோ வைதாக் கலந்துகொண்
டேடுகோ டாக வெழுதுகோ—நீடு
புனவட்டப் பூந்தெரியற் பொற்றேர் வழுதி
கனவட்டங் கால்குடைந்த நீறு.

( ,, )

1516. குடத்து விளக்கேபோற் கொம்பன்னார் காமம்
புறப்படா பூந்தார் வழுதி—புறப்படின்
ஆபுகு மாலை யணிமலையிற் றீயேபோல்
நாடறி கௌவை தரும்.

( ,, )

1517. வரைபொரு நீண்மார்பின் வட்கார் வணக்கு
நிரைபொரு வேன்மாந்தைக் கோவே—நிரைவளையார்
தங்கோலம் வெளவுத லாமோ வவர்தாய்மார்
செங்கோல னல்ல னென.

( ,, )

1518. வாமான்றேர்க் கோதையை மான்றேர்மேற் கண்டவர்
மாமையே யன்றோ விழப்பது—மாமையிற்
பன்னூறு கோடி யுருதோவென் மேனியிற்
பொன்னூறி யன்ன பசப்பு.

( ,, )

1519. வழுவிலெம் வீதியுள் மாறன் வருங்கால்
தொழுதேனைத் தோணலமுங் கொண்டான்—இமிழ்திரைக்
கார்க்கடற் கொற்கையார் காவலனுந் தானேயால்
யார்க்கிடுகோ பூச லினி.

( ,, )

1520. கண்டன வுண்கண் கலந்தன நன்னெஞ்சந்
தண்டப் படுவ தடமென்றோள்—கண்டா
யுலாஅ மறுகி லுறையூர் வளவற்
கெலாஅ முறைகிடந்த வாறு.

( ,, )

1521. மன்னுயிர் காவல் தனதான வவ்வுயிருள்
என்னுயிரு மெண்ணப் படுமாயின்—என்னுயிர்க்கே

---

**1514.** 3-4 பாயாது பாயுமா. **1517.** 3 வாரார். **1518.** 11 பழுதோ வென். **1521.** 4 விவ்வுயிருள்.

சீரொழுகு செங்கோற் செழியற்கே தக்கதோ
நீரொழுகப் பாலொழுகா வாறு.

(முத்தொள்.)

1522. என்னெஞ்சு நாணு நலனு மிவையெல்லா
மன்னன் புனனாடன் வௌவினான்—என்னே
அரவக லல்குலா யாறிலொன் றன்றோ
புரவலர் கொள்ளும் பொருள்.

( ,, )

1523. தானேற் றணிக்குடைக் காவலனாற் காப்பதுவும்
வானேற்ற வையக மெல்லாமால்—யானோ
எளியேனோர் பெண்பாலே னீர்ந்தண்டார் மாறன்
அளியானே லன்றென்பா ரார்.

( ,, )

1524. கனவினுள் காண்கொடா கண்ணுங் கலந்த
நனவினுள் முன்விலக்கு நாணும்—இனவங்கம்
பொங்கோதம் போழும் புகாஅர்ப் பெருமானார்
செங்கோல் வடுப்படுப்பச் சென்று.

( ,, )

1525. தானைகொண் டோடுவ தாயிற்றன் செங்கோன்மை
சேனை யறியக் கிளவேனோ—யானை
பிடிவீசும் வண்டடக்கைப் பெய்தண்டார்க் கிள்ளி
நெடுவீதி நேர்பட்ட போது.

( ,, )

1526. தெண்ணீர் நறுமலர்த்தார்ச் சென்னி யிளவளவன்
மண்ணகங் காவலனே யென்பரால்—மண்ணகங்
காவலனே யானக்காற் காவானோ மாலைவாய்க்
கோவலர்வாய் வைத்த குழல்.

( ,, )

1527. அறைபறை யானை யலங்குதார்க் கிள்ளி
முறைசெயு மென்பராற் றோழி—இறையிறந்த
அங்கோ லணிவளையே சொல்லாதோ மற்றவன்
செங்கோன்மை செந்நின்ற வாறு.

( ,, )

1528. களியானைத் தென்னன் கனவின்வந் தென்னை
யளியா னளிப்பானே போன்றான்—தெளியாதே
செங்காந்தள் மெல்விரலாற் சேக்கை தடவந்தேன்
என்காண்பே னென்னலால் யான்.

( ,, )

1529. கார்நறு நீலங் கடிக்கயத்து வைகலும்
நீர்நிலை நின்ற தவங்கொலோ—கூர்நுனைவேல்
வண்டிருக்க நக்கதார் வாமான் வழுதியாற்
கொண்டிருக்கப் பெற்ற குணம்.

( ,, )

---

**1523.** 9 எளியதனோர்; 13 அளியனே. **1524.** 2 காண்டொறும். **1525.** 2 டோடுமெ. **1529.** 3 கடியகத்து; 10 நக்காதார்; 13 கொண்டிருக்கிற்.

1530. அறிவாரார் யாமொருநாள் பெண்டிரே மாகச்
செறிவார் தலைமேல் நடந்து—மறிதிரை
மாட முரிஞ்சு மதுரையார் கோமானைக்
கூட வொருநாள் பெற.

(முந்தோள்.)

1531. அன்னையுங் கோல்கொண் டலைக்கு மயலாரும்
என்னை யழியுஞ்சொற் சொல்லுவர்—நுண்ணிலைய
தெங்குண்ட தேரை படுவழிப் பட்டேன்யான்
திண்டேர் வளவன் றிறத்து.

( ,, )

1532. நீரு நிழலும்போல் நீண்ட வருளுடைய
ஊரிரே யென்னை யுயக்கொண்மின்—போரிற்
புகலுங் களியானைப் பூழியர்கோக் கோதைக்
கழலுமென் னெஞ்சங் கிடந்து.

( ,, )

1533. புலவி புறக்கொடுப்பன் புல்லிடி னிற்பன்
கலவி களிமயங்கிக் காணேன்—நிலவியசீர்
மண்ணாளுஞ் செங்கோல் வளவனை யானிதன்றே
கண்ணாரக் கண்டறியா வாறு.

( ,, )

1534. கைய தவன்கடலுட் சங்கமாற் பூண்டதுவுஞ்
செய்யசங் கீன்ற செழுமுத்தால்—மெய்யதுவு
மன்பொரு வேன்மாறன் வார்பொதியிற் சந்தனமால்
என்பெறு வாடுமென் றோள்.

( ,, )

1535. நாணுக்காற் பெண்மை நலனழியு முன்னின்று
காணுக்காற் கைவளையுஞ் சோருமால்—காணேனுன்
வண்டெவ்வந் தீர்தார் வயமான் வழுதியைக்
கண்டெவ்வந் தீர்வதோ றாறு.

( ,, )

1536. வாரிய பெண்ணை வருகுரும்பை வாய்த்தனபோல்
ஏரிய வாயினு மென்செய்யும்—கூரிய
கோட்டானைத் தென்னன் குளிர்சாந் தணியகலங்
கோட்டுமண் கொள்ளா முலை.

( ,, )

1537. ஏற்பக் குடைந்தாடி லேசுவ ரல்லாக்கால்
மாற்றி யிருந்தா ளெனவுரைப்பர்—வேற்கண்ணாய்
கொல்யானை மாறன் குளிர்புனல் வையைநீ
ரெல்லா மெனக்கோ ரிடர்.

( ,, )

---

**1530**. 2 யாருமொருநாள். **1532**. 13 கனலுமென். **1534**. 9-10 மன்பொருவேன் மாறன்றன். **1536**. 1 வாருயர்; 3 வருகுருப்பை; 4 வாய்ந்தனபோல்.

1538. கூடற் பெருமானைக் கூடலார் கோமானைக்
கூடப் பெறுவேனேற் கூடென்று—கூட
லிழைப்பாள்போற் காட்டி யிழையா திருக்கும்
பிழைப்பிற் பிழைபாக் கறிந்து.

(முத்தொள்.)

1539. செங்கால் மடநாராய் தென்னுறந்தை சேறியேல்
நின்கால்மேல் வைப்பெனென் கையிரண்டும்—நன்பாற்
கரையுரிஞ்சி மீன்பிறழுங் காவிரிநீர் நாடற்
குரையாயோ யானுற்ற நோய்.

( ,, )

1540. என்னை யுரையலென் பேருரைய லூருரையல்
அன்னையு மின்ன ளெனவுரையல்—பின்னையுந்
தண்படா யானைத் தமிழ்நர் பெருமாற்கென்
கண்படா வாறே யுரை.

( ,, )

1541. கடற்றானைக் கோதையைக் காண்கொடாள் வீணில்
அடைத்தாள் தனிக்கதவ மன்னை—யடைக்குமேல்
ஆயிழையா யென்னை யவன்மே லெடுத்துரைப்பார்
வாயு மடைக்குமோ தான்.

( ,, )

1542. வளையவாய் நீண்டதோள் வாட்கண்ணு யன்னை
இளையளாய் மூத்திலள் கொல்லோ—தளையவிழ்தார்
மண்கொண்ட தானை மறங்கனல்வேல் மாறனைக்
கண்கொண்டு நோக்கலென் பாள்.

( ,, )

1543. கொடிபாடித் தேர்பாடிக் கொய்தண்டார் மாறன்
முடிபாடி முத்தாரம் பாடித்—தொடியுலக்கை
கைம்மனையி லோச்சப் பெறுவெனோ யானுமோர்
அம்மனைக் காவ லுளேன்.

( ,, )

1544. குதலைப் பருவத்தே கோழிக்கோ மானை
வதுவை பெறுகென்று ளன்னை—அதுபோய்
விளைந்தவா வின்று வியன்கானல் வெண்டேர்த்
துளங்குநீர் மாமருட்டி யற்று.

( ,, )

1545. அலங்குதார்ச் செம்பிய ளுடெழிற்றோ ளுக்கி
விலங்கியான் வேண்டா வெனினு—நலந்தொலைந்து
பீர்மேற் கொளலுற்ற பேதையர்க் கென்வாய்ச்சொல்
நீர்மே லெழுந்த நெருப்பு.

( ,, )

---

1538. 3 கூடலர்; 14 பிழைப்பாற். 1539. 3 தென்னுறந்தைச். 1540. 8 பின்னையக். 1541. 3 காண்கொட்டாள். 1542. 12 மாறனைத் தன். 1543. 4 மார்பன். 1544. 14 மான்மருட்டி. 1545. 11 பேதையார்க்.

1546. கோட்டெங்கு சூழ்கூடற் கோமானைக் கூடவென
வேட்டாங்குச் சென்றவென் னெஞ்சறியாள்—கூட்டே
குறும்பூழ் பறப்பித்த வேட்டுவன்போ லன்னை
வெறுங்கூடு காவல்கொண் டாள்.

(முத்தொள்.)

1547. புன்னாகச் சோலை புனற்றெங்கு சூழ்மாந்தை
நன்னாக நின்றலரு நன்னாடன்—என்னாகங்
கங்கு லொருநாட் கனவினுள் தைவந்தான்
என்கொ லிவரறிந்த வாறு.

( ,, )

1548. களியானைத் தென்ன னிளங்கோவென் றெள்ளிப்
பணியாரே தம்பா ரிழக்க—அணியாகங்
கைதொழு தேனு மிழக்கோ நறுமாவின்
கொய்தளி ரன்ன நிறம்.

( ,, )

1549. கனவை நனவென் றெதிர்விழிக்குங் காணு
நனவி லெதிர்விழிக்க நாணும்—புனையிழாய்
என்க ணிவையாறு லெவ்வாறோ மாமாறன்
தன்க ணருள்பெறுமா தான்.

( ,, )

1550. தளையவிழும் பூங்கோதைத் தாயரே யாவி
களையினுமென் கைதிறந்து காட்டேன்—வளைகொடுபோம்
வன்கண்ணன் வாண்மாறன் மால்யானை தன்னுடன்வந்
தென்கண் புகுந்தா னிரா.

( ,, )

1551. ஓராற்றா னென்க ணிமைபொருந்த வந்நிலையே
கூரார்வேன் மாறனென் கைப்பற்ற—வாரா
நனவென் றெழுந்திருந்தே னல்வினையொன் றில்லேன்
கனவு மிழந்திருந்த வாறு.

( ,, )

1552. ஊட லெனவொன்று தோன்றி யலருறாஉங்
கூட லிழந்தேன் கொடியன்னாய்—நீடெங்கின்
பாளையிற் றேன்றொடுக்கும் பாய்புன னீர்நாட்டுக்
காளையைக் கண்படையுட் பெற்று.

( ,, )

1553. ஆய்மணிப் பைம்பூ ணலங்குதார்க் கோதையைக்
காணிய சென்று கதவடைத்தே—நாணிப்
பெருஞ்செல்வ ரில்லத்து நல்கூர்ந்தார் போல
வருஞ்செல்லும் பேருமென் னெஞ்சு.

( ,, )

---

1546. 2 சூழ்மாந்தைக். 1551. 10-11 றெழுந்தே னலவினையொன்.
1552. 12 னீர்நாட. 1553. 7 கதவடைத்தேன்.

1554. நாணொருபால் வாங்க நலனொருபா லுண்ணெகிழ்ப்பக்
காமருதோட் கிள்ளிக்கென் கண்கவற்ற—யாமத்
திருதலைக் கொள்ளியி னுள்ளெறும்பு போலத்
திரிதரும் பேருமென் னெஞ்சு.

(முத்தொள்.)

1555. வரக்கண்டு நாணாதே வல்லையா னெஞ்சே
மரக்கண்ணோ மண்ணாள்வார் கண்ணென்—றிரக்கண்டாய்
வாளுழுவை வெல்கொடியான் வண்புனனீர் நாடற்கென்
தோளழுவந் தோன்றத் தொழுது.

( ,, )

1556. உகுவாய் நிலத்த துயர்மணன்மே லேறி
நகுவாய்முத் தீன்றசைந்த சங்கம்—புகுவான்
திரைவரவு பார்த்திருக்குந் தென்கொற்கைக் கோமான்
உரைவரவு பார்த்திருக்கு நெஞ்சு.

( ,, )

1557. கடும்பனித் திங்கட்டன் கைபோர்வை யாக
நெடுங்கடை நின்றதுகொல் தோழி—நெடுஞ்சினவேல்
ஆய்மணிப் பைம்பூ ணலங்குதார்க் கோதையைக்
காணிய சென்றவென் னெஞ்சு.

( ,, )

1558. மாறடுபோர் மன்னர் மதிக்குடையுஞ் செங்கோலுங்
கூறிடுவாய் நீயோ குளிர்வாடாய்—சோறடுவார்
ஆரத்தாற் றீமூட்டு மம்பொதியிற் கோமாற்கென்
வாரத்தாற் றோற்றேன் வளை.

( ,, )

1559. புகுவார்க் கிடங்கொடா போதுவார்க் கொல்கா
நகுவாரை நாணி மறையா—இகுகரையின்
ஏமான் பிணைபோல நின்றதே கூடலார்
கோமான்பின் சென்றவென் னெஞ்சு.

( ,, )

1560. பிணிகிடந் தார்க்குப் பிறந்தநாட் போல
அணியிழை யஞ்ச வருமால்—மணியானை
மாறன் வழுதி மணவா மருண்மாலைச்
சீறியோர் வாடை சினந்து.

( ,, )

1561. பேயோ பெருந்தண் பனிவாடாய் பெண்பிறந்தா
ரேயோ வுனக்கிங் கிறைக்குடிகள்—நீயோ
களிபடுமால் யானைக் கடுமான்றேர்க் கிள்ளி
யளியிடை யற்றம்பார்ப் பாய்.

( ,, )

---

**1559.** 8 - 9 [illegible]

1562. நாம நெடுவேல் நலங்கிள்ளி சோணாட்டுத்
தாமரையு நீலமுந் தைவந்—தியாமத்து
வண்டொன்று வந்தது வாரல் பனிவாடாய்
பண்டன்று பட்டினங் காப்பு.

(முத்தொள்.)

1563. மாணார்க் கடந்த மறவெம்போர் மாறனைக்
காணக்கா லாயிரமுஞ் சொல்லுவேன் கண்டக்காற்
பூணாகந் தாவென்று புல்லப் பெறுவேனோ
நாணோ டுடன்பிறந்த நான்.

( ,, )

1564. வருக குடநாடன் வஞ்சிக்கோ மானென்
றருகல ரெல்லா மறிய—வொருகலாம்
உண்டா யிருக்கவவ் வொண்டொடியாள் மற்றவனைக்
கண்டா ளொழிந்தாள் கலாம்.

( ,, )

1565. புல்லாதார் வல்லே புலர்கென்பர் புல்லினார்
நில்லா யிரவே நெடிதென்பர்—நல்ல
விராமலர்த் தார்மாறன் வெண்சாந் தகலம்
இராவளிப் பட்ட திது.

( ,, )

1566. இப்பியீன் றிட்ட வெறிகதிர் நித்திலங்
கொற்கையே யல்ல படுவது—கொற்கைக்
குருதிவேல் மாறன் குளிர்சாந் தகலங்
கருதியார் கண்ணும் படும்.

( ,, )

1567. இவனென் னலங்கவர்ந்த கள்வ னிவனெனது
நெஞ்ச நிறையழித்த கள்வனென்—றஞ்சொலாய்
செல்லு நெறியெலாஞ் சேரலர்கோக் கோதைக்குச்
சொல்லும் பழியோ பெரிது.

( ,, )

1568. காராட் டுதிரந் தூஉ யன்னை களனிழைத்து
நீராட்டி நீங்கென்றால் நீங்குமோ—போராட்டு
வென்று களங்கொண்ட வெஞ்சினவேற் கோதைக்கென்
நெஞ்சங் களங்கொண்ட நோய்.

( ,, )

1569. யானாடத் தானுணர்த்த யானுணரா விட்டதற்பின்
தானாட யானுணர்த்தத் தானுணரான்—தேனாறு
கொய்தார் வழுதி குளிர்சாந் தணியகலம்
எய்தா திராக்கழிந்த வாறு.

( ,, )

---

**1562.** 12 பனிவாடை. **1565.** 9 விராஅமலர்த்; 13 இராவளியப்.
**1568.** 5 நீராடி.

1570. மல்லனீர் மாந்தையார் மாக்கடுங்கோக் காயினுஞ்
சொல்லவே வேண்டு நமகுறை—நல்ல
திலகங் கிடந்த திருநுதலா யஃதால்
உலகங் கிடந்த வியல்பு.*

(முத்தொள்.)

முற்றிற்று.

---

**1570.** 7 நமது குறை. *இதன்பின் கீழ்வரும் திருக்குறளதிகாரங்களும் அடுத்துக் குறித்துள்ள எண்களுக்குரிய குறள்களும் காணப்படுகின்றன:

தகையணங்குறுத்தல், 10; குறிப்பறிதல், 9; புணர்ச்சிமகிழ்தல், 8; நலம்புனைந்துரைத்தல், 10; காதற் சிறப்புரைத்தல், 2; நாணுத்துறவுரைத்தல், 1; அலரறிவுறுத்தல், 4; பிரிவாற்றாமை, 4; படர்மெலிந்திரங்கல், 2; கண் விதுப்பழிதல், 6; பசப்புறு பருவரல், 3; தனிப்படர்மிகுதி, 6; நினைந்தவர் புலம்பல், 5; கனவுநிலை யுரைத்தல், 8; பொழுது கண்டிரங்கல், 7; உறுப்பு நலனழிதல், 2; நெஞ்சொடு கிளத்தல், 7; நிறையழிதல், 8; அவர்வயின் விதும்பல், 1; குறிப்பறி வுறுத்தல், 4; புணர்ச்சி விதும்பல், 2; நெஞ்சொடு புலத்தல், 3; புலவி, 4; புலவிநுணுக்கம், 7; ஊடலுவகை, 7.

## A NOTE ON CILAPPADIKĀRAM

By

V. Narayanan, M.A., M.L.,
(*Assistant Editor, Tamil Lexicon.*)

Naccinārkkiniyar makes a statement that Cilappadikāram belongs to a class of works known as Tonmai. From this, the inference is drawn that Iḷangōvaḍigal, the author of this 'Epic of the Anklet', was *not* a contemporary of the events narrated by him. The introductory section of the epic which seems to be opposed to this conclusion is explained as embodying merely a poetic convention.

## VAYIRAMĒGHA VIRUTTI

By

M. Raghava Iyengar,
(*Chief Tamil Pandit, Tamil Lexicon Office.*)

The commentator of Takkayāgap-paraṇi mentions an unknown grammatical work, Vayiramēgha-virutti by name. It is suggested that this virutti is none other than the existing commentary on Nēminātham.

# SANKARANĀRAYANA AVADĀNI

By

S. Somasundara Desikar,
*(Tamil Pandit, Tamil Lexicon Office.)*

Sankaranārayana Avadāni was the son of Chokkanatha Pillai of Madura, author of Madurai Mummaṇi-k-kōvai and Tēvai-y-ulā. He lived about 1753 A.D. and wrote a purāṇam, known as Tiruttaḷi-y-āṇḍa Nāyanār Purānam on Tiruppattūr.

# ELLAI : AN ELEMENT IN CIRAPPU-P-PĀYIRAM

By

Vidvan V. Venkatarajulu Reddiar,
*(Junior Lecturer in Tamil, O. R. Institute.)*

According to Tamil grammarians, every introduction should specify particulars of eight kinds. ' Ellai ' is one of them. This term is defined by the ancient commentators as the region where the work would be in use, i.e., as indicating its territorial jurisdiction. This article suggests another interpretation of the term, viz., that it denotes simply the extent (i.e., length, number of sections, etc.) of a work.

# சிலப்பதிகாரம் பற்றிய ஓர் குறிப்பு

தொல்காப்பியச் செய்யுளியலுக்கு நச்சினார்க்கினியர் இயற்றிய உரையிலே "தொன்மையாவது உரை விராஅய்ப் பழமையாகிய கதை பொருளாகச் செய்யப் படுவன" என்று சூத்திரப் பொருள் கூறியபின், "அவை பெருந்தேவனார் செய்த பாரதமும் தகடூர் யாத்திரையும் போல்வன ; சிலப்பதிகாரமும் அதன்பாற் படும்" என்றுள்ளது. மஹாமஹோபாத்தியாய டாக்டர் வே. சாமிநாதையரவர்களும் தமது சிலப்பதிகாரப் பதிப்புக்களின் முகவுரைகளிலே இவ்வுரைப்பகுதியை எடுத்தெழுதியுள்ளார்கள். எனவே, இவ்வுரைப் பகுதியின் உண்மையைப் பற்றிய ஐயப்பாடு சிறிதும் இல்லை.

இதனால், நச்சினார்க்கினியர் சிலப்பதிகாரத்தைப் "புதிதாகத் தொடுக்கப்படுந் தொடர்நிலைச் செய்யுளான" விருந்து என்று கொள்ளாது பழமையாகிய கதையைப் பொருளாகக் கொண்டு கதை நிகழ்ந்த காலத்துக்குப் பிற்பட்ட காலத்துப் புலவரொருவர் இயற்றிய தொன்மை நூலாகக் கொண்டார் என்பது தெளிவாகின்றது.

ஆயின், சிலப்பதிகாரப் பதிகத்திலே, அந்நூலியற்றிய இளங்கோவடிகள் கதை நிகழ்ந்த காலத்தில் வாழ்ந்தவர் என்று பொருள் படும் பாகங்களை நச்சினார்க்கினியர் உண்மையுரையாகக் கொள்ளவில்லை என்பது தெளிவு.

காவியங்களின் பாயிரங்களிலும் பதிகங்களிலும் காணப்படும் விஷயங்கள் எல்லாம் உண்மையாகக் கொள்வதற்கு இல்லை. கவிகளைக் காவியக்கதை நடந்த காலத்தில் வாழ்ந்தவராகச் சிறப்பித்துக் கூறுதலும் பழைய வழக்குப் போலும். ஸ்ரீமத் வால்மீகி ராமாயணமும் இவ்வாறே வால்மீகி முனிவரை ஸ்ரீராமரின் காலத்தவராகக் குறிப்பிடும் பாயிரத்தோடும் பதிகத்தோடுந் தொடங்குவதைக் காணலாம். சிலப்பதிகாரப்பதிகமும் இவ்வகைத்து என்னும் அனுமானத்தை நச்சினார்க்கினியரின் உரைப்பகுதியானது திடப்படுத்துகின்றது.

சரித்திரவாராய்ச்சி முறையிலே சிலப்பதிகாரத்தைப் பயன் படுத்துவோருக்கு இவ்வுரைப்பகுதியை அறிவிப்பதே இச் சிறு குறிப்பின் கருத்து.

வே. நாராயணையர்

